

ஸ்ரீ ராமஜெயம்.

திவான்பகதூர்

# பி. எஸ். ஜி. அரங்கசாமி நாயுடு

# நினைவு மலர்

ஆசிரியர் குழு:

கே. வெங்கடாச

இ. வெங்கடேச

சி. நாராயணசா



1948

சர்வசனப்பள்ளிப் பழைய மாணவர் சார்பாக

பி. எஸ். ஜி. அரங்கசாமி நாயுடு ஞாபகார்த்த நிதிக் கமிட்டியாரால்

வெளியிடப்பட்டது.

திவான்பஹதூர்





பூ. சா. கோ. அரங்கசாமி நாயுடு

# பொருளடக்கம்

# முகப்புச்சொல்

இப்பணியை ஏற்றுக்கொண்ட எங்களுக்குக் கவலை சிறிதேனும் ஏற்படவில்லை. அதற்குக் காரணம் ஒரே ஒரு தைரியம். திருவாளர் பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு அவர்களின் ஞாபகார்த்தமாகக் கட்டுரைகளோ கவிதைகளோ, குறிப்புகளோ கிடைப்பதா அரிது ? அவ்வளவு சாதாரண மனிதராகவா அவர் இவ்வுலகத்தில் இருந்தார் ? அப்படி அசாதாரணமான தோர் மனிதராக அவர் இருந்தாரென்றால், அது அவர் சம்பாதித்த பணம் அல்லது செல்வத்தினால் மட்டுமா ஏற்பட்டது ?

இல்லவே இல்லை. எத்தனையோ பணக்காரர்கள் இருக்கிறார்கள். இறக்கவும் செய்கிறார்கள். ஆனால் அவர்கள் இருப்பதும் தெரிவதில்லை. இறப்பதும் தெரிவதில்லை. நாயக்கரவர்கள் இருந்ததும் வெளிச்சம். இறந்ததும் வெளிச்சம்.

இதற்கெல்லாம் காரணமாக இருந்தவை, அவர் வாழ்க்கையில் மன தேந்திய பெரிய இலக்குகள்; வளர்த்த பான்மைகள்; கைக்கொண்ட கொள்கைகள்; மேற்கொண்ட ஆலோசனைகள்; ஏற்றுக்கொண்ட சிரமங்கள்; செய்த முயற்சிகள்; இவை அனைத்திற்கும் மேலாக அவருக்கு இயல்பாக வாய்த்த திடசித்தம்.

இதற்குச் சான்று அவர் தம் வாழ்க்கையில் சாதித்துள்ள காரியங்களே. ஆகையால்தான் அவர் சிறப்புடன் இருந்தார் என்று சொல்லுகிறோம்.

ஒருவர் இறந்தாராகில் அவருடைய நோக்கங்களையும், வாக்குகளையும், விருப்பங்களையும் நிறைவேற்றுவதற்குத் தகுந்த புதல்வர் இருப்பாராகில், அதுவே அவர் சிறப்புடன் இறந்தார் என்பதற்குச் சான்று.

இத்தகைய வாய்ப்புடையவர் திருவாளர் பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு அவர்கள். திரு. ஜி. ஆர். தாமோதரம் சகோதரர்களும், திரு. பி. எஸ். ஜி. சகோதரர்களும், அவருடைய விருப்பங்களையும் வாக்குகளையும் தர்ம கைங்கர்யங்களின் மூலமாக நிறைவேற்றிவைக்கும் போக்கும் பான்மையும் கொண்டுள்ளார்கள் என்று பாராட்டுவதற்கு இது சமயமல்ல. ஆனால் திருவாளர்

பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு அவர்கள் சிறப்பாக மறைந்தார் என்பதற்குச் சான்று அவருடைய புதல்வர்களும் சகோதரர்களுமேயாவர் என்பதை இங்கு குறிப்பிட்டுத்தான் தீரவேண்டும்.

ஆகவே சிறப்புடன் இருந்து, சிறப்புடன் இறந்த திரு. பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு அவர்களைப்பற்றிய நினைவு மலர் ஒன்றை வெளியிடவேண்டும் எனப் பழைய மாணவர் சங்கம் செய்த தீர்மானம் மிகவும் பொருத்தமானது. அத் தீர்மானத்தின்படி இம் மலரை வெளியிடத் துணையாக விருந்த கட்டுரை யாளர்களுக்கும், கவி புனைந்தோர்க்கும், இம் மலரைத் தயாரிக்க உதவிய மற்றையோருக்கும், படங்கள் தந்துதவியோருக்கும், எங்கள் நன்றி உரித்து ஆகுக. பழைய மாணவர் சங்கத்தின் சார்பாகவும், எங்கள் சொந்த பூர்வமாகவும், இம் மலரைச் சமர்ப்பணம் செய்கின்றோம்.

ஆனல் யாருக்குச் சமர்ப்பணம் செய்வது? இறந்த தந்தையின் சிறந்த புதல்வர்களான திரு. ஜி. ஆர். தாமோதரம் சகோதரர்களுக்கும், மறைந்த பெரியாரின் உடன் பிறந்தாரான, திருவாளர்கள் பி. எஸ். ஜி. வெங்கிடசாமி நாயுடு, பி. எஸ். ஜி. கங்கா நாயுடு அவர்களுக்கும், இம் மலரைச் சமர்ப்பிக்கின்றோம்.

இங்ஙனம் சமர்ப்பிக்குங்கால், அவர்கள் அனைவரும் நாயக்கர் அவர் களின் பிரிவாற்றுமையால் இதுவரை கொண்டிருந்த துயரம் நீங்கி, பெருமை கொள்வார்கள் என நம்புகின்றோம்.

அன்னரின் துயரத்தில் இதுவரை எங்களுக்கிருந்த பங்கு, அவர்கள் பெருமையிலும் உண்டு. இத்தகைய பணியாற்றுமாறு எங்களுக்கு உரிமை தந்து ஊக்குவித்த, 'பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு ஞாபகார்த்தக் கமிட்டி' யாருக்கு எங்கள் வந்தனம் உரித்தாகுக.

இம் மலரைச் சிறந்த முறையில் அச்சிட்டுத் தந்துதவிய பி. எஸ். ஜி. அச்சகத்தாருக்கு எங்கள் நன்றி.

பூளைமேடு,
30—3—1948.

**கு. வெங்கடாசலம்,**
**இ. வெங்கடேசலு,**
**சி. நாராயணசாமி.**

# திரு. பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு

## ஞாபகார்த்த நிதிக் கமிட்டி.



**தலைவர்:**

திரு. கே. கிருஷ்ணசாமி நாயுடு,
*மானேஜிங் ஏஜண்ட், ஜனார்த்தன மில்ஸ் லிமிடெட்.*

**உப தலைவர்:**

திரு. ஜி. கே. தேவராஜுலு நாயுடு,
*மானேஜிங் ஏஜண்ட், லக்ஷிமி மில்ஸ் லிமிடெட்.*

**காரியதரிசிகள்:**

டாக்டர் என். ஆர். நாராயணசாமி நாயுடு, கோவை.
திரு. இ. வெங்கடேசலு, *சர்வஜன உயர்பள்ளி.*

**நிதிக்காப்பாளர்:**

திரு. ஜி. கிருஷ்ணன், *மானேஜர்,*
*சி. எஸ். அண்ட் டபிள்யு மில்ஸ் லிமிடெட்.*

**அங்கத்தினர்கள்:**

திரு. ஆர். வெங்கடசாமி நாயுடு, *மானேஜர், ராதாகிருஷ்ண மில்ஸ் லிமிடெட்.*
,, எல். ராமசாமி நாயுடு, *மானேஜர், கமலா மில்ஸ் லிமிடெட்.*
,, ஜி. வி. துரைசாமி நாயுடு, *ஜெனரல் மானேஜர், குமரன், பயனீர், ரங்கவிலாஸ், பாலசுப்ரமணியா மில்ஸ்.*
,, கே. வெங்கடாசலம், *ராமகிருஷ்ண வித்யாலயம்.*
,, எஸ். ஆர். சுப்பு செட்டியார், *ஜெயலக்ஷ்மி மில்ஸ் லிமிடெட்.*
,, எஸ். காசிவிஸ்வநாதன் செட்டியார், பூளைமேடு.
,, ஆர். முத்துசாமி நாயுடு, *மானேஜர், வெங்கடேசா மில்ஸ் லிமிடெட், உடுமலைப்பேட்டை.*
,, கே. இ. நாராயணசாமி நாயுடு, *சர்வசன உயர்பள்ளி.*
,, பி. கே. ரங்கசாமி நாயுடு, *சர்வசன உயர்பள்ளி.*
,, சி. நாராயணசாமி நாயுடு, *தொழிலன் அச்சகம், பா. பாளையம்.*

# நிதிக் கமிட்டியின் வரலாறு.

1947-ம் ஆண்டு ஜுன் மாதம் ஒரு நாள் மாலை சில நண்பர்கள் பேசிக் கொண்டிருந்தபோது அண்ணல் அரங்கசாமி நாயுடுவுக்கு ஞாபகார்த்தம் நிறுவவேண்டியதன் அவசியத்தைப்பற்றிய பேச்செழுந்தது. அன்று ஒரு குழுவை ஏற்படுத்த முடிவு செய்யப்பட்டது. திருவாளர்கள் கே. ஈ. நாராயணசாமி, சி. நாராயணசாமி ஆகியோர் இதற்கு வேண்டுவன செய்யக் கேட்டுக்கொள்ளப்பட்டனர். அவர்கள் பலரைச் சந்தித்துப் பேசியதில் யாவரும் இம் முயற்சியை யாதரித்து ஊக்கமளிக்கக் கண்டனர். இதன் பின்னர் முன் பக்கத்தில் காணப்படும் பெயர்களைக் கொண்ட கமிட்டி ஒன்று அமைக்கப்பட்டது.

அக் கமிட்டி 27-7-'47 தேதியன்று கூடி அடியிற்காணும் தீர்மானங்களை நிறைவேற்றியது.

1. அண்ணலுடைய குடும்பத்தார்க்கு இக்கமிட்டி தன் ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறது.

2. திரு. அரங்கசாமி நாயுடுவின் ஞாபகார்த்தமாக ஒரு பெருங் கட்டிடம் கட்டி அதை சர்வசன உயர்பள்ளியின் பழைய மாணவர் சங்கம் தீர்மானத்திற் கிணங்க பள்ளியின் உபயோகத்துக்கு அளித்தல். இதற்கான நிதி திரட்டல்.

3. ஏழைச் சிறுவர்க்கு உபகாரச் சம்பளம் அளிக்க நிதி திரட்டல்.

4. நாயுடு அவர்களுடைய முதல் ஆண்டு மறைவு நாளன்று நினைவு மலரொன்றை வெளியிடல். நினைவு மலர் குழுவுக்கு திருவாளர்கள் கே. வெங்கடாசலம், சி. நாராயணசாமி நாயுடு, இ. வெங்கடேசலு ஆகியோர் நியமிக்கப்படல்.

கமிட்டியார் எல்லாப் பழைய மாணவர்க்கும் வேண்டுகோள் அனுப்பியுள்ளனர். நிதி வசூல் திருப்திகரமாகவே நடைபெற்று வருகிறது. கமிட்டியாரின் ஆர்வம் மாத்திரம் இக்காரிய வெற்றிக்குப் போதாது. எல்லாப் பழைய மாணவர்களும் ஒத்துழைக்க வேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறோம்.

# வாழ்க்கை வரலாறு

"குமணன்"

---

**14—12—1882** **5—5—1947**

## பூளைமேடு.

பூளைமேடு என்பது பெயர்பெற்ற சமுதாய கிராமம். பூளைமேடு சரித்திரம் மிகவும் பழமையானது. பழைய கிராம சமுதாய அம்சங்கள் முழுவதும் நிறைந்திருந்த பூளைமேடு கிராமம் தோன்றி 260 ஆண்டுகள் ஆகின்றன. இப்பூளைமேடு தோன்றுவதற்குக் காரணர்களாயிருந்த கம்மவார் சமுதாய மக்கள் ஒரு மைலுக்குத் தென்மேற்கேயிருந்த ராயகிருஷ்ணபுரம் என்னும் மறைந்துபோன ஊரில் ஒரு 200 ஆண்டுகள் சிரும், சிறப்பும் செல்வமும் கொண்டு ஆளுகையுடன் வாழ்ந்துவந்தவராவர். அவ்வூர் மண்ணால்—வெள்ளத்து மண்ணால்—மறைக்கப்படும் என்பதைத் தெரிந்தே இப்பூளைமேட்டில் வந்து குடியேறினர். முதன் முதல் இப்பூளைமேட்டிற் கட்டிய வீடுகள் பெருமாள் கோவிலின் கிழமேல் வீதிக்குத் தென்புறமும் வடபுறமும் ஆகும். இன்றைக்கு 60 ஆண்டுகள் முன் வரையும் மாரியம்மன் கோவிலுக்கு மேற்கேதான் பூளைமேடு நின்றிருந்தது. இப்பழைய பூளைமேட்டில் நமது நாயுடு அவர்கள் பிறந்தவர்கள் ஆவார்கள்.

## பரம்பரை.

பூளைமேட்டுக் கம்மவார் சமூகத்துள் காங்கல்லார் என்னும் குலத்தினர் தமது திறமையினால் — காப்பாற்றும் திறமையினால் — "காக்கவல்லார்" எனப் பெயர் பெற்றவர். இக்காக்கவல்லார் குலத்தில் கெங்கா நாயுடு வமிசம் என்பது ஒன்று. பழைய ராயகிருஷ்ணபுரத்திலிருந்து பூளைமேட்டிற்குக் கம்மவார் — காக்கவல்லார் வந்தபொழுதே இந்த கெங்கா நாயுடு

வமிசத்தாரும் வந்தனர். கெங்கா நாயுடு வமிசத்தாரின் பழைய வீடுகள் பெருமாள் கோவிலுக்கு அடுத்த தென்கிழக்கேயுள்ள தருமகருத்தா வீடுகள் என்று சொல்லுவார்கள். அவ்வீடுகள் இன்றைக்கும் கெங்கா நாயுடு வமிசத்தார்க்கே உள்ளன. முதல் கெங்கா நாயுடு வமிசத்தில் அதே பெயர் அமைந்த பேரர் தோன்றினர். அவர்களில் 150 வருடத்திற்கு முன்பிருந்த கெங்கா நாயுடு ஒருவர். அவர் தமக்கு முன்பு இருந்த கெங்கா நாயுடு வமிசத்தார்களின் புகழையும் பெருமையையும் தாம் ஒருவரே பெற்றிருந்தார். இப்பொழுது கெங்கா நாயுடு என்று சிறப்பாகச் சொல்வதெல்லாம் நமது நாயுடு அவர்களின் 5-வது பாட்டனையே குறிப்பதாகும். அக்கெங்கா நாயுடு அவர்களின் பேரராக வெங்கடராம நாயுடு பிறந்தார். அவ்வெங்கடராம நாயுடு அவர்களின் தொடர்ச்சியே நமது நாயுடு அவர்களின் பரம்பரையாத லால் அப்பரம்பரையின் வம்சாவளியை மட்டும் குறிப்பிடுவோம்.

நாயுடு அவர்களுடைய வம்சத்தில் அவருடன் பிறந்தோரில் எல் லோர்க்கும் இளையோரான திருவாளர் பி. எஸ். ஜி. நாராயணசாமி நாயுடு அவர்கள் பூளைமேடு பஞ்சாயத்து போர்டின் தலைவராகப் பல்லாண்டுகள் வீற்றிருந்து ஊரின் நன்மைக்காகப் பெரிதும் உழைத்தார். அவருடைய நிர்வாகத்தின்கீழ் ஒடுங்கிக் கிடந்த பூளைமேட்டின் சந்து பொந்துகளெல்லாம் விசாலமான வீதிகளாயின. இருண்டு கிடந்த பூளைமேடு மின்சார விளக்கு களால் அலங்கரிக்கப் பட்டது. தன் குடும்பத்தாரின் பண்ணையைச் சீருஞ் சிறப்புமுற மேற்பார்த்து வந்தார். அன்னார் 1938 ஜூன் மாதம் 22-ந் தேதி இறந்தபோது நாயுடு அவர்களின் குடும்பம் பெருந் துக்கத்தில் ஆழ்ந்தது. அடுத்தாற் போல நாயுடு அவர்கள் 1947-ம் ஆண்டு மே மாதம் 5-ந் தேதி இறந்தது அக்குடும்பத்தார்க்கு ஒரு பேரிடி விழுந்தாற்போலாயிற்று.

இன்று அவருடன் பிறந்தோர்களில் திருவாளர் பி. எஸ். ஜி. வெங்கிடசாமி நாயுடு அவர்களும், திருவாளர் பி. எஸ். ஜி. கெங்கா நாயுடு அவர்களும், திருமதி ரங்கம்மாளும் இன்னும் பல அறங்கள் புரிய நம்மி டையே இருந்து வருகின்றனர். திருவாளர் நாயுடு அவர்கள் வீற்றிருந்த ஆசனத்தில் திருவாளர் கெங்கா நாயுடு அமர்ந்து அறநிலையத்தின் நிர்வாகத் தைத் திறம்பட நடத்தி வருகிறார். அன்னார் பதவிக்கு வந்ததுமே பி. எஸ். ஜி. கல்லூரியைத் தோற்றுவித்து நாயுடு அவர்களின் ஆத்மா மகிழ்ச்சியடையும் வகை கண்டார். அத்துடன் அரிஜனச் சிறுமிகளுக்காகக் கன்னியா குருகுலம் ஒன்றைத் தன் அறுபதாவது ஆண்டு விழாக் கொண் டாட்டத்தின்போது ஏற்படுத்தியுள்ளார் என்பதை இங்கு குறிப்பிடுவது மிகையாகாது.

# வம்சாவளி



வெங்கடராம நாயுடு
(1) முத்து நாயுடு
(2) லிங்கப்ப நாயுடு
(3) சாமி நாயுடு
(4) ரங்கசாமி நாயுடு
(1) நாரப்பனாயுடு
(2) கோவிந்தசாமி நாயுடு
(3) கிருஷ்ணம நாயுடு
(4) கொண்டசாமி நாயுடு
ஸ்ரீ பி. எஸ். ஜி. வெங்கடசாமி நாயுடு (பொன்னண்ணன்)
ஸ்ரீ பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு (சின்னண்ணன்)
(மனைவி: ஸ்ரீமதி கிருஷ்ணம்மாள்)
ஸ்ரீ பி. எஸ். ஜி. கெங்கா நாயுடு (தாதண்ணன்)
ஸ்ரீ பி. எஸ். ஜி. நாராயணசாமி நாயுடு (முத்தண்ணன்)
ஸ்ரீமதி ரங்கம்மாள் (தாயம்மாள்)
திரு. ஜி. ஆர். தாமோதரன்
திரு. ஜி. ஆர். கோவிந்தராஜன்
திரு. ஜி. ஆர். வெங்கடேசன்
திரு. ஜி. ஆர். வரதராஜன்
திருமதி இலட்சுமியம்மாள்
திருமதி ருக்மணியம்மாள்

நமது நாயுடு அவர்களின் பரம்பரை ஸ்ரீ ராமனுடைய உடன்பிறப்பைப்போல நால்வராய் அமைந்திருத்தல் போற்றற்குரியதாம். இந்நால்வரையும்—வெங்கடசாமி நாயுடு அவர்களைப் பொன்னண்ணன் எனவும், ரங்கசாமி நாயுடு அவர்களைச் சின்னண்ணன் எனவும், கெங்கா நாயுடு அவர்களைத் தாதண்ணன் எனவும், நாராயணசாமி நாயுடு அவர்களை முத்தண்ணன் எனவும், செல்வப் பெயர்களால் அழைத்து வந்தார்கள். இப்பொழுதும்கூட அவ்வாறே அன்புடன் அழைக்கப்படுகின்றனர். உடன் பிறந்த ரங்கம்மாளின் செல்லப் பெயர் தாயம்மாள் ஆகும்.

## பிறப்பு.

தந்தையார் கோவிந்தசாமி நாயுடு அவர்கள் 1856-ம் வருஷம் பிறந்தவர். தந்தையாருக்கு 1876-ம் வருஷத்தில் திருமணம் சிறப்புடன் நிகழ்ந்தது. அப்பொழுது தகப்பனார் வயது 20. தாயார் மங்கம்மாள் அவர்களின் வயது 16. தந்தையார் கோவிந்தசாமி நாயுடு அவர்களுக்கும் தாயார் மங்கம்மாள் அவர்களுக்கும் இரண்டாவது திருக்குமாரராக நமது நாயுடு அவர்கள் சித்திரபானு-ஞு மார்கழி-மீ 1-ந் தேதி (14—12—1882) தோன்றினர்.

## படிப்பு.

நமது நாயுடு அவர்களின் இளமைப் பருவத்தில் 60 வருஷங்களுக்கு முன்பு இப்பொழுதுள்ளன போன்ற நிலைமையில் பள்ளிக்கூடங்கள் அமைந்திருக்கவில்லை. அவற்றைத் திண்ணைப் பள்ளிக்கூடங்கள் என்பர். உபாத்தியாயரின் வீட்டுத் திண்ணைகளில் அல்லது சாவடித் திண்ணைகளில் உட்கார்ந்து பிள்ளைகள் படிப்பார்கள். எழுதுவதற்குப் பென்சிலும் சிலேட்டும் காகிதமும் கிடையா. அத்திண்ணைகளின்மேல் மணலைப் பரப்பி அம்மணலின்மேல் மூதன் முதல் எழுத்துக்கள் எழுதிப் பயில்வார்கள். அப்பொழுது படிப்பதற்காக ஓலைச் சுவடிகளும் உண்டு. அச்சுப் புத்தகங்கள் அப்பொழுது தான் அருமையாக வெளிவந்துகொண்டிருந்தன. நமது நாயுடு அவர்களோ பழைய கால முறைப்படி மணலில் எழுதி எழுத்துக்கள் பயின்ற பின்பு ஓலைச் சுவடிகளில் உள்ள ஆத்திச்சூடி, கொன்றை வேந்தன், வேழ முகத்து முதலிய புத்தகங்களையும், அச்சடித்த 3-வது 4-வது வகுப்புப் புத்தகங்களையும் படித்தார்கள். இவ்வாறு பூளைமேடு திண்ணைப் பள்ளிக்கூடத்தில் 15 வயது வரையும் படித்தார்கள். அக்காலம் ஐயரது திண்ணைப் பள்ளிக்கூடத்தில் 4-வது படித்தால் பெரிய படிப்புப் படித்து விட்டதாக அக்காலப்

# நாயுடு அவர்களின் தந்தையாரும் தாயாரும்



ஸ்ரீமான் பி. எஸ். கோவிந்தசாமி நாயுடு



ஸ்ரீமதி மங்கம்மாள்

# நாயுடு அவர்களும் சகோதரர்களும்






திருவாளர் பி. எஸ். ஜி. வெங்கிடசாமி நாயுடு



திருவாளர் பி. எஸ். ஜி. அரங்கசாமி நாயுடு



திருவாளர் பி. எஸ். ஜி. கெங்கா நாயுடு



திருவாளர் பி. எஸ். ஜி. நாராயணசாமி நாயுடு

## நாயுடு அவர்களும் அவரது வாழ்க்கைத்துணைவியாரும்



ஸ்ரீமான் பி. எஸ். ஜி. அரங்கசாமி நாயுடு



ஸ்ரீமதி கிருஷ்ணம்மாள்

பெற்றோரும் மாணவர்களும் மகிழ்வார்கள். அம்மகிழ்ச்சியுடன் நமது நாயுடு அவர்களுக்கும் பெற்றோர்களுக்கும் மனம் அமையவில்லை. எனவே, கோயமுத்தூர் செயின்ட் மைக்கில்ஸ் ஹைஸ்கூலுக்குச் சென்று முதல் பாரத்தில் சேர்ந்து படித்தார்கள். 16 வயது ஆயினமையால் கோவைப் படிப்பும் நிறுத்தப் பெற்றது.

## குடித்தனம்.

16 வயதுக்குமேல் 18 வயது வரையும் தோட்ட வேலையும் காட்டு வேலையும் பார்த்து வந்தார்கள். எருதுகளையும் காளைகளையும் மேய்ப்பதில் மிக்க ஆவல் உண்டு. பசுமாடுகள் எப்பொழுதும் வயிறு நிரம்பியிருக்க வேண்டும். தாமே தீவனம் போட்டுத் தின்னவைத்துத் தண்ணீர் காட்டிக் கால்நடைகள் அள்ளை எடுத்திருப்பதைக் கண்டால் தாம் உண்டு வயிறு நிரம்பியதுபோல் மகிழ்ச்சி அடைவார்கள். தோட்ட வேலை காட்டு வேலைகளில் கடின விவசாய உழைப்புக்களை மேற்கொள்ளவில்லை. எனினும் விவசாய முன்னேற்றத்திற்கான யோசனைகள் சொல்வதிலும் நல்ல விளைவுகள் எடுப்பதிலும் பெற்றோருடனும் உடன்பிறந்தாருடனும் கலந்து குடித்தனத்தில் இருந்துவந்தனர். இவ்வாறு 2 ஆண்டுகள் விவசாய முன்னேற்றத்தில் சென்றன.

## வியாபாரம்.

விவசாயத்தில் ஈடுபட்டிருக்கும்பொழுதே வியாபாரத்திலும் நமது நாயுடு அவர்களுக்கு விருப்பம் உண்டாயிற்று. அதனால் 18-வயதுக்குமேல் வியாபாரம் செய்யத்தொடங்கினர். தகப்பனார் கோவிந்தசாமி நாயுடு அவர்களும் வியாபாரம் செய்துவந்தார். எக்காலத்தில் எப்பண்டங்களை வாங்க வேண்டும் விற்கவேண்டும் என்னும் வியாபார தந்திரமும் சாமர்த்தியமும் மிகுதியும் உள்ளவர். எனவே, தகப்பனார் ஆசீர்வாதத்துடனும் உடன் பிறந்தாரின் உற்ற உதவியுடனும் வியாபாரத்தில் இறங்கினர்.

அக்காலத்தில் 60 வருடங்களுக்கு முன்பு பருத்தியறைக்கும் யந்திர சாலைகள் இல்லை. எல்லா ஊர்களிலும் கைராட்டினத்தாலேயே பருத்தியை அறைத்துப் பஞ்சை உண்டாக்குவார்கள். பருத்தி யறைக்கும் பெண்கள் ஓரிடத்தில் 10, 20, 50, 100-பேர்களாகக் கூடி யறைப்பதும் உண்டு. பல பெண்கள் தமது வீடுகளுக்குப் பருத்தியை வாங்கிக்கொண்டுபோய் அறைத்துக்கொண்டுவருவதும் உண்டு. அக்காலம் ஒரு மணங்கு பருத்தி யறைப்பதற்கு ஒரு அணாமுதல் இரண்டணாவிற்குமேல் கூலியில்லை. இவ்வாறு பருத்தி

யறைக்கும் பெண்களைத் தமது வீட்டில் சிலரை வைத்து அறைக்கவும் செய்தார்கள். வீடுகளுக்கு மணுப்பருத்தி கொடுத்து அறைத்துக்கொண்டுவரவும் செய்தார்கள். 1903, 1904-ம் ஆண்டுகளில் ஒரு பொதி பருத்தியின் விலை ரூ. 12—0—0 ஒரு பொதி கொட்டையின் விலை ரூ. 5—0—0 ஒரு பொதி பஞ்சின் விலை ரூ. 30—0—0 ஆக இருந்தது.

இவ்வாறு கைராட்டினப் பருத்தியை யறைத்துப் பஞ்சாக்கி விற்பதுடன் கிராமங்களுக்குச் சென்று கைராட்டினப் பஞ்சு வாங்கி விற்றும் வந்தார்கள். பூளைமேட்டிற்கு வடக்கே 7, 8-மைல்களில் உள்ள அத்திப்பாளையம் கோவிந்தநாயக்கன்பாளையம் முதலிய ஊர்களுக்குச் சென்று இராட்டினப் பஞ்சை வாங்கிக்கொண்டுவருவார்கள். காலையில் வண்டிகளைக்கொண்டு போய் மாலையில் பஞ்சை எடைபோட்டுக்கொண்டு வருவது வழக்கம். இப்பஞ்சை ஸ்டேன்ஸ் மில், கொல்லம் மில், கல்லாய் மில்லுகளுக்கு விற்பது வழக்கம். இதனுல் கல்லாய் மில் ஏஜண்ட் சோமசுந்தரம் செட்டியார் அவர்கள் நமது நாயுடு அவர்களின் குடும்பத்தாருடன் மிக்க அன்பாகவும் ஆதரவாகவும் கடைசிவரையும் இருந்துகொண்டே யிருந்தார்கள்.

### பருத்தி யறைக்கும் யந்திரசாலை

1911-ம் ஆண்டில் பருத்தி யறைக்கும் யந்திரசாலை ஒன்று நாலு அறைக்கும் யந்திரங்களுடன் ஆரம்பிக்கப் பெற்றது. அது தமது தோட்டத்தில் கிணற்றுப் பக்கம் அமைக்கப் பெற்றது. அதற்கு “ஸ்ரீ ரங்க விலாஸ் ஜின்னிங் பேக்டரி” என்று பெயர். இப் பேக்டரியில் கம்போடியா பருத்தியை அறைக்க வேண்டுமென்பதற்காகத் தமது தோட்டத்திலே காம்போடியா பருத்தியை முதன்முதலில் விளைவு செய்தார்கள். கருங்கண்ணி அதற்குப் பின் உண்டாயிற்று. அப்பொழுது விளைவெல்லாம் உக்கம் பருத்திதான். தோட்டத்துக் கிணற்றில் தண்ணீர் எடுப்பதற்கும் யந்திரசாலைக்கும் இன்ஜின் ரூ. 2400-கொடுத்துச் சென்னையில் வாங்கப்பட்டது. இதற்குரிய தண்ணீர்க் குழாய்களும் 4-ஜின்னுகளும் ரூ. 600-க்கு வாங்கப்பட்டன. இந்த இன்ஜின் பெயர் 24-குதிரைப் பவர் உள்ள ஹாரன்ஸ்பி ஆயில் என்ஜின் என்று பெயர். இதுவே முதன் முதலில் வாங்கப் பெற்ற என்ஜின்.

### வியாபாரத்தில் தாழ்வும் உயர்வும்

1911-ம்ஆண்டில் ஒரு பாரப் பஞ்சின் விலை ரூ. 130, 140-ஆகும். இவ் விலையில் 3-வருடங்கள் வியாபாரம் நடந்தது. 1914-ம் ஆண்டில் ஐரோப்பியப் பெரும்போர் வந்தது. பெரும்போரின் தொடக்கம் 1914-ல்

ஒரு பாரம் பஞ்சு ரூ. 60, 70-ஆக இருந்தது. வரவர ரூ. 140-க்கும் வந்தது. அந்த 140-ரூ. விலையில் 500-பாரம் பஞ்சு கையிருப்பு இருந்தது. பின்னரும் விலைக் குறைவுகளில் அப் பஞ்சை விற்றதால் ரூ. 50,000-நஷ்டம் வந்தது. இப் பெரிய நஷ்டத்தால் நமது நாயுடு அவர்களும் தகப்பனாரும் உடன் பிறந்தவர்களும் மனம் தளரவில்லை. கல்தூணைப்போல உறைத்து நின்றார்கள். வியாபாரத்தை இடைவிடாமல் செய்துவந்தார்கள். போரின் முடிவில் பஞ்சின் விலை உயர்ந்தது. 1918-ம் ஆண்டில் ஒரு பாரம் பஞ்சின் விலை ரூ. 600-க்கு விற்றது. இதனால் முன்பு உண்டாய நஷ்டம் நீங்கிப் பின்பு உண்டாய இலாபம் ரூ. 1,00,000-ம் ஆகும். முப்பது வருடங்களுக்கு முன் ஒரு லட்சம் இலாபம் இப்பொழுது ஒரு கோடி லாபத்திற்கு ஒப்பாகுமன்றோ;

ஊக்கமும் ஆக்கமும்

ஒரு இலட்சம் ஊதியம் கிடைக்கவே விவசாயத்திலும் வியாபாரத்திலும் மேலும் மேலும் பொருள் திரட்டவேண்டுமென்னும் ஊக்கம் அதிகமாயிற்று. அதனால், தொழிலும் வியாபாரமும் பெருகுவதற்காக ஸ்ரீ ரங்க விலாஸ் மில் கட்டப் பெற்றது. அப்பொழுது வேடபட்டியில் வயல்களும் தோப்புகளும் தோட்டங்களும் வாங்கத்தொடங்கினார்கள். ஸ்ரீ ரங்க விலாஸ் மில்லின் வருவாயுடன் சொந்த வியாபாரத்திலும் ஊதியம் மேன்மேலும் வரத்தொடங்கிற்று. அவ்வாறே உள்ளூர்த் தோட்டங் காடுகளிலிருந்தும் விளைபொருள்களால் வரும் ஊதியம் பெருகிவந்தது. இவ்விரு வழியிலும் வருமானம் கங்கையும் யமுனையும் சேர்ந்து பெருகினதைப்போலப் பெருகிற்று.

தரும சிந்தனை

பலவழிகளிலும் செல்வம் நாளுக்குநாள் பெருகிவரவே நமது நாயுடு அவர்களின் சிந்தனை பொருளீட்டுவதுடன் பொருந்தி நிற்கவில்லை. "செல்வத்துப் பயனே ஈதல்" என்னும் பொருளுரையைப் புந்தியில் கொண்டு பல நாளும் பலமுறையும் சிந்திப்பாராயினர். சிந்தித்துத் தெளியும்தோறும் தெளியும்தோறும் நல்லறம் செய்தல் வேண்டுமென்னும் முடிவிற்கு வந்தனர். அம் முடிவைச் செய்கையில் கொணர்வதற்காக உடன் பிறந்தாருடன் உவந்து பலகாலும் பேசினர். பேசியபின் எவ்வகை அறத்திலும் மக்களுக்குக் கல்வியும் தொழிற்கல்வியும் புகட்டும் அறமே பேரறம் என உறுதி செய்தனர். அதற்காகத் தாங்கள் இதுவரையும் ஈட்டியுள்ள செல்வம் அத்தனையும் ஒரு மதிப்புப் போட்டுத் தருமத்திற்காக ஒரு பங்கு வைக்கவேண்டுமெனத் தீர்மானித்தனர்.

தம் தீர்மானப்படி தமது சொத்தின் மதிப்பு சுமார் ரூ. 10,00,000 பத்து இலட்சம் ஆக இருந்தது. இந்தப் பத்து இலட்சத்தையும் 5-பங்குக ளாகப் பிரித்தனர். தமது அண்ணன் தம்பிகளுக்கு நான்கு பாகமும் அறக் கடவுளுக்கு ஒரு பாகமும் ஆகப் பிரித்தனர். இவ்வாறு தருமத்திற்கென இரண்டு இலட்சம் எடுத்து வைக்கப் பெற்றது. இப்பெருந் தொகையைப் பரிபாலிப்பதற்கான விதிகளும் ஒழுங்குடன் வகுக்கப்பட்டன. இத் தொகை யால் ஒரு அற நிலையம் தோன்றிற்று. அந்த அற நிலையத்திற்கு பி. எஸ். ஜி. அண் சன்ஸ் தருமஸ்தாபனம் என்று பெயர். இந்த அற நிலையப் பரிபால னத்தில், சர்வஜன ஹைஸ்கூல் என்ற உயர்நிலையப்பள்ளியும் தருமஸ்தாபனத் தொழிற்கல்லூரியும் சீரும் சிறப்புமாக நடந்துவருகின்றன. 1924-ம் ஆண்டு பத்து உபாத்தியாயர்களையும் 250-பிள்ளைகளையும் கொண்டு ஆரம்பிக்கப் பெற்ற சர்வஜன ஹைஸ்கூல் இன்றைக்கு 45 உபாத்தியாயர்களையும் 1250 மாணுக்கர்களையும் கொண்டு மாண்புடன் விளங்குகின்றது.

## அறநிலைய வளர்ச்சி.

சர்வசன உயர்நிலைப் பள்ளியும் தொழிலும் தொழிற் கல்லூரியும் பிற அறங்களும் நிலைபெற்று வளர்வதற்காக 1928-ம் ஆண்டு அறநிலையம் ஆரம்பிக்கப் பெற்றது. அறக் கடவுளுக்குப் பங்காகப் பிரித்துவைத்த மூலதனமே இவ்வறநிலையத்தின் மூலதனமாகும். இந்த 2 லட்சம் மூலதனம் பங்குகளும் இயந்திர சாதனங்களும் பிறவும் ஆகும். ஆகவே முதன் முதலில் 4–5 இயந்திர சாதனங்களுடன் 15–20 தொழிலாளரைக் கொண்டு தொழிற்சாலை தொடங்கப் பெற்றது. அப்பொழுது தொழிற்கல்வி பயிலு வதற்காக 10 மாணவர்கள் வந்து பயின்றனர். அம்மாணவர்கள் 4–5 ஆண்டு கள் தொழிற்சாலையில் தொழில் கல்வி பயிலல் வேண்டும். பின்னர் அத் தொழில் கல்விக்குரிய யோக்கியதா பத்திரம் பெறுவர். இம்மாணவர்களுக்கு உபாத்தியாயர் ஒருவரே அன்றிருந்தனர். இன்றும் அத்தகைய கல்வியை 100 மாணவர் வரையும் பயின்று வருகின்றனர்.

பின்னர் தோற்றுவித்த தொழிற் கல்லூரியில் 12-க்கு மேற்பட்ட உபாத்தியாயர்களும் 300-க்கு மேற்பட்ட மாணவர்களும் பலவகையான தொழிற் கல்வியைப் பயின்று வருகின்றனர். இக்கல்லூரி மாணவர்கள் பெறுவது 'டிப்பளமோ' என்னும் பட்டம் ஆகும்.



இவர்களது மூத்த குமாரர் திரு. தாமோதரன் 1935-ஞ ஆகஸ்டு-மீ தொழிற் கல்வி பெற இங்கிலாந்து செல்வதற்குமுன் எடுத்த படம். இதில் காணப்படுபவர்கள், நாயக்கர் தம்பதிகளும் தாயாரும், மக்களும், மருமக்களும்.



திரு. நாயுடு அவர்களின் குடும்பத்தாரால்
பழனியடிவாரத்தில் கட்டப்பட்ட புஷ்ப மண்டபம்.

பொதுவாகத் தமிழ், ஆந்திர, மலையாளம் முதலிய நாடுகளிலும், சிறப்பாகக் கோவைக் கோட்டத்திலும், பல நூலாலைகளிலும், பலப்பல வேறு தொழிற்சாலைகளிலும் பி. எஸ். ஜி. தர்மஸ்தாபனத் தொழிற்சாலையிலும் பயின்று பட்டம் பெற்ற மாணவர்கள் அமர்ந்திருக்கின்றனர். பெரிய பதவிகளை நிருவகித்து வருகின்றனர்.

இவ்வாறு பிறைச் சந்திரன்போல் வளர்ந்தும் ஆலமரம் விழுதூன்றிப் பரவுவதைப் போல் பரவியும் வரும் அறநிலையத்தை எவ்வாறு மதிப்பிடுவது? வாணிக உலகத்தார் 2 இலட்சம் மூலதனத்தைக் கொண்டு தொடங்கப் பெற்ற அறநிலையத்தின் வளர்ச்சியை நோக்கி 10 லட்சம், 20 லட்சம், 50 லட்சம், 100 லட்சம் ஆக படிப்படியே மதிப்பிடுவர். ஆனால் நமது நாயுடு அவர்களின் அறநிலையமோ புறப்பொருள் மதிப்பில் அடங்குவது அன்று; அன்று. அகப்பொருள் ஆராய்ச்சியைக் கொண்டு மதிப்பிடல் வேண்டும். எப்படி?

ஒரு உபாத்தியாயரும் 10 மாணவர்களையும் கொண்டு தொடங்கப் பெற்ற தொழிற் படிப்பு 100-மாணவர்களுக்குமேல் பெருகியுள்ளது. மேலும் 12-ஆசிரியர்களுக்கு மேலும் 300 மாணவர்களுக்கு மேலும் இருந்துவரும் கல்லூரிப் படிப்பும் வளர்ந்துள்ளது. அன்றியும் இவ்வாறு 400-க்கு மேற்பட்ட மாணவர்கள் பயிலும் தொழிற் கல்வியையும் அக்கல்வியின் திறமையால் அம்மாணவர்கள் அடைந்து அநுபவிக்கும் வாழ்க்கைத் தரத்தையும் எத்தனை கோடி கோடிப் பொன் காசுகளுக்கு ஒப்பிட்டு மதிப்பது! எனவே அறநிலையத்தின் அகப்பொருளை — கல்வித் துறைகளை — எவ்வளவு என மதிப்பிட முடியாதெனக் கலைகளின் உலகத்தார் மதிப்பிடுகின்றனர்.

மேலும் 15–20 தொழிலாளர் உண்டு, உடுத்து, உவந்து வாழ்ந்து வந்ததைப் போலவே 600–700 தொழிலாளர்கள் பணி செய்து வருவாய் பெற்று மகிழ்ந்து வாழ்ந்து வருகின்றனர். இத்தகைய வாழ்க்கையின் மகிழ்ச்சிக்கு எத்தகைய புறப்பொருளை ஒப்பிட்டு மதிப்பிடுவது !

இங்ஙனம் எம்மதிப்பிலும் அடங்காத அகப்பொருள்களையும் தொழிற் கல்வித் துறைகளையும் — அப்பொருள்களைப் பயின்று வளர்த்ததற்குக் காரணமான புறப்பொருள்களையும் — கட்டிடங்கள், இயந்திர சாதனங்கள் — பிறபொருள்களையும் — எக்கலையின் அறிவைக் கொண்டு மதிப்பிடுவது ! இவ்வாறு எம்மதிப்பிலும் அடங்காத உயர்ந்த கலைச் செல்வ நிலையமான

வாழ்க்கையின் ஊற்றான அறிவின் ஆனந்தமான அறநிலையத்தை ஆண்டுவந்த நமது நாயுடு அவர்களின் அறிவும், ஆற்றலும், ஆண்மையும், அநுபவமும் எம்மதிப்புக்கும் மேற்பட்ட மதிப்பினை உடையதாகும்.

## அற நிலையமும் நமது நாயுடு அவர்களும்.

அவ்வாறே அறங்கள் பல வழியிலும் வளர்வதற்காக அமைக்கப் பெற்ற நிலையங்களும் விளங்குகின்றன. நமது மாகாணத்தில் பல தொழில் சாலைகள் உள்ளன. தொழில் கல்விச் சாலைகள் உள்ளன. அவற்றுள் பல தனி மனிதர் நலங்களுக்காக நடத்தப்படுகின்றன. சில பொதுமக்களின் நலங்களுக்காக நடத்தப்படுகின்றன. அச்சிலவும் இவ்வறநிலையத்தைப் போல விரிந்த முறையில் அமைக்கப் பெறவில்லை. மேலும் அறநிலையங்களில் வரும் ஊதியம் அவ்வளவையும் அறநிலையத்திற்காகவே செலவு செய்தும் அறநிலைய முன்னேற்றத்திற்கென்றே காப்புச் செல்வமாக வைத்திருக்கும் இவ்வறநிலையம் நமது நாட்டின் அறநிலையங்களுக்கோர் எடுத்துக்காட்டாக விளங்குகின்றது. இவ்வறநிலையத்தின் வளர்ச்சியை ஆண்டுதோறும் வெளியிடும் அறிக்கைப் புத்தகங்களிலிருந்து நன்கு தெரிந்துகொள்ளலாம். இவ்வாறு அறநிலையம் மேன் மேலும் வளருவதற்கு நமது நாயுடு அவர்களின் நன்முயற்சியும் ஊக்கமும் உடன் பிறந்தார்களின் உதவியும் உறுதுணையுமே காரணங்களாகும்.

அறநிலையத்தை எவ்வெத் துறையில் எப்படி வளர்ப்பதென்பதே நாடோறும் நமது நாயுடு அவர்களின் சிந்தனை. எப்பொது நிலையங்களைக் காணினும் அதிலுள்ள நல்லன புதியனவற்றை நமது அறநிலையத்தில் உண்டாக்கவேண்டுமென்றே எண்ணுவர். அதற்கானவற்றை வேண்டியவருடன் ஆலோசித்து முடிவு செய்வர். ஒரு குண்டூசி முதல்கொண்டு ஆகாயத்தில் பறக்கும் விமானம் வரையும் தமது அறநிலையத்தில் உண்டாக்கவேண்டுமென்னும் விரிந்த மனம் கொண்டவர். நமது நாட்டில் உள்ள கைத்தொழில் கல்வியனைத்தையும் தமது அறநிலையத் தொழில் கல்லூரி வழியாகக் கற்பிக்க வேண்டுமென்னும் பரந்த எண்ணங் கொண்டவர்.

இவ்வெண்ணங்களால் அமைந்த அறநிலையத்தை நோக்குவோம். அறநிலைய முகத்தில் காணப்பெறும் உயர்ந்த கோபுரங்கள் இரண்டும் நமது நாயுடு அவர்களின் உயரிய எண்ணங்களின் எழுச்சியாகும். அறநிலையத்தில் அமைக்கப் பெற்ற பெரிதும் உறுதியுமான கட்டிடங்கள் ஒவ்வொன்றும் நமது நாயுடு அவர்களின் ஊக்கமும் உற்சாகமும் ஆகும். அறநிலையத்திற்காக விடப்பெற்ற மைதானங்கள் நமது நாயுடு அவர்களின் பரந்த மனப் பான்மையேயாகும்.

அறநிலையத்தில் அமைந்துள்ள ஒவ்வொரு பொறியும் நமது நாயுடு அவர்களின் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளே யாகும். அறநிலையப் பொறிகளில் இருந்து பணிசெய்துவரும் ஒவ்வொரு தொழிலாளரும் நமது நாயுடு அவர்களின் தொழில் செய்யும் ஒவ்வொரு உறுப்புக்களே ஆவர். அறநிலையத் தொழில் கல்லூரியில் பயின்றுவரும் ஒவ்வொரு மாணவனும் நமது நாயுடு அவர்களின் கலையுணர்ச்சி வடிவங்களே ஆவர். பலவழிகளிலும் அறநிலையத்தின் உயர்ச்சியே நமது நாயுடு அவர் களின் உயிராகும். இவ்வாறு அறநிலையமே நமது நாயுடு அவர்கள் ஆகவும், நமது நாயுடு அவர்களே அறநிலையம் ஆகவும் காண்கிறோம்; களிக்கிறோம்.

"தர்மஸ்தாபனம்" என எண்ணும்பொழுது நமது நாயுடு அவர் களின் மலர்ந்த முகத்துடன் கூடிய திருவுருவமே நமது கண்முன்னர் காட்சி யளிக்கின்றது. "தர்மஸ்தாபனம்" என்பதைக் கேட்கும்பொழுது நமது நாயுடு அவர்களின் முறுவலுடன் கூடிய மொழிகளையே கேட்கின்றோம். ஆகையால், நமது நாயுடு அவர்களின் உடல், உயிர், உள்ளம், உரை, செயல் ஆகிய அனைத்தும் அறநிலையம், அறநிலையம் என்றே அன்புடன் மொழிகுவம்; மொழிகுவம்.

## மேல்நாட்டு படிப்பு—தாமோதரன்.

இத்தகை அறநிலையத்திற்குத் தமது உடலையும் உயிரையும் உடன் படுத்தினமைபோலத் தமது மக்களில் ஒருவரையும் உடன்படுத்துமாறு எண்ணினர். எனவே, அறநிலையத்தின் பலபிரிவுகளிலும் உள்ள தொழில் நுட்பங்களைத் தெரிந்து முன்னேற்றம் செய்யவேண்டும் என்பதற்காகத் தனது மக்களில் தலைமை மகன் ஜி. ஆர். தாமோதரன் என்பவரை இங்கிலாந் துக்கு அனுப்பிப் பயின்று தேர்ச்சி பெறும்படி செய்தார். இங்கிலாந்தில் பல ஆண்டுகள் தொழில் கலைகளைப் பயின்று பி. எஸ். ஸி. (டெக்) என்னும் பட்டம் பெற்றுவந்த ஜி. ஆர். தாமோதரன் அவர்களைத் தம்பியார் பி. எஸ். ஜி. கெங்கா நாயுடு அவர்கள் காரியதுரந்தர ஆசனத்தில் அமர்த்த, தமையனர் பி. எஸ். ஜி. வெங்கடசாமி நாயுடு அவர்கள் ஆசிர்வதிக்க, யாவரும் மகிழ அற நிலையத்தை நடத்துபவர் ஆக 1943-ல் இருந்தமையைக் கண்டு களிகூர்ந்தார். தலைமை மகனர் அறநிலையத்திற்குக் காரிய துரந்தராக இருந்து அறநிலையக் கிளைகள் ஒவ்வொன்றையும் திறமையாக நடத்துவது நமது நாயுடு அவர் களின் தலைமை மகிழ்ச்சியாகும்.

## வியாபாரப் பெருக்கம்.

1911-ம் ஆண்டு தொடங்கப் பெற்ற ஸ்ரீ ரங்கவிலாஸ் ஜின்னிங் பேக்டரி, தான் செய்த பஞ்சிலிருந்து உண்டாகிய தன் குழந்தையாகிய நூலுக்கு ஸ்ரீ ரங்கவிலாஸ் மில்லெனத் தன் பெயரையே வைத்தது. இக் குழந்தைக்குக் குழந்தைகளாகப் பல நூல் ஆலைகளும் பருத்தி யந்திர சாலைகளும் தோன்றின. அவையாவன:— நூல் ஆலைகளுள் பயோனீர் மில்லும், குமரன் மில்லும் ஆகும். பருத்தி யந்திர சாலைகளுள் பாப்பநாயக்கன் பாளையம், திருப்பூர், அவிநாசி, புளியம்பட்டி இவ்வூர்களில் உள்ளன ஆகும்.

## உழவுப் பெருக்கம்.

1911-ம் ஆண்டில் 6 ஏகரா தோட்டமும், 10 ஏகரா காடுமாக இருந்த பண்ணையம் இன்றைக்குப் பூளைமேடு, வேடபட்டி முதலிய இடங்களில் வயல், தோப்பு, தோட்டம், காடு பல ஆயிரம் ஏகர்களாகப் பெருகியுள்ளன. இப்பெருக்கத்தில் தோன்றியதே கண்டமநாயக்கனூர் ஜமீன் ஆகும்.

## ஆலயத் திருப்பணி.

நமது நாயுடு அவர்களின் திருவுள்ளத்தில் எப்பொழுதுமே தெய்வ பக்தி குடிகொண்டிருந்தது. நாள்தோறும் குளித்த பின்னர் பூசை செய்து சுவாமியைத் தொழுத பின்பு வழக்கமாக உணவருந்தி வந்தனர். அத்தெய்வ பக்தியின் அறிகுறியாகப் பூளைமேடு கரிவரதராஜப் பெருமாள் கோவிலுக்குத் திருப்பணி செய்தும், திருவிழாக்கள் நடத்தியும் திருவரங்கத்தில் புரட்டாசி மாதம் மண்டபக் கட்டளையைச் செய்தும் வருகிறார். பூளைமேட்டில் புதிதாகக் கட்டப் பெற்று சித்திர வேலைப்பாடுகளுடன் திகழும் மாரியம்மன் கோவிலும் அரிஜனங்களுக்காகக் கட்டப்பெற்ற பட்டாள அம்மன் கோவிலும் தெய்வ பக்திக்குச் சான்றுகளாகும். மேலும், பழனியில் மலையேறும் படிக்கட்டுகளின் நடுவழியில் கட்டப் பெற்றுள்ள கருங்கல் மண்டபம் ஒன்றே இவரது ஆழ்ந்த தெய்வ சிந்தனையைத் தெரிவிப்பதாகும். நமது நாயுடு அவர்கள் ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தினர். தமது அழகிய நெற்றியில் நாள்தோறும் வடகலைத் திருமண் தரிப்பவர். அவ்வாறிருந்தும் தமக்குச் சமய வேற்றுமைகள் இல்லையென அரசாண்ட தமது கம்ம குலத்து கிருஷ்ணதேவ ராயரைப் போலச் சமய வேறுபாடு இல்லாதவர். எம்மதமும் சம்மதம் என ஒழுகும் பெருநோக்குடையவர்.

தமது ஊர் பூளைமேடு நல்ல நிலையில் இருக்கவேண்டும் என்னும் அவா என்றுமே நம் நாயுடு அவர்களின் உள்ளத்தில் குடிகொண்டிருந்தது. அதற்காக இரண்டு முறைகள் வகுக்கப்பட்டன.

ஒன்று:—பூளைமேடு சுத்தமாகவும் விளக்கமாகவும் வைத்திருப்பது.

மற்றொன்று:—பூளைமேடு மக்களின் வழக்குகளைத் தீர்த்து ஒற்றுமையாக வாழும்படி செய்தல்.

இவற்றிற்காகப் பூளைமேடு பஞ்சாயத்துப் போர்டும் பஞ்சாயத்துக் கோர்ட்டும் நிறுவப்பட்டன. முதன் முதலில் தோன்றிய பஞ்சாயத்துப் போர்டுக்குத் தகப்பனார் கோவிந்தசாமி நாயுடு அவர்கள் தலைவராகவும் பஞ்சாயத்து கோர்ட்டிற்கு நமது நாயுடு அவர்கள் தலைவராகவும் பூளைமேடு மகாஜனங்களால் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார்கள். அப்பொழுதே தெருக்களைச் சுத்தம் செய்யவும் விளக்குகளை வைக்கவும் ஏற்பாடு செய்தார்கள்.

கட்சிப் பிளவுகளும் வேற்றுமைகளும் நிறைந்திருந்த மக்களை ஒற்றுமைப் படுத்தி "ஐக்கியமே சௌக்கியம்" என்னும் பாடத்தை அனைவருக்கும் கற்பித்தனர். நமது நாயுடு அவர்கள் கற்பித்த பாடத்தை மக்கள் அனைவரும் கற்றுக்கொண்டனர். தலைவராக இருந்து பஞ்சாயத்துக் கோர்ட்டு மூலமாக மக்களின் ஒற்றுமைக்காகச் செய்த காரியங்கள் என்றும் மறக்கற்பாலனவல்ல.

ஒருமுறை கோவை இரண்டாவது தொகுதி மக்களால் தேர்ந்தெடுக்கப்பெற்றுக் கோவை நகராண்மைக் கழக உறுப்பினர் (முனிசிபல் கவுன்சிலர்) ஆக அமர்ந்து மக்களுடைய நலன்களுக்குப் பணிகள் புரிந்தமையும் நினைக்கற்பாலனவாம்.

## மக்களாலும் மன்னராலும் பெற்ற மாண்பு.

உலகினில் தோன்றிய மக்களில் சிலர் தமது அரிய செய்கைகளினால் மக்களால் மதிக்கப்படுகின்றனர். சிலர் மன்னரால் மதிக்கப்படுகின்றனர். இவ்விருவராலும் ஒருமுகமாக மதிக்கப்படும் மாண்புடைய பெரியவரைக் காண்டல் அருமை, அருமை. அந்த அருமையான பெருந்தன்மை கொண்டவர் நமது நாயுடு அவர்கள்.

மக்களின் மதிப்பு:—தாம் செய்த அரும் செயல்களின் விளைவுகளில் ஒன்றான உயர்நிலைப் பள்ளியிலும், தொழிற் கல்லூரியிலும் அறிவு வளரப் பெற்று தமது வாழ்க்கையைச் செவ்வனே நடத்துவதற்கான திறமைகள் வாய்க்கப் பெற்றும், மற்றொன்றான தொழிற்சாலைகளிலும் நூலாலைகளிலும் வாழ்க்கைக்கு வேண்டிய வருவாய் வாய்க்கப் பெற்றும் மாணவரும் மற்றவரும் "அறிவு கொடுத்த அண்ணலே" என்றும், "உணவு கொடுத்த உத்தமனே" என்றும் மனமார எண்ணி வாயார வாழ்த்துகின்றனர்.

மன்னரின் மதிப்பு:—நமது நாயுடு அவர்களின் பொதுநலச் செயல்களைக்கண்டு அரசாங்கத்தார் மகிழ்ந்து தமது மதிப்பை அறிவிக்கும் வகையில் பட்டங்கள் வழங்கினர்; முதல் பட்டம் 'ராவ்பகதூர்' என்பது. இரண்டாவது பட்டம் 'திவான்பகதூர்' என்பது. இவ்விரு பட்டங்களும் முறையே 1934, 1943-ம் ஆண்டுகளில் வழங்கப்பட்டவை.

இவ்வாறு மக்களாலும் மன்னராலும் மதிக்கப்பெற்ற மாண்புடையவர் நமது நாயுடு அவர்கள் ஆவார்.

## திருமணம்.

நமது நாயுடு அவர்கள் அரிய குணங்களும் ஆற்றல்களும் பெற்றிருந்தாலும் அவை செழித்துப் பூத்து மணம் பெறச் செய்தவர் மனைவியாரேயாவர். பரமசிவனுக்குப் பர்வதராஜன் மகள் பார்வதி மனைவியாக வாய்த்ததைப் போல நமது நாயுடு அவர்களுக்குப் பர்வதப் பக்கலில் உள்ள புதுப்பாளையம் மணியம் ராமசாமி நாயுடு மகள் கிருஷ்ணம்மாள் மனைவியாக வாய்த்தார். கிருஷ்ணம்மாள் அவர்கள் பூளைமேட்டிற்கு வடமேற்கே 7–8 மைல்களில் உள்ள புதுப்பாளையம் என்னும் ஊரைச் சேர்ந்தவர். புதுப்பாளையம் குருரிஷி பர்வதம் என்னும் குருடுமலைப் பக்கத்தில் உள்ளது. புதுப்பாளையத்தைத் தெலுங்கில் "கொத்தபில்ல" என்பர். "கொத்தபில்ல" என்பதற்குத் தமிழில் புதுப் பெண் என்பது பொருள். திருமணம் செய்யும் பொழுது கிருஷ்ணம்மாள் நமது நாயுடு அவர்களின் காதல் உள்ளத்தில் புதுப்பெண் ஆக இருந்து மகிழ்ச்சி தந்ததைப் போலவே என்றும் புதுப் பெண் ஆகவே மகிழ்ச்சி தந்தார். இம்மகிழ்ச்சியில் தோன்றி நிலைத்துள்ள

மக்களாவார்:—

1. ஜி. ஆர். தாமோதரன்
2. ஜி. ஆர். கோவிந்தராஜன்
3. ஜி. ஆர். வெங்கடேசன்
4. ஜி. ஆர். வரதராஜன்
5. லட்சுமி அம்மாள்
6. ருக்குமணியம்மாள்

## உயரிய குணங்கள்.

நமது நாயுடு அவர்கள் எப்பொழுதும் உயரிய குணங்களையே எண்ணுபவர்; உரைப்பவர்; செய்பவர். நமது நாடு கல்வியிலும் கைத்தொழிலிலும் மேன்மையுற்று நமது மக்கள் வேண்டிய கல்வியும் அறிவும் பெற்றுச் சுதந்தரமாகத் தொழில் செய்து வாழ வேண்டுமென்று இடைவிடாமல் சொல்லுவார்கள். நமது மக்கள் யாவரும் சோம்பலின்றி உழு தொழிலைச் செய்ய வேண்டுமென்பதும் உழுது பயிர் செய்து வாழ்கின்றவரே உயர்ந்த வாழ்க்கையர் என்பதும் அவர்களின் கொள்கையாகும். எப்பொழுதும் இடைவிடாமல் அறநிலையத்தைப் பற்றியும் அதன் முன்னேற்றத்தைப் பற்றியும் அதற்கு என்னென்ன செய்யவேண்டும் என்பதைப்பற்றியுமே சிந்தித்துக் கொண்டிருப்பர். ஒரு தொழிலில் ஒரு இலட்சம் ஊதியம் வருமேயானால் அதைக்கண்டு மகிழ்வதுடன் மட்டும் அன்றி, இந்த இலட்சத்தையும் மக்களுக்குப் பயன்படும் துறையைக்கண்டே மகிழ்ச்சியடைவர். ஒரு ஆயிரம் பேர் ஒரு சமாராதனையிலோ விருந்திலேயோ உண்பாராயின் அதைக்கண்டு மகிழ்ச்சியடைவதோடு நின்றுவிடாமல் இனி ஒரு முறை பத்தாயிரம் பேர் உண்ணக் கண்டு மகிழவேண்டுமென எண்ணுவார்கள்.

எதையும் ஆர அமர்ந்து ஆலோசனை செய்து செய்யும் ஆற்றல் உள்ளவர்கள். யார் எதைச் சொன்னாலும் அதில் உண்மையைக் கண்டு கொள்ளும் திறமை வாய்ந்தவர். எதையும் அவசரப்பட்டுச் செய்யமாட்டார்; நன்றாக யோசித்தே செய்வர். தமது உள்ளத்தில் பதிந்துள்ள எண்ணங்களை முடிவுகளை யாவரும் அறிந்துகொள்ள முடியாது. தாம் செய்த காரியங்களை மாற்றாராலும் மாற்றுவிக்க முடியாது. தம்மைத் தாக்கிப் பேசினாலும், தாங்கிப் பேசினாலும் பொறுக்கும் ஆற்றல் வாய்ந்தவர். இவ்வரிய குணத்தால் தமது குடும்பத்திலும் வெளியிலும் தோன்றும் பல நிகழ்ச்சிகளையும் வென்றிருக்கின்றனர். சிலச் சில சமயம் கடிந்து பேசுவார். அவ்வாறு கடிந்து பேசுவது ஒருவனைத் திருத்துவதற்கேயாகும். தம்மிடம் தொழில்

செய்யும் ஆயிரக்கணக்கான மக்கள் எவ்வளவோ குற்றங்களைச் செய்திருப்பர். அக்குற்றங்களுக்காக அறிவுரை சொல்லியிருப்பாரேயன்றி அகற்றியிருக்க மாட்டார். தாம் எப்படி வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் உயர்ந்துள்ளாரோ அதைப் போலத் தம்மைச் சேர்ந்தவர்கள் யாவரும் தமது வாழ்க்கைத் தரங்களில் உயரல் வேண்டுமென்னும் உயர்ந்த கொள்கையை உடையவர். அவ்வாறு உயர்ந்தவர்களைக் கண்டு கண்டு மகிழ்பவர்.

இத்தகைய நமது நாயுடு அவர்களின் குண நலங்களைத் தொகுத்துக் கூறுவோமாயின் மக்களை அல்வழியினின்றும் அகற்றி நல் வழியில் செலுத்துவதில் சேனைத்தலைவன் போன்றவர்கள். ஒரு நாட்டின் முன்னேற்றங்களுக்கு ஆலோசனை சொல்வதில் அமைச்சன் போன்றவர்கள். ஒரு நாட்டு மக்களை நல்வழிப்படுத்தும் நீதிகளைச் செலுத்துவதில் அரசன் போன்றவர்கள். மக்களிடம் வைத்துள்ள அன்பினால் தாயைப் போன்றவர்கள். மக்களுக்கு நல்ல நெறிகளை உரைப்பதில் தந்தையைப் போன்றவர்கள்.



# நாயுடு அவர்களின் குமாரர்கள்



திரு. ஜி. ஆர். தாமோதரன், பி.எஸ்.ஸி. (எஞ்ஜினியரிங்)
டைரெக்டர்,
பி. எஸ். ஜி. அண்டு சன்ஸ் தர்மஸ்தாபன
தொழிற் பள்ளி.



திரு. ஜி. ஆர். கோவிந்தராஜன்,
மேனேஜிங் ஏஜண்டு,
கோவை பயனீர் மில்ஸ் லிமிடெட்.





திரு. ஜி. ஆர். வெங்கடேசன்,
மேனேஜர்,



திரு. ஜி. ஆர். வரதராஜன்,
(தற்சமயம் அமெரிக்காவில் தொழிற்க

# நாயுடு அவர்களின் கனிந்த கருத்துக்கள்

1. எப்பொழுதும் உயர்வான எண்ணங்களை எண்ணு. அவை முடிந்தாலும் முடியாவிட்டாலும் உயர்வுதான்.

2. ஒரு காரியம் ஒரு முறையில் முற்றுப்பெறவில்லை என்றால் அது இன்னொரு முறை செய்வதற்கு அநுபவம் ஆகும்.

3. ஒரு தொழிலில் பணத்தை விதைத்துப் பணத்தை விளைவிக்கவேண்டும். அவன்தான் பணப்பயிர் செய்யும் உழவன்.

4. மக்களைப் பெறுவது பெருமையல்ல ; பணம் படைப்பது பெருமையல்ல. அம் மக்களுக்குப் பணத்தைக் காப்பாற்றும் திறமையைக் கற்பிப்பதுதான் பெருமை.

5. பிறரை அண்டி ஊழியம் செய்து பிழைப்பவன் தாழ்ந்த குலத்தோன். சுதந்தரமாகத் தொழில்செய்து பிழைப்பவன் உயர்ந்த குலத்தோன்.

6. பிறருக்கு விருந்தளித்து உண்ணுதல் கண்டு மகிழாதவன் இண்டம் பிடித்தவன். மகிழ்பவன் தாராளன்.

7. பிறர் உடுப்பதும் உண்பதும் கண்டு பொறுமை கொள்பவன் பேயன். பெருமை கொள்பவன் தேவன்.

8. பணத்தைத் தேடிக் குவித்து மகிழ்வது பெருமை யன்று. அதை நல்ல தருமத்தில் கொடுத்து மகிழ்வதுதான் பெருமை.

9. முதலில் தன்னைத் திருத்தவேண்டும் ; பிறகு குடும்பத்தைத் திருத்தவேண்டும் ; பிறகு ஊரைத் திருத்தவேண்டும்; அப்பால் நாட்டைத் திருத்தவேண்டும்.

10. பத்திரிக்கைகளில் பெயர் வருவது புகழ்ச்சி. ஆனால் அவ்வாறு பெயர் வருதல் விளம்பரத்துக்கானால் இகழ்ச்சி.

11. ஒருவர் புகழவேண்டுமென்று காரியங்கள் செய்யவேண்டாம் ; பலவற்றை ஆராய்ந்து உள்ளத்திற்கு உகந்ததைச் செய்.

12. அர்ச்சகனும் கடவுளை அறிவான்; ஆசிரியனும் கடவுளை அறிவான். ஆனால் அர்ச்சகன் கடவுளைக் கல் என எண்ணக்கூடாது. ஆசிரியரும் மாணக்கர்களை மண் என எண்ணக்கூடாது.

13. உயர் பதவி அடைந்துவிட்டாய் என்று கர்வம் கொள்ளாதே. அப் பதவியை வகிக்கும் சுமை தலையில் உள்ளதென்று பணிவுகொள்.

14. பெற்றோர் இறந்தபின் ஆடம்பரமாகக் கருமங்கள் செய்து ஆரவாரம் செய்யாதே. பெற்றோர் இருக்கும்வரையும் மனம் மகிழக் காப்பாற்றுவாயாக.

15. இலாபம் வரும்பொழுது பணியாளர்களைப் போற்றிவிட்டு நஷ்டம் வரும் பொழுது தூற்றாதே. போற்றுவாயாக.

16. இலாபக் கணக்குகளை வரவு வைக்கும்பொழுதெல்லாம் தருமக் கணக்குகளில் செலவு எவ்வளவு வைத்தாய் என்று உன்னையே கேட்டுக்கொள்.

17. பூமி பலன் கொடுக்கவில்லையே என்று வருத்தப்படவேண்டாம். பூமிக்குச் சரியாகப் பாடுபடவில்லையே என்று வருத்தப்படு.

18. அதிக ஏகர் நிலம் வேண்டுமென்று ஆசைப்படாதே. குறைந்த ஏகர் பூமியில் நன்றாகப் பயிர்செய்வதற்காக ஆசைப்படு.

19. செலவு செய்வோன் புகழப்படுகிறான்; மிச்சம் பிடிப்போன் இகழப்படுவான். பின்னால், செலவு செய்வோன் இகழப்படுவான். மிச்சம் பிடிப்போன் புகழப்படுவான்.

20. வியாபாரப் படிப்புப் பள்ளிக்கூடத்தில் மட்டும் இல்லை. அது அநுபவத்திலும் இருக்கிறது.

21. வியாபாரிக்கு ஆடம்பரம் வேண்டும். விவசாயிக்கு ஆடம்பரம் வேண்டாம். ஏன்? ஆடம்பரம் வியாபாரிக்கு ஆதாயம் உண்டாக்கும். விவசாயிக்கு விரயம் உண்டாக்கும்.

22. பணம் வைத்துச் சூதாடுபவன் வஞ்சகன். பணம் இன்றிச் சூதாடுபவன் வீணன். இவ்விருவரும் கால தேவதையைக் கொல்லுகின்றனர்.

23. உன்னைப்போல் உன்னைச் சேர்ந்தவர்களையும் உயர்த்து. இல்லையேல் தனிமரம் ஆவாய்.

24. நீ பெரியவனானபின்பு நின் பகைமைக் குணங்களை விட்டுவிடு. இல்லையேல் சிறியவனாவாய்.

25. நல்லதுக்கும் பொல்லாததுக்கும் ஒருவன் வீட்டுக்குவரும் அதிகம்பேர் களைப்பற்றிப் பெருமை எண்ணவேண்டாம். அவ்வதிகம்பேர்களும் அவனைப்பற்றி என்ன பேசிக்கொள்ளுகிறார்களோ அதுதான் பெருமை.

26. காணாதபொழுது பிறர் தம்மைப்பற்றி என்ன என்ன பேசுவார்கள் என்று கவலைப்படவேண்டாம். ஏன்? கண்டபொழுது புகழ்ந்தும் காணாத பொழுது இகழ்ந்தும் பேசுவது சாதாரண மக்களின் வழக்கம்.

27. பணத்தைத் தேடு. அத்துடன் புகழையும் தேடு. பணத்தால் தம் மக்கள் மட்டும் பெருமை கொள்வர். புகழால் எல்லாப் பொதுமக்களும் பெருமைகொள்வர்.

28. உன்னால் கூடுமானவரையிலும் வயிற்றுப் பசிக்குப் பிச்சை போடுவதை விட அறிவுப்பசிக்குப் பிச்சைபோடு. ஏன்? வயிற்றுப்பசிப் பிச்சை வயிற்றுப்பசியை வராமல் தடுக்காது. அறிவுப்பசிப்பிச்சை வயிற்றுப் பசியைத் தணித்துவிடும்.

29. ஆயிரம் ஆண்மக்களைப் படிப்பிப்பதைக் காட்டிலும் ஒரு பெண்மகளைப் படிப்பிப்பது மேன்மை. ஏன்? எல்லா மக்களையும் முதன் முதல் படிப்பிப்பவள் பெண்மகள் அன்றோ?

30. இருபாலாரும் அவசியம் படிக்கவேண்டும். ஆனால் பெண்மகளின் படிப்பு குடும்பத்தை அகத்திலிருந்து காப்பதாய் இருக்கவேண்டும். ஆண்மகனின் படிப்பு குடும்பத்தைப் புறத்திலிருந்து காப்பதாய் இருக்க வேண்டும்.

31. ஒவ்வொருவரும் விடியற்காலையில் எழுந்து முந்தினநாள் செய்த காரியங் களைத் தெளிவு செய்துகொண்டு பிந்தினநாள் செய்வனவற்றைச் சிந்திக்க வேண்டும்.

32. புறக்கோயிலில் உள்ள கடவுள் நீ செய்வதை அறியார். அகக்கோயிலில் உள்ள கடவுள் நீ செய்வதோவ்வொன்றையும் தெரிந்துகொள்வார். நீ எதைச் செய்தாலும் அகக் கடவுளுக்குப் பயந்து தெளிந்து செய்.



# 1936-ல் பி. எஸ். ஜி. அண்டு சன்ஸ்' தர்மஸ்தாபன போர்டு மெம்பர்கள்.



திருவாளர்
பி. எஸ். ஜி. கெங்கா நாயுடு



திருவாளர் ஏ. டி. கிருஷ்ணசாமி முதலியார்



திருவாளர்
பி. எஸ். ஜி. வெங்கிடசாமி நாயு



திருவாளர்
பி. எஸ். சாத்தப்ப செட்டியார்



ராவ்பகதூர் பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு



திவான்பகதூர்
எம். வெங்கட்டராம அய்



திருவாளர்
ஸ். ஜி. நாராயணசாமி நாயுடு



திருவாளர் எஸ். பீமய்ய செட்டியார்



திருவாளர்
கே. கிருஷ்ணசாமி நாயுடு




சென்னை அரசாங்கக் கல்விமந்திரியாகவிருந்த கனம். குமாரசாமி ரெட்டியார் விஜயஞ்செய்தபோது எடுத்த படம்.

# ‘தருமத்துக்கு ஒரு கூறு.’

(கல்வி மந்திரி கனம் டி. எஸ். அவிஞசிலிங்கம் செட்டியார்.)

---

ஸ்ரீ பி.எஸ்.ஜி. ரங்கசாமி நாயுடு அவர்களை எனக்கு இளம் பிராயத்திலிருந்து தெரியும். மிகவும் நல்லவர். நிதானமானவர். தரும சிந்தனை உள்ளவர். அவருடைய தரும சிந்தனையே பி. எஸ். ஜி. தரும ஸ்தாபனம் ஆரம்பிக்கப்பட்டதற்கு முக்கிய காரணமாக இருந்ததெனக் கேள்விப்பட்டு இருக்கிறேன். அவர்கள் நான்கு சகோதரர்கள். அவர்கள் பாகம் பிரித்துக் கொள்ள நேர்ந்தபோது தருமத்தையும் ஒரு சகோதரனுக நாம் பாவித்துக் கொண்டால் என்ன என்று இவர் சொன்னதின்பேரில் அவர்களும் அன்புடன் இசைந்து, ஐந்து கூருகப் போட்டு, ஒரு கூறை தருமத்திற்கு ஒதுக்கி வைத்து மீதமான நான்கு கூறுகளைச் சகோதரர்களில் ஒவ்வொருவரும் எடுத்துக் கொண்டார்கள் என்று அவர் சொல்லக் கேட்டிருக்கிறேன். சுமார் முப்பது வருஷங்களுக்கு முன் ஆரம்பிக்கப்பட்ட இந்த தருமஸ்தாபனம் இப்போது மகத்தானதொரு கைத்தொழில் நிலையத்தையும், பெரியதொரு உயர்தரப் பள்ளியையும் இன்னும் பல தருமங்களையும் நடத்தி வருகிறது.

கோவையில் இது போன்ற பெரிய தரும நிலையங்கள் பல இல்லை. இந் நிலையங்கள் மற்ற செல்வம் படைத்த நண்பர்களுக்கு எடுத்துக்காட்டாக இருக்குமென்று நம்புகிறேன். கோவை சமீபத்தில் மிகுந்த செல்வம் பெற்றிருக்கிறது. ஆனல், அச்செல்வத்தின் பயனுக பெரிய கல்வி ஸ்தாபனங்களோ அல்லது வைத்தியசாலைகளோ அல்லது மக்களுக்குப் பயன்படக்கூடிய மற்ற ஸ்தாபனங்களோ அதிகமாக உண்டாகவில்லை. பொதுஜன சேவையே செல்வத்திற்கு அறிகுறியாக இருக்கவேண்டும்.

ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் திரு

என்பது தமிழ் வேதம். இதுவே செல்வந்தர்களுக்கு உண்மையான புகழைக் கொடுக்கக்கூடிய நெறியாகும். இந்த நெறியை ஸ்ரீ பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு அவர்கள் பின்பற்றினர். அவர்கள் உதாரணத்தை மற்ற செல்வந்தர்களும் பின்பற்றித் தங்களுக்கும் தங்கள் குடும்பத்தாருக்கும் அழியாப் புகழைத் தேடிக்கொள்வார்களாக.

பி. எஸ். ஜி. கைத்தொழில் பள்ளியை ஒரு இஞ்ஜினியரிங் காலேஜாக ஆக்க வேண்டுமென்றுகூட அவர் நினைத்திருந்தார். அங்ஙனம் செய்தால் அது கோவைக்கும் கோவை ஜில்லாவுக்குமே மிகப் பெருமையாக விருக்கும். அவருக்குப் பின் அதை நிர்வகித்து வரும் திரு. பி. எஸ். ஜி. கங்கா நாயுடு அவர்களும் உதார குணமும், பொதுஜன சேவையில் ஆர்வமும் மிகுதியாக உள்ளவர். ஆதலால், திரு. கங்கா நாயுடு அவர்கள் நிர்வாகத்திலும் இக் குடும்பத்தாரின் தர்மங்கள் சிறப்பாக வளரும் என்பதில் சந்தேகமில்லை.

இத்தகைய சுயநலமில்லாத சேவையே மக்கள் தேடிக்கொள்ளக் கூடிய பெருஞ் செல்வமாகும்.



# "தெரிந்து, தெளிந்து வினையாடுபவர்"

(கோவைக் கிழார்.)

---

ஒரு தொழிலைப் புரியும்போது அது வெற்றியடையவேண்டும் என்றால் தெரிதல், தெளிதல், வினை செய்யல் என்ற மூன்று செயல்களில் ஈடுபட வேண்டும் என்கிறார் தெய்வப் புலவர். ஒருவன் ஒரு தொழிலைச் செய்ய வேண்டும் என்றால், அத்தொழிலைத் தானே செய்யலாம். அல்லது பிறரைக் கொண்டு செய்விக்கலாம். அத்தொழில் பெரியதாக இருக்கும்போதுதான் ஒருவனால் செய்யமுடியாது. பிறர் உதவியைக்கொண்டே செய்யவேண்டி வரும். அப்பிறரைப்பொருத்தே இருக்கிறது அத்தொழிலில் வெற்றி. அப் பிறர் யார் என்று தெரிந்தெடுப்பது தலைவனுடைய செயல். அவன் அவ்வாறு தெரிந்தெடுக்கும்போது அத்தொழிலைச் செய்யும ஆட்கள் அத்தொழிலைச் செய்யக்கூடியவர்களா, அத்தொழிலைச் சரிவரச் செய்வார்களா என்று ஆராயவேண்டியது தலைவனுடைய பொறுப்பு அவ்வாறு தகுதி வாய்ந்த ஆளைத் தெரிந்தெடுப்பதே தெரிதல் என்பதாகும். அவ்வாறு ஒருவனைத் தெரிந்தெடுத்தபின் 'அவன் நம்பத் தக்கவன், அவனிடமே தொழிலை ஒப்புவிப்போம். அவன் மீது ஐயம் கொள்வதில்லை', என்று ஒரு முடிவுக்கு வந்தால்தான் எடுத்த செயல் வெற்றியடையும். ஐயம் கொள்ளு தல் தெரிந்தெடுப்பதற்கு முன்னரே இருக்கவேண்டும். தெரிந்தெடுத்த பின்னர் ஐயம் கொள்ளுதல் தப்பு. இதனை வெகு தெளிவாக ஆசிரியர்

> "தேரான் தெளிவும் தெரியாதான் கண் ஐயுறுவும்,
> தீரா இடும்பை தரும்" என்கிறார்.

இதன் உண்மை உலக இயல்பில் எங்கும் அறிவோம். இதுதான் தெளிதல் என்பது.

ஒரு ஆளைத் தெரிந்தெடுத்து அவன்மீது தெளிவும் உண்டான பின் அவனை அத்தொழிலில் இயக்கவைக்கவேண்டும். அதன் பின் அவன் மீது முழு நம்பிக்கையும் கொள்ளவேண்டும். நடு நடுவில் மாற்றுதலும் கூடாது. இதுதான் வினையாடல் என்பது. இவ்விதம் ஆட்களைத் தெரிந்தெடுத்துத் தெளிவு கொண்டு வினை செய்வித்து வெற்றி பெற்ற பெரியார்களின் வர லாறுகளை உலக சரித்திரத்தில் அடிக்கடி காண்கிறோம். நெப்போலியன் என்ற பிரான்சு தளகர்த்தன் வெற்றியடைந்ததற்கு அவன் தகுதியான ஆட்

களைத் தெரிந்தெடுத்ததே காரணம் என்று சரிதம் கூறுகிறது. நமது நாட்டில் பல மன்னர்கள் பிற நாட்டினரிடம் தோல்வி பெற்றதற்குத் தகுதி வாய்ந்த ஆட்களைத் தெரிந்தெடுக்காததே காரணம் என்பர். தாக்ஷணியத்தில் ஈடுபட்டால் தோல்வியே கிடைக்கும். தெரிந்தெடுத்த ஆட்களிடம் ஐயம் கொண்டதினாலேயே ஹிட்லர் தோல்வி பெற்றான். ஆங்கிலப் பிரதமர்களோ தெரிந்தெடுத்த தளகர்த்தர்களிடம் முழு நம்பிக்கை கொண்டார்கள். இவ்வெடுத்துக்காட்டுகள் தமிழ் மறையின் உண்மைகளைத் தெளிவுபடுத்துகின்றன.

இனி, இம் மூன்று பண்புகளிலும் சிறந்து விளங்கித் தம் செயல்களில் வெற்றி பெற்றவர் நமது நாட்டில் ஒருவர் இருந்தார். அவர் சமீபத்தில் இறைவன் திருவடி அடைந்திருக்கிறார். அவருடைய நினைவு கொண்டுதான் இச் சிறு கட்டுரை எழுதப்படுகிறது.

அப் பெரியார் இம் மூன்று பண்புகளேயன்றி மற்றொன்றையும் சிறப்பாகக்கொண்டிருந்தார். அது என்னவென்றால், தான் செய்யப்போகும் தொழிலும் தகுதியான தொழிலோ என்றும் ஆராய்ந்து அதனையும் தெரிந்தெடுத்தார். இந்த நிபுணத்துவம் மிகச் சிறந்தது.

பொதுமக்கள் ஊழியம் மிகச் சிறந்தது என்று கொண்டு அதனை அவர் போற்றினார். அதற்குத் தகுந்த வருவாய் வேண்டும் அல்லவா! அதற்காகப் பஞ்சாலைக் கலைத்தொழிலில் ஈடுபட்டார். பல ஆட்களுக்கு வேலையும் கிடைத்தது. தனக்கும் ஊழியத்திற்கு வருவாய் கிடைத்தது. இது தன்னலம் என்றும் கூறலாம். ஆனால் இந்தக் குறையை நீக்கக் கல்விச்சாலைகளில் ஈடுபட்டார். வெறும் கல்விச்சாலைகளை அறிவுவளர்ப்பதற்கு வைத்தபோதிலும், உணவு பெறுதற்கு கைத்தொழில் கல்விச்சாலை இன்றியமையாதது என்று கண்டார். அந்தச் சாலையை ஏற்படுத்தி அதனைப் பல முறைகளிலும் ஏற்றம் அடையச்செய்தார். இச்சாலைகளைத் தெரிந்தெடுத்து அவைகளில் ஈடுபட்டதே பெரிய பண்பாகும்.

இனி இத்தொழில்களில் வெற்றி பெறுதற்கு ஏற்ற தொழிலாளிகளைத் தெரிந்தெடுப்பதில் இவரைப்போல் வெற்றியடைந்தவர் இல்லை எனலாம். ஆட்களைத் தெரிந்தெடுத்து அவர்களிடம் வேலைவாங்குவது பெரிதல்ல. அத்தொழிலை முன்னேறச்செய்யும் எண்ணத்துடன் அதிகாரிகளைத் தன்வயப்படுத்தி, அவர்களிடம் உதவி பெறுதலே சிறப்புடையதாகும். அந்தக் காலங்களில் எந்தெந்த அதிகாரிகளிடம் உதவிபெற முடியுமோ அதனை நன்கறிந்து அவர்களை அழைத்து அவர்கட்கு நல்வரவு தந்து தான் கொண்ட எண்ணங்களை நிறைவேற்றி வெற்றியும் கண்டார். அது மிக அரிய செயலாகும். இதில் மிகத் தேர்ச்சி கொண்டவர் அப்பெரியார் — அன்றி வேறு எவர் இருந்தார்கள்? நாட்டு அரசியல் பெரியார்களை வரவேற்பது சகஜமே. ஆனால் சிறிய அதிகாரிகளையும் வரவேற்று தன் செயலை முற்றுவிக்கச் செய்து

கொள்வது "கருமமே கண்ணாயினார்" என்ற குணத்தின்பால்படும். நான் இந்த ஜில்லா கல்விச் சங்கத்தின் தலைவனாக இருந்தபோது என்னை அழைத்து தம் பள்ளியின் உணவு விடுதி ஆண்டு விழா நடத்திவைத்தார். எனக்கும் ஒரு மதிப்புத் தந்தாரே என்று வியந்தேன். பின்னாலேதான் அப்பள்ளியின் வெற்றிகரத்தன்மையை அறிந்தேன்.

இவ்வண்ணம் தெரிதல், தெளிதல், வினையாடல் என்ற திருவள்ளுவர் பண்புகளைத் தம் வாழ்க்கையில் புகுத்தி வெற்றியடைந்த பெரியார் யார்? இந்நினைவு மலர்த் தலைமகனான **திவான்பகதூர் பி. எஸ். ஜி. அரங்கசாமி நாயுடு அவர்களே** ஆவர்?



# "எங்கள் அண்ணா"

(ஸ்ரீ. என். வி. நாயுடு, எம். ஏ. பி. எல். எப். ஐ. ஏ. (லண்டன்.)
மானேஜர், யுனைடெட் இந்தியா அஷ்யூரன்ஸ்.)

"தோன்றில் புகழொடு தோன்றுக; அஃதிலார்
தோன்றலில் தோன்றாமை நன்று"

என்ற குறளுக்கு எடுத்துக் காட்டாகத் தோன்றியவர் எங்கள் அண்ணா. புகழொடு தோன்றியது மட்டுமன்று; தம் புகழ் நிலைபெறப் பல நிலையங்கள் நிறுவினர்; புகழொடு மறைந்தார்.

உலகில் டாடா, ராக்பெல்லர் போன்ற பெரியார்களோடு வைத்தெண்ணத் தக்கவர் எங்கள் அண்ணா. அவர் பெருமை பொருளீட்டலிலும் பட்டங்கள் பெறுதலிலும் மட்டும் நின்றதன்று; அவர் திரு ஊருணி நீர் நிறைந்தற்று; அவர் பட்டம் அந்நியர் மாட்டுக் கிடைத்ததாயினும் மக்கள் தந்த பெருமைக்கு அறிகுறி. மக்கள் ஆட்சியில் அவர் வாழ்ந்திருப்பாரேயானால் அவர் பண்புகள் சமூகத்துக்கு மேலும் பயன்பட்டிருக்கும்; அவர் பெருமை மேலும் சிறந்திருக்கும் என்பது திண்ணம்.

இருபது ஆண்டுகள் அவரை அண்மையிலும் சேய்மையிலும் அறியும் பேறு எனக்கு வாய்த்தது. பல துறைகளில் தொடர்பு பூண்டேன். அவற்றில் சில:

1941 நவம்பர். உலகத்தின் எதிர்காலம் இருள் சூழ்ந்ததாகக் காணப்பட்டது. மனிதன் வாழ்க்கை, தொழில்வளர்ச்சி, யாவும் பின்னோக்கி ஓடிக்கொண்டிருந்தன. 'இன்ஸ்டிட்யூட்' டைப் பற்றிய பேச்சு வந்தது. பல மணி நேரம் பேசினோம். பாஸிஸச் சுழலில் நாமும் அகப்பட்டுக்கொள்ளலாம். இந்தியா அடைந்துள்ள சிறிதளவு கைத்தொழில் முன்னேற்றமும் அழிந்துபோகலாம். அவ் வழிவை இயன்ற அளவு எதிர்க்க நம் 'இன்ஸ்டிட்யூட்' பயன் படக் கூடும். கைத்தொழில்கள் அழிந்தாலும் நாட்டின் பண்டைச் செல்வம், உழவு, அழியாது. எச் சமூக நிலையும் அதை அழிக்க முடியாது. அச் செல்வத்தைப் பெருக்குதல் வேண்டும்; அப்பெருக்கத்தில் 'இன்ஸ்டிட்யூட்' பணிபுரிய வேண்டும். அன்றி மக்கள் போராட்டத்தால் 'பாஸிஸ' சக்திகள் அழியுமாயின், எதிர்கால இந்தியாவில் பயிர்த் தொழில் முறைகள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நடந்து வந்தது போல இனியும்

நடவா. புது சாதனங்கள், புதுக் கருவிகள், புது முறைகள் — சிறப்பாக 'எலக்ட்ரிஸிட்டி' நம் நாட்டில் பெரும் மாறுதலை விளைவிக்கும், இன்ஸ்டிட்யூட் இம்மாறுதலை எதிர்பார்க்கவேண்டும்; வரவேற்கவேண்டும்; பயன்படுத்திக் கொள்ளவேண்டும்.

கைத்தொழிலைவிட உழவுத் தொழிலுக்குச் சிறப்புத் தந்தது 'இன்ஸ்டிட்யூட்'. புதுச் சக்திகளைப் பழைய தொழிலுடன் இணைத்தது 'இன்ஸ்டிட்யூட்'.

1944-ஜனவரி. உலகப் போரில் நிலை நம்பிக்கை ஊட்டத் தகுந்ததாக இருந்தது. கைத்தொழில் மீண்டும் தலை எடுத்துப் பெருவாரியான வருவாய் தந்தது. ஆக்க வேலைகளை உறுதிப்படுத்துவதிலும் எதிர்காலத்தை ஒட்டிப் புதுத் தொழிலை நிறுவுவதிலும் அவர் மனம் சென்றது. தொழில் முன்னேற்றத்திற்கு முதல் இன்றியமையாதது. தனி மனிதன் முதலைவிடப் பல மக்கள் சேமித்த முதல் சிறந்தது. கோவையில் அங்நகரக் கைத்தொழில் முன்னேற்றத்திற்கு ஏற்ப பாங்கோ, இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியோ ஏற்படவில்லை. வடநாட்டு பாங்குகளையும், தனி முதலாளிகளையும் கோவை நகர் முதலாளிகள் கடனுக்கு நாடவேண்டி இருந்தனர். இன்ஸ்யூரன்ஸிலும் பிறர் ஏஜண்ட் என்ற நிலைமையே. இங் நிலையை மாற்றிப் பணப்பெருக்கம் ஏற்பட்டதும் எதிர்கால ஆக்கத்திற்கு அடிகோல வேண்டுமென்ற எண்ணம் பலரிடம் காணப்படவில்லை யென அண்ணு வருந்தினுர். இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி ஏற்படுத்தி வளர்ப்பதைப் பற்றிப் பேசினேம். அதற்கேற்ப நல்ல முறையில் ஏற்படுத்தினுர். அஃதேபோன்று பாங்கும் ஏற்படுத்தி இருப்பார். அந்த அவாவையும் அதற்குறியனவற்றையும் குறித்து உரையாடியது என் அகக்கண் முன்பு நிற்கின்றது.

வெவ்வேறு சூழ் நிலைகளில் அவர் 'நுண் மாண் நுழைபுலம்' உருவிச் சென்றது வியக்கத் தக்கது. ஆக்க வேலையில் நுழையுமுன் அவர் மேற்கொண்ட ஆராய்ச்சியையும் தெளிவையும் மேற் கூறிய இரண்டும் எடுத்துக் காட்டும்.

இன்றைய சூழ் நிலைகள் இன்றைய மனிதனையும் அவன் இயக்கங்களையும் வரையறுக்கின்றன. ஆனுல், நாளைய சூழ் நிலைகளை எண்ணியாங்கு எய்துகிறுன் திண்மையுள்ளவன். சூழ் நிலையில் மாறுதல் உண்டாக்கி அவர் எண்ணியாங்கு வகுத்தது அவர் திண்மை. அச் சூழ் நிலையின் விளைவு இன்றைய பூளைமேட்டுச் செல்வம். அச்செல்வத்தில் சிறப்பாய் யான் கருதுவது அவர் புகழுடலைக் காட்டும் 'இன்ஸ்டிட்யூட்'.

# "துன்பங்களைபவர்"

(எ. கிருஷ்ணன், 6-வது பாரம் சர்வஜனப்பள்ளி.)

---

பொதுமக்கட்கும் அவர்கட்குத் தலைவராக விளங்கும் பெரு மக்கட்கும் இடையே மிகப்பெரிய தொரு வேறுபாடு என்றுமிருக்கிறது. வளமையின் விழுமிய உச்சியைத் தொட்டு விட்டபோதிலும், தொடர்ந்து தங்கள் கல்வி அறிவை வளர்ப்பதிலும், உலகியல் துறைகளிலும் பயிற்சி பெற்று முன்னேறுவதிலுமே பெரியவர்கள் கருத்து வைக்கிறார்கள். கருத்துக்களில் ஊன்றி எண்ணுகிறார்கள். எண்ணியதை எண்ணியவாறு திண்ணமாக முடிக்கிறார்கள்.

ஆண்டு முதிர்ச்சி ஒன்றினாலேயே வெற்றியைப் பெற இயலாது. பலருடன் பழகுவது வெற்றி தரும் என்று சிலர் எண்ணுகிறார்கள். அறிவு ஒழுக்கங்களிற் சிறந்த ஆன்றோர்களுடன் நெருங்கிப் பழகுவது நன்மையை விளைவிக்குமென்பது உண்மையாயினும் வெற்றி நிறைந்த புகழ் வாழ்வு வாழ அது ஒன்று மட்டும் போதுமானதல்ல.

வளப்பம் நிறைந்த வாழ்க்கை வாழ்பவர்கள் எல்லாம், தாங்கள் எத்தொழிலை மேற்கொண்டு செய்தாலும், அத்தொழில் மேல் தம் முழு எண்ணத்தையும் செலுத்தி, அதைப் பற்றிய முழு அறிவையும் பெற்று, செம்மையான முறையில் தொண்டாற்றியிருக்கிறார்கள். செல்வர்களாகவோ, தலைவர்களாகவோ யாரும் பிறந்து விடவில்லை. ஒவ்வொருவரும் தங்களை அவ்வாறு ஆக்கிக் கொள்ள விடாமுயற்சியும், வெற்றியில் விருப்பமும் அறிவுப் பெருக்கமும் தேவை.

உள்ளத்தில் உறுதி வேண்டும். உறுதியற்ற உழைப்பு பெரும் பயன் தராது. தொடர்ச்சியில்லாத பயிற்சியும் நன்மை அளிக்காது. 'இச் செயலைச் செய்து முடிப்பேன்' என்னும் தூய உள்ளத்தின் உறுதியுடன் தொடங்கப் படுகின்ற செயல்கள் யாவும் வெற்றியால் நடைபெறும். அப்படிச் செய்பவனே வாழ்க்கையில் உயர்ச்சி என்னும் உச்சியை அயர்ச்சியின்றி அடைகிறான். மக்களால் புகழப் படுகிறான்.

அவ்வாறு தங்களது உழைப்பால் உயர்ந்த பெருமக்கள் வரிசையில் வள்ளல் அரங்கசாமி நாயுடு அவர்களும் போற்றற்குறிய ஒரு




எத்தனை பிற காரியங்களிருந்த போதிலும் விடுதி ஆண்டு விழாக்களில் பிள்ளைகளோடு
கலந்து கொள்வதில் தவறமாட்டார்.

பி. எஸ். ஜி. அண்டு சன்ஸ் தர்மஸ்தாபன

# சர்வசன உயர்தரப் பள்ளி, பூளைமேடு, கோயமுத்தூர்.

வராவர். இவர் எல்லா வளங்களும் இனிதே நிரம்பிய கொங்கு நன்னாட்டிலே, அறிவாலும், திருவாலும், அனுபவத்தாலும் ஆன்ற பிற பண்புகளாலும், பெருமக்கள் பலரின் நன்மதிப்புக் குரிய, கோதறு குணத்தின் மிக்க திரு கோவிந்தசாமி நாயுடு அவர்களின் அருந்தவப் புதல்வனாய் அவதரித்து, தனது சலியா உழைப்பாலும், சற்குணத் தன்மையினாலும், பெரும் பொருளீட்டி, ஈட்டிய தேட்டை ஏற்ற முறையில் ஒள்ளிய செயல்கட்கு, அறம்புரி நெஞ்சொடு திறம்பட, அள்ளி, அள்ளி அளித்த மறுவிலா மனத்தாராகிய அண்ணல் அரங்கசாமி நாயுடு அவர்களை அறியாதார் ஒருவரும் இலர்.

"வறியார்க் கொன்றீவதே ஈகை மற்றெல்லாம்
குறி யெதிர்ப்பை நீரது உடைத்து"

என்ற வள்ளுவர் வாய்மொழிக் கிணங்க ஒரு பொருளும் இலாதார்க்கு இல்லையென்னாது வழங்கிய வள்ளல் அவர்.

"கொடுப்பதூ உம் துய்ப்பதூ உம் இல்லார்க்கு அடுக்கிய
கோடியுண் டாயினும் இல்"

என்ற பொய்யாமொழியின் பொன்மொழிக் கிணங்கவும் தான் சேர்த்த செல்வத்தைத் தானும் நுகர்ந்தார். மற்ற ஏழை எளியோர்க்கும் கொடுத்துதவினார். தாம் உதவும் செல்வம் நல்ல முறையில் நாட்டிற்குப் பயன்பட வேண்டும் என எண்ணினார். எல்லா நாடுகளையும் விடக் கல்வியிலும், கைத்தொழிலும் மிகவும் சீர்கேடான நிலையில் நம் நாடு உள்ளது என்பதையும், ஏழைமக்கள் நிரம்பிய வறுமை நாடு என்பதையும் நன்குணர்ந்தார். எனவே தொழில் முன்னேற்றத்திற்காகவும், கல்வி மறுமலர்ச்சிக்காகவும் செலவிடத் துணிந்தார்.

"பொருள், கருவி, காலம், வினை இடனொடு ஐந்தும்
இருள்தீர எண்ணிச் செயல்"

என்ற தெய்வப் புலவனின் தெள்ளிய வாக்குக் கிணங்கத்தாம் மேற்கொள்ளும் தொழிலுக்கு மேற்கூறிய ஐந்தும் பொருந்துகின்றனவா என ஆராய்ந்து, பின்னரே அத்தொழிலில் ஈடு பட்டார்.

அதாவது, கண்ணுக்கெட்டா கருமணற்காடாய்க் கிடந்த பூளைமேடு, இன்று தொழிற்சாலைகளும், கல்விச் சாலைகளும் மிக்க, கைத்தொழிற் களஞ்சியமாகவும் கல்விக் களஞ்சியமாகவும் திகழ்ந்து, பல்லாயிரக் கணக்கான மக்கள் குழுமியிருக்கும் பூளைமாநகரானமைக்குக் காரணம் அன்புக்குரிய அரும் பெரியாரிவர்தான் எனக் கூறுதல் மிகையாகாது. வேலையில்லாத் திண்டாட்டத்தினால் வேதனையுற்றுத் திரிந்திருந்தவர்கட்குத் திறம்பட்ட வாழ்க்கையை நடத்த நல்வழி காட்டினார். அதன் பொருட்டுப்

பெரியதொரு கைத்தொழிற்சாலையையும், பல ஆலைகளையும் நிறுவினார். தனது ஆருயிர் முதல் மகனாரை அன்னிய நாட்டிற்கு அனுப்பி, நம்நாட்டுக்குச் சிறந்த தொழில் முறைகளைக் கற்று வரும்படி ஏவினார்.

"அன்னசத்திரம் ஆயிரம் கட்டல்
ஆலயம் பதினாயிரம் நாட்டல்
அன்னயாவினும் புண்ணியம் கோடி
ஆங்கோரேழைக் கெழுத் தறிவித்தல்"

என பாட்டுக்கொரு பாவலன் பாரதி பகர்ந்ததைப் பல்லோர் பயனுற, பாங்குறச் செயலில் காட்டிய கரும வீரன். எண்ணற்ற ஏழை மக்களின் அறிவைத் துலக்க அரும் பெரும் பள்ளிகளும், கலாசாலைகளும் ஏற்படுத்தினார். இளமை வாழ்க்கைக் கல்வியற்று வீணாகக் கழிக்கும் விதியினைக் கொண்ட மாணவர்கட்கு, அறநெறி விடுதிகள் தோற்றுவித்து உவப்புடன், உணவும், உடையும் வழங்கினார். பல கோட்டங்களிலிருந்தும் ஏழை மாணவர்கள் இப்பெரியாரின் உதவியால் இலவசக் கல்வியும், இலவச உணவும் பெறுகிறார்கள். உதாரணமாக, சென்னை இராஜதானியிலேயே எல்லா ஆரம்பப் பள்ளிகளைக் காட்டிலும் சிறந்ததெனக் கருதப்படும் வாலாஜாபாத் இந்துமதப் பள்ளியினின்று, ஆண்டுக்கு ஒரு மாணவனைத் தம் பள்ளியிலும், விடுதியிலும் இலவசமாகச் சேர்த்துக் கொண்டு வந்தார். இப்பொழுதும் அதுபோன்றே சேர்த்துக் கொண்டு வருகிறார்கள். ஆகவே அன்னாரின் கொடைத்திறன் அன்னாரின் அருமைப் புதல்வர்கட்கும் உள்ளமை குறித்து நாம் வியக்காதிருக்க முடியாது. நிற்க.

நம் நாடு விவசாய நாடு. ஆனால் சோம்பேறிகள் நிறைந்தமையால் நிலத்தைப் பக்குவப் படுத்தித் தக்க பலன் அடையும் திறனில்லை. எனவே தரிசாகக் கிடந்த, பல நூற்றுக் கணக்கான காணி நிலங்களை வாங்கி நெல்லும், தெங்கும், கரும்பும் செழித்து வளரும் செழும் கழனிகளாக்கி நாட்டின் உழவுத் தொழிலுக்கு அச்சாணி போன்று பெரும் பண்ணைகளை ஏற்படுத்தினார். அதன் மூலம் பலமக்கள் தங்களது வாழ்க்கையை இன்புற நடத்தி அன்னாரை வாயார வாழ்த்தினார்கள்.

சுருங்கக் கூறின், உண்ண உணவின்றி, உடுக்க உடையின்றி, இருக்க இல்லமின்றி, அரை வயிற்றுக் கூழ் குடித்து, இயற்கை அன்னையின் எழிலால் முளைத்த பசும் புற்களின் மேல் படுத்து, அதன் அருகில் முளைத்திருக்கும் மரத்தின் கிளைகளைக் கூறையாகக் கொண்டு, மழையால் நனைந்து, குளிரால் வாடி நடுக்கமுற்றுத் தூங்கி எழும் ஏழையைத்தான் தனது அன்பனாகக் கொண்டார். அவ்வேழைகட்காகத் தனது வாழ்க்கையை நடத்தினார்.

அன்பு பெற்றும், ஆர்வ முற்றும், இன்பமுற்றும், ஈகைக் குணம் அவர் மனதில் இடம் பெற்றும், உண்மைக் குறைகல்லாயும், ஊரோடு கூடி

வாழ்ந்தும், எழில் பெற்றும், ஏழைகட்குதவி செய்தும், ஐயத்தை நீக்கியும், ஒழுங்கான வாழ்க்கை நடத்தியும், ஓங்கல் போல் உறுதியுற்றும் பலரால் புகழ்மாலை சூட்டப் பெற்று இந்நிலவுலகத்தை விட்டுப் பிரிந்தார். பரந்த நோக்கம் கொண்ட கொடைவள்ளலை நம் பாரத அன்னை தன் இருப்பிடத்தில் சேர்த்துக் கொண்டாள்.

"தோன்றிற் புகழொடு தோன்றுக, அஃதிலார்
தோன்றலில் தோன்றாமை நன்று"

என்பதற் கிணங்க புகழோடு தோன்றினர். புகழோடு வாழ்ந்தார். இன்று அவரின் பூதவுடல் அழிந்தாலும், அவரின் புகழ்பெற்ற புனித உடல் இந்நிலவுலகில் நின்று நிலவுகிறது. எனவே அன்னாரின் ஆத்மா சாந்தி அடைய எங்கும் நிறைந்த பரம் பொருளை வழுத்துவோம்.



# மறைந்த செல்வம்.

(திரு. சி. எஸ். இரத்தினசபாபதி முதலியார், கோவை.)

---

"தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று"

என்றார் வள்ளுவர். உண்மைப் புகழொடு திகழ்ந்தவர்கள் மிகச்சிலரே. அச் சிலரில், காலஞ்சென்ற என் நண்பர் ஸ்ரீ P. S. G. ரங்கசாமி நாயுடு அவர்கள் தலைசிறந்தவர் என்று சொன்னால் மிகையாகாது. தனக்கென்று வாழாமல் பிறர் நலனையே மிகுதியும் விழைந்து அரும்பாடுபட்டவர் திரு. நாயுடு அவர்கள். அவரது மறைவு நம்மெல்லோருக்கும் ஈடு செய்தற்கரியதொரு நஷ்டம் என்பதில் கிஞ்சித்தேனும் சந்தேகமில்லை. இம் மறைந்த செல்வத்தின் நினைவு மலர் ஒன்று வெளியிடப்படும் செய்தியையறிய மிகவும் மகிழ்கிறேன்.

சிரிய குடும்பத்திலுதித்த ஸ்ரீ நாயுடு அவர்களுக்கு பெருந்தனம் குடும்ப ஆஸ்தி என்ற முறையில் வந்தடைந்தாலும், அவர் என்றும் தன் முயற்சியைக் கைவிட்டவரன்று. அவர் இவ்வுலகில் அடைந்த உன்னத பதவிக்கும் பெரும் புகழுக்கும், முக்கிய காரணம் அவரது உழைப்பும் முயற்சியுந் தான்.

மாமியாரும் மருமகளும் பொதுவில் இவ்வுலகில் ஒன்றுபட்டு வாழ்வது அரிது. அஃதே போல் பூமகளும் நாமகளும் ஓர் இடத்தில் பொருந்திக் கிடக்கக் காண்பதுவும் அத்தி பூத்தாற் போலத்தான். ஆனால் என் நண்பர் இவ்விதிக்கோர் விலக்கு. திருமகளின் கடாக்ஷம் எவ்வளவு நிறைந்திருந்ததோ, அவ்வண்ணமே அவரிடம் கலைமகளின் கடாக்ஷமும் பொருந்தியிருந்தது. பொருட் செல்வத்துடன் கல்விச் செல்வமும் அவரிடம் குடி கொண்டிருந்தது. கல்வி என்று சொல்லும் போழ்து நான் வெறும் ஏட்டுப் படிப்பையோ அல்லது கலாசாலைக் கல்வியையோ மாத்திரம் குறிப்பிட வில்லை. உண்மையான கல்வியின் இலக்ஷணம், கற்ற கல்வியின் நியதிப்படி வாழ்க்கையைச் சீர்பெற அமைத்துக்கொளலே. உண்மைக் கல்வியின் நியதி யாவது சுய நலமற்றுத் தன்னுயிர்போல் மன்னுயிரைப் போற்றல்.

நாயுடு அவர்களின் நன்முயற்சியால் மெல்லிய இழைகள் நூற்கும் ஆலை (பயனீர் மில்ஸ்) நிறுவப்பட்டது.
அவ்வாலையின் டைரக்டர்களை முன்வரிசையில் காணலாம்.
நாயுடு அவர்களின் சகோதரர்களில் இருவரான பி. எஸ். ஜி. கெங்கா நாயுடு, பி. எஸ். ஜி. நாராயணசாமி நாயுடு

P S G & SONS CHARITIES

1929

திரு. நாயுடு அவர்களுக்கு அன்னூர் (ஜனவரி 1934ல்-) 'ராவ்பகதூர்' பட்டம்
பெற்றதைப் பாராட்டி பூளைமேடு போதுஜனங்கள் சார்பாக
திரு. V. கோபால் நாயுடு அவர்கள் தலைமையில் அளித்த உபசாரம்.

"தாமின் புறுவதுலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந்தார்."

என்று வகுத்தார் நம் பொய்யாமொழிப் புலவரும்.

மேற்கண்ட விதியைத் தம் வாழ்க்கையில் உறுதியாகக் கடைப் பிடித்தவராவர் ஸ்ரீ பி. எஸ். ஜி. அரங்கசாமி நாயுடு அவர்கள். உன்னத இலக்ஷிய புருடர். குறுகிய நோக்கமென்பதையறியார்.

மனிதனுக்கு உண்மையான மனச்சாந்தி பணத்தினுல் வருவதில்லை. நம் அக்கம் பக்கத்தோரும் நம் உற்றுர் உறவினரும் நம் பிரதேசத்தில் வசிக்கின்ற மற்றும் சகலரும் குறையின்றி வாழ்ந்தால், அந்நிலை நம்மை உறுதியாக ஆனந்த சாகரத்தில் ஆழ்த்தி மனச்சாந்தியை ஏற்படுத்தும். இவ்வுண்மையை உணர்ந்த ஸ்ரீ நாயுடு அவர்கள் தாம் வசித்த பிரதேசமாகிய பூளைமேட்டில் யாவரையும் எக்குறையுமின்றி வாழ்விக்கப் பெரு முயற்சிசெய்து அம் முயற்சியில் பெரும் வெற்றியையுமடைந்தார். கல்வியின்மையே எல்லா இன்னல்களுக்கும் பூர்வாங்க காரணம் என்பதையறிந்து, பூளைமேட்டில் சர்வஜன உயர்பள்ளியை ஸ்தாபித்தார். இப்பள்ளி பொதுமக்களுக்கு எவ்வளவு தூரம் சேவை செய்திருக்கின்ற தென்பதைப்பற்றி நான் அதிகம் சொல்ல அவசியமில்லை. ஸ்ரீ நாயுடு அவர்களின் பேருதவியில்லாமலிருந்தால், தற்சமயம் படித்து முன்னுக்கு வந்திருக்கும் அநேகர் கல்வி கற்றிருக்க இயலாதென்பதை யாரும் மறுக்க மாட்டார்கள். இத்தகைய பெரும் தர்ம காரியங்களையெல்லாம் அவர் பிரதிப் பிரயோஜனத்தை எதிர்பாராது நடத்தியது அவரது வாழ்வின் தூய்மையையும் உண்மைக் கொடையையும் புலப்படுத்துகின்றது.

கலாசாலைக்கல்வி மாத்திரம் இருந்தால் நம் நாடும், நம் சமூகமும் முன்னேற்றமடைய முடியாது; கலாசாலைக் கல்வியுடன் தொழிற் கல்வியும் இருந்தால் தான் நம் மக்கள் சுபிக்ஷமடைய ஏதுவாகும் என்ற உண்மையை ஸ்ரீ நாயுடு அவர்கள் நன்ருக உணர்ந்திருந்தார். ஆகையால் தான் பி. எஸ். ஜி. அண்டு சன்ஸ் தர்ம தொழிற்கல்வி ஸ்தாபனத்தின் வளர்ச்சிக்கு அரும் பாடு பட்டார்.

கல்வித்துறையிலும் சரி, தொழில்துறையிலும் சரி, பொருளாதாரத் துறையிலும் சரி, இராஜீயத்துறையிலும் சரி, மற்றெத்துறையிலும் சரி நம் நாட்டுக்கும், நம் நாட்டு மக்களுக்குப் பொதுவாகவும், பூளைமேட்டுப் பிரதேசத்திற்குப் பிரத்தியேகமாகவும் பெரும் சேவை செய்தவர் ஸ்ரீ நாயுடு; பொருட் செல்வத்தைவிட அவர் அருட் செல்வத்தில் மிகுதியும் திகழ்ந்தார்.

"அருட்செல்வம் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணுமுள"

ஸ்ரீ நாயுடுவின் விஷயத்தில் அவரது அருட்செல்வம் நன்கு சுடர்விட்டு எரிய ஒரு தூண்டுகோலாய் விளங்கிற்று அவரது பொருட் செல்வம்.

இத்தகைய செல்வத்தை நம்மிடையிருந்து நீக்கியது விதியின் விளையாட்டுத்தான்.



புகழ்பெறு பூனாமா நகரிற் புகழொடு தோன்றி விளங்கிய

திவான்பகதூர் உயர்திருவாளர்

# பூ. சா. கோ. அரங்கசாமி நாயுடு

அவர்கள் பொன்னுல கெய்திய தறிந்திரங்கிப் பாடிய

# கையறுநிலை.

---

கம்ம குலத்துக் கொருதிரு விளக்கே!
காங்கலார்
தம்மினத் துக்கோர் தனிப்பெருஞ் சிறப்பே!!
இம்மைப் பயனும் இரும்புகழ் ஈட்டி
உம்மைப் பெருஞ்சிறப் பெய்த உம்பர்
உலகமின் றுவந்து நல்வர வேற்க
உலந்து யாமிங் குறுதுய ருறவே
பிரிந்த வெங்கள் பெருந்தகை யண்ணல்
விரிகதிர் தோன்றி வீழ்வதன் முன்னே
வீடு தொடங்கி வேடபட் டியிடை
யீடு சிறிதும் இன்றி யிடையிடு
நிலைகள் பலவும் நிறையச் சென்று
அலைகட லலைகரை கடவா திருக்கக்
கரைசெய் யிறையெனக் கடமை யுறுத்தி
அவரவர் கடமை ஆற்றக் கதிரென
இயங்கிய கதிரவ னேயின் றிந்நில
வியக்கம் ஒழிந்தபின் இம்முறை யினியார்
மேற்கொளத் தக்கார் மேதகை யோயே!
போற்றுறும் இல்லும் பூனாமா நகரும்
ஏற்றம் உற்றிடும் நாடும் எங்கும்
கடமைகள் யாவும் கருத்துடன் செய்தாய்
அடைவுடன் அவற்றை அளந்து கூற
இயலா நிலையில் இன்றுளம் தளர்ந்து
தயங்கவுன் பிரிவெமைத் தாக்கு கின்றதால்
தோன்றிற் புகழொடு தோன்றுக வென்றவப்
பொய்யிற் புலவன் புகழுரைக் கேற்ப
எய்யா நல்லிசை எய்திய எம்மோய்
என்றும் இறைவன் இணையடி யணைந்துநீ
இன்புற் றிருக்கவவ் விறைவன் திருவருள்
நல்குகவென்றே நாங்கள்
இறைஞ்சிப் போற்றுவம் அவன்தாள் இணையே.

—சிந்தாமணி.

# "நான் கண்ட திவான்பகதூர்"

(திரு. பி. எஸ். வேணுகோபால்சாமி நாயுடு.)

---

நான் இதுவரையும் எவ்வளவோ திவான் பகதூர்களைக் கண்டிருக்கிறேன். கேட்டிருக்கிறேன். அவர்களில் ஒரு சிலரே யான் கண்ட திவான் பகதூரைப் போல என் கருத்தில் காட்சியளித்தனர். ஏன்? நான் பிறந்த ஊரில், நான் வாழ்ந்த ஊரில், எனது வாழ்க்கை நலன்கள் எல்லாம் கருக்கொண்டு ஓர் உருவெடுத்த ஊரில், கண்ட திவான்பகதூரைப்போல வேறு யாவரேனும் காட்சியளிக்க முடியுமா? திவான்களாகவோ, பகதூர்களாகவோ ஒரு சிலர் இருக்கலாம். ஆனால் திவானும், பகதூரும் ஆக ஒருவர் இருத்தலைக் காண்பது அருமையினும் அருமை. (திவான் - அமைச்சன்; பகதூர் - வீரன்.)

அமைச்சத் தன்மையும், வீரத்தன்மையும் ஒருங்கே ஒருவரிடத்தில் அமைந்திருத்தலை ஆராய்ந்து, தீர்மானித்த பின்னர் அரசாங்கத்தார் குடிமக்களுக்குப் பட்டங்கொடுத்தனரா? அரசாங்கத்தார் — பிரிட்டிஷ் அரசாங்கத்தார் — குடிமக்களின் பெருமையை ஏதோ ஒரு விதத்தில் அளந்து, மதித்து, அம் மதிப்பிற்கடையாளமாகத் திவான்பகதூர் முதலிய பட்டங்களைக் கொடுத்தனர். அப்பட்டங்களைப் பெற்றவர், திவான் என்றும், பகதூர் என்றும் சொல்லப்படும் சொற்களின் பொருள்களுக்குப் பாத்திரமானவர்களா? ஆகாதவர்களா? என்பதைப் பட்டங்கள் தந்த அரசாங்கத்தார் ஆராய்ந்தார்களல்லர். ஆராயின், திவான்பகதூர் என்ற சொற்களின் பொருள்களுக்குத் தகுந்தவரே நான் கண்ட திவான் பகதூர் ஆவர்.

பட்டங்கள் தருவதும், பெறுவதும் இன்றைய வழக்கமேயன்று. மிக மிகப் பழங்கால வழக்கமேயாகும். எனவே, இவ்வழக்கத்தை முற்காலம், இடைக்காலம், தற்காலம் என மூவகைக் காலங்களில் வைத்துக் கூறுகிறேன்.

முற்காலம்—காவிதி, எட்டி முதலியன.
இடைக்காலம்—பிருமராயன், பல்லவன் முதலியன.
தற்காலம்—ராவ்சாகெப், திவான் பகதூர் முதலியன.

ஆனால், திவான், பகதூர் எனும் மொழிகள் தமிழ் மொழிகளும் அன்று. சமஸ்கிருத மொழிகளும் அன்று. அப்பட்டங்களைத் தந்த பிரிட்டிஷாரின் ஆங்கில மொழிகளும் அன்று. ஆங்கிலேயருக்கு முன் இந்தியாவை அரசாண்ட முகம்மதியரின் மொழிகளேயாகும். எனவே, திவான்பகதூர் என்பன அரபு மொழிகள்.

முகம்மதிய அரசாங்கம் அவிந்து, ஆங்கிலேய அரசாங்கம் அரும்பிய நாட்டில் முகம்மதிய மன்னரின் பல பழக்க வழக்கங்கள் மாறின. ஆனால், இப்பட்டப் பெயர்கள் மட்டும் மாறவில்லை. முகம்மதியரின் அரபு மொழியின் பட்டப் பெயர்களையே இந்திய மக்களுக்குத் தந்தனர்; தாங்கினர். இவ்வாறு பெறத் தாங்கியவர்களில் நான் கண்ட திவான்பகதூர் என்பவர் பூளைமேடு பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு அவர்கள். உயர் திருவாளர் பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு அவர்களைப் பொதுவாக கோவைமா வட்டம் முழுவதிலும் திவான் பகதூர் நாயுடு என்றே அழைப்பர். குறிப்பாகக் கம்மவார் சமூகம் முழுவதும் திவான்பகதூர் என்றே சிறப்பாக அழைக்கும். ஏன்? கம்மவார் சமூகத்தில் திவான்பகதூர் பட்டம் பெற்றவர் பெருநிலக்கிழவர் பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு அவர்களைத் தவிர வேறு யாவரும் இலர் என்னும் பெருமையாலேயாம். அப்பெருமைக் குரிய அரிய தன்மைகள் திவான்பகதூர் நாயுடு அவர்களிடம் இருந்தன என்பதை மகிழ்ச்சியுடன் எழுதுகின்றேன்.

## 1. திவான்.

1. திவான் என்னும் அமைச்சனைப்பற்றித் திருவள்ளுவர் "வன்கண், குடிகாத்தல், கற்று அறிதல் ஆள் வினையோடு ஐந்துடன் மாண்டது அமைச்சு" என அமைச்சரின் தன்மைகளைச் சொல்லினர். 1. கண்டிப்பு, 2. குடிகளைக் காப்பாற்றுதல், 3. கற்றல், 4. அறிதல், 5. முயற்சியுடைமை' என்னும் இவ்வைந்து தன்மைகளில் சிறப்புற்றவர் அமைச்சர் என்பதாம். இவ்வைந்து சீரிய குணங்களும் திவான்பகதூர் நாயுடு அவர்களின் உடன் பிறந்தனவாகும். உடன்பிறப்பு இரண்டு வகைப்படும். ஒன்று உடலுடன் பிறந்தது. மற்றொன்று உள்ளத்துடன் பிறந்தது. இவ்விருவகை உடன்பிறப்புக்களும் திவான்பகதூர் நாயுடு அவர்களுக்கு ஓரே எண்ணிக்கையில். 5 என்னும் எண்ணிக்கையில் அமைந்துள்ளன. மற்றும், குடும்ப வரவில் 5-ல் ஒரு பகுதியை ஆண்டுதோறும் அறஞ்செய உதவினர்.

1. உடலின் உடன்பிறப்பு:—திருவாளர்கள் 1. பி. எஸ். ஜி. வேங்கடசாமி நாயுடு, 2. பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு, 3. பி. எஸ். ஜி. கெங்கா

நாயுடு, 4. பி. எஸ். ஜி. நாராயணசாமி நாயுடு, 5. திருமிகு. தாயம்மாள் என்ற ரங்கம்மாள்.

2. உளத்தின் உடன்பிறப்பு:—1. வன்கண், 2. குடிகாத்தல், 3. கற்றல், 4. அறிதல், 5. ஆள்வினை. இவர் தகப்பனுர் ஸ்ரீமான். பி. எஸ். கோவிந்தசாமி நாயுடு, தாயார் ஸ்ரீமதி மங்கம்மாள் அவர்கள் ஆகியவர்களின் உடல், உள்ளங்களில் ஊறிக்கருக்கொண்டு தோன்றியனவே இந்த ஐவகைப் பிறப்புக் குணங்களும்.

இந்த ஐந்துவகை உடன் பிறப்பாளர்களுக்கும் இந்த ஐந்துவகைக் குணங்கள் அமைந்திருந்தன எனினும் அரசாங்கத்தார் அறிவுடை யொருவனை அரசும் விரும்பும் என்றபடி இந்த ஐவரில் ஒருவரை ஐவரும் ஆகத் தேர்ந் தெடுத்து ஐவகைக் குணங்களின் பிரதிநிதியாக ஆள் வினையாளர் பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு அவர்களுக்கு 'திவான்பகதூர்' பட்டத்தைப் பண்புடன் வழங்கினர்.

சீதாபிராட்டியாரை அடைவதற்கு, அன்பு, நாண், ஒப்புரவு, கண் ணோட்டம், வாய்மை, முதலிய குணங்கள் நான் முந்தி, நீ முந்தி எனப் பிணங்கிக்கொண்டன என்பதைக் கம்ப நாடர்

" குணங்களை என் கூறுவது கொம்பினைச்
சேர்ந்து அவை உய்யப் பிணங்குவன "

எனக் கூறுவதைப் போல அன்றைய

அரசாங்கத்தார் நாயுடு அவர்களின் தகுதிக்கு ஏற்ப எப்பட்டம் கொடுக்கலாமென முந்தி முந்தி வந்தமை நேரில் அறிந்துள்ளேன். முதன் முதல் "ராவ்சாகிப்" பட்டம் கொடுக்கலாமென்று நினைத்தவர்களே அதைவிட மேலான "ராவ்பகதூர்" பட்டம் கொடுக்கலாமென முன்வந்து கொடுத்தனர். பின்னர் திவான்பகதூர் பட்டமும் கொடுத்தனர். சர்க்காருக்கு நலமோ, அடிமையோ செய்துவந்த பட்டம் போன்றதல்ல இந்நாயுடுகாருக்கு வந்த பட்டம். இவரும், இவரது குடும்பமும் பொதுமக்கட்குச் செய்துவந்த பல நலன்களால் பெற்ற பட்டமாகும். அப்பட்டத்திற்கேற்ப திவான் என்னும் அமைச்சுக்குணங்கள் ஐந்தும் இவரிடத்தில் உண்டு அவற்றைச் சுருக்கமாகக் காண்போம்.

1. இவரின் ஆளுகையில் உள்ள தொழில் சாலையிலும், பஞ்சாலை களிலும், பேங்கிலும், பண்ணைகளிலும், ஆயிரம் ஆயிரம் மக்கள் வேலைசெய்

கின்றனர். இவர்கள் அனைவரிடத்திலும் வேலை கொடுப்பதற்கும், வேலை வாங்குவதற்கும் ஒழுங்காக வைத்துக்கொள்ளுவதற்கும் ஒரு வரம்பு, ஒரு கண்டிப்பு இல்லாவிட்டால் இத்தனை ஆயிரம்பேர்களை எப்படி நிர்வகிக்க முடியும்! இத்தகைய நிர்வாகத்தில் இவருக்கிருந்த கண்டிப்பு ஒரு தனித் தன்மையானது. உருவாக்கி வார்த்த உருக்கைப் போன்றது. அரிமா நோக்கைப் போன்றது.

2. இவரைச் சேர்ந்த இனக்குடிமக்களை ஆதரிக்கும் தன்மை இவருக் கென்றே தனிமைக் குணமாகச் சிறந்திருந்தது. சாதாரண வாழ்க்கையிலும், தரத்திலும் இருந்தவர்கள் இவரிடம் சேர்ந்து வேலை செய்து வாழ்க்கைத் தரத்தில் உயர்ந்திருக்கின்றனர். தன்னைப்போலவே தன்னைச் சேர்ந்தவர்களும் வாழ்க்கைத் தரத்தில் உயரல் வேண்டுமென்பதே இவரின் உன்னத நோக்கம். இஃது வெறும் நோக்கம் மட்டும் அன்று. மனதளவில் அன்று. சொல்லள வில் அன்று. காரிய அளவில் காணலாம். எத்தனையோபேர் தன்னிடம் அமர்ந்து வேலை செய்தவர் 1000, 10,000 ரூபாய்கள் வரையிலும் மேலும் பொருள்களை ஈட்டியதுடன் வாழ்க்கைத் தரம் உயர்ந்து இன்று மேல்நிலையில் உள்ளனர். இது உயர்வு நவிற்சியன்று.

3. கற்றல் என்பது பல நூல்களைப் பல ஆண்டுகள் பல வகுப்பு களில் அமர்ந்து முறையே கற்றல் என்று சொல்லுவர். ஆனால் கல்வி கற்கும் பொதுவான முறையும் இதுவே. ஆனால் ஒரு சிலர் இம்முறைக்கு முற்றும் விலக்கானவர். மகாகவி, ரவீந்திரர் படித்த பள்ளிப்படிப்பு மிகவும் குறைவே. உலகத்தை ஆட்டிவைத்த ஹிட்லரும், அவ்வாட்டத்தில் ஆட்டங்கொடுக்காத சர்ச்சிலும், அவ்வாட்டத்தை அடக்கிவைத்த ஸ்டாலினும் எப்பள்ளியில் படித்து எப்பட்டங்களைப் பெற்றவர்? இன்னோரனைவரும் உலகம் என்ற பள்ளியில் அனுபவம் என்ற ஆசிரியன்பால் கற்றவராவர். அவ்வாறே திவான் பகதூர் அவர்களும் கற்றுத் தேர்ந்தவர்.

4. அறிவு :—கல்வி அறிவு, கேள்வி அறிவு என இருவகைப்படும். இவ்விருவகையிலும் மக்கள் அறிவைப் பெறுகின்றனர். அவற்றுள் திவான் பகதூர் கேள்வி அறிவு மிக்குள்ளவர். படித்துப் பட்டம் பெற்ற அறிவாளி களில் பலரும் இவர் கேள்வி யறிவின் நுண்மையைக் கேட்டறிந்து வியக்கின் றனர். பல துறைகளில் கைதேர்ந்த நிபுணர்களும் இவரின் கேள்வியறிவைக் கேட்டறிந்து நடக்கின்றனர். திவான்பகதூரின் கேள்வியறிவுத் தோற்றங்களே உலகப் பிரசித்தி பெற்ற அற நிலையங்களும் பஞ்சாலைகளும் பண்ணைகளும் ஆகும்.

5. ஆள்வினை :—மேன்மேலும் இடைவிடாமல் செய்யும் முயற்சிக்கு ஆள்வினை என்று பெயர். சோர்வில்லாத முயற்சியின் வடிவமே திவான் பகதூர் ஆவார். "உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளல்" என்னும் திருவள்ளுவர் திருமொழி இவர் போன்றாரை எண்ணிச் சொன்னதாகும். எப்பொழுதும் உயரல் வேண்டும், உயரல் வேண்டும் என்னும் எண்ணமும் முயற்சியுமே இவர் உள்ளத்தில் இடைவிடாமல் ஒலித்துக்கொண்டிருக்கும். ஒவ்வொருவரும் பிறரிடம் அடிமைத் தொழில் செய்யாமல் சுதந்தரமாகத் தொழில் செய்ய வேண்டுமென்பதுவே இவரின் மெய்ம்முயற்சியாகும். திவான்பகதூரின் திருவுள்ளத்தில் ஊறி, எழுந்த பெருமுயற்சியின் புறவடிவத் தோற்றங்களே உலகப் பிரசித்தி பெற்ற பி. எஸ். ஜி. அற நிலையங்களும் பஞ்சாலைகளும் உழவுப்பண்ணைகளும் பிறவும் ஆகும்.

## 2. பகதூர்.

போர்க்களம் சென்று போர் செய்து மடிவதையும் வெல்வதையுமே வீரம் என இப்பொழுது எண்ணுகின்றனர். எழுதுகின்றனர். இயம்புகின்றனர். ஆனால், மக்கள் வெவ்வேறு துறைகளில் பலநாள் முயன்று, முயன்று பின்னர் அத்துறையில் வெற்றி பெறுகின்றனர். அவர் வீரர் அல்லவா? அவ்வாறே பலப்பல அருமையான தொழில் துறைகள் எல்லாம் முறையுறச் செய்து நிறைவுறுத்திய திவான்பகதூர் வீரர் அல்லவா? எனவே திவான்பகதூர் தொழில், பெருங்கைத் தொழில். உயர்ந்த உழவுத் தொழில் எனவே, தொழில் வீரர், உழவு வீரர் ஆவார்.

திவான், பகதூர் என்னும் வாசகங்களுக்கு வாச்சியமாக இருப்பவர் வாச்சிய வீரர் பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு அவர்கள் ஆவார். ஆகவே, நான் கண்ட திவான்பகதூர் பூளைமேட்டுப் புண்ணியவான் பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு அவர்கள்.

நான்கு ஆண் மக்களுடன் இரு பெண்களையும் ஈன்றெடுத்து புகழுடன் மண்ணுலகில் வாழ்ந்து விண்ணுலகெய்திய இப்பெரியாரின் ஆன்மா சாந்தி பெறப் பிரார்த்திக்கின்றேன்.





சர்வசன உயர்பள்ளி மாணவர்கள் 1925—26ல் நடித்த
தமிழ் நாடகமாகிய "காதலர் கண்கள்" என்பதில் பங்கெடுத்துக் கொண்டவர்களில்
சிறப்பாக ஞாபகார்த்த நிதிக் கமிட்டித் தலைவர்
கே. கிருஷ்ணசாமி நாயுடு, காரியதரிசி டாக்டர் என். ஆர். நாராயணசாமி நாயுடு,
அங்கத்தினர் ஜி. வி. துரைசாமி நாயுடு ஆகியோரைக் காணலாம்.

கோவை, பூளைமேடு

உயர்திருவாளர் திவான்பகதூர்

# பி. எஸ். ஜி. அரங்கசாமி நாயுடு அவர்கள்

**சித்திரபானு-ஸூ மார்கழி-மீ 1-ம் தேதி (14—12—1882) பிறந்து**

**சர்வஜித்து-ஸூ சித்திரை-மீ 22-ம் நாள் (5—5—1947)**

**காலஞ்சென்றது குறித்துப் பாடிய**

# இரங்கற்பா.

---

**நேரிசையாசிரியப்பா.**

உலகம் வியக்கப் பலகலை யுணர்ந்தோர்
ஒன்றுபட்டுரைத்த நன்றுடை முதுமொழி
"அல்லவை செய்தார்க் கறங் கூற்றாகும்"
"கடவுளை நம்பினோர் கைவிடப்படார்"
"தருமம் தலைகாக்கும் தக்கவை செய்மின்"
என்பனவன்றோ? இவையுமித்திங்கள்
இருபானிரண்டில் இலையமதி நாளில்
பொய் படுமாயிற் புகலுதற்குளதென்?
உழைப்பால் உயர்ந்த உத்தமன் காலம்
பொருளென வுணர்ந்து போற்றித்திரட்டினன்
முயற்சியுடையார் இகழ்ச்சியடையாரெனும்
முப்பால் மொழிக்குச் செப்பாயமைந்தோன்
கல்விச் சாலையும் கைத்தொழிற்சாலையும்
வாணிபம் பேணும் மாணுறு நிலையமும்
கண்டனன்; அவற்றின் கண்ணெனத் திகழ்ந்தனன்;
கம்மவார் குலத்துக் **கண்**ணெனும் மக்கள்
இலவசக் கல்வி யெய்தியும் கைத்தொழில்
வாணிபத் துறைகளில் வளம் பெற்றோங்கவும்
ஆவன செய்தோன், அறத்துறை நின்றோன்

கடவுட் கொள்கையிற் றிடமுடை யுளத்தோன்
வேடபட்டியோர் தேடா மேட்டினை
விழைந்து தன் முயற்சியால் விளை நிலமாக்கித்
தேடும் மேடாச் செய்த நல் விஞ்சையன்
கொங்கின் தலைநகர்க் கோவையின் கீழ்பால்
பூளைமேடெனப் புகலு நற்பதியோன்
பி. எஸ். ஜி. எனும் பெருங்குடிப் பிறந்தோன்
அரங்கசாமி யென்றழைக்கத் தகுந்தோன்
திவான்பகதூர் எனச் செப்பிடும் பட்டம்
அரசினர் வழங்க அன்பா யேற்றோன்
வழுவில் பழயன வழாப் பண்பும்
பயனில் புதியன பற்றுத்திறனும்
ஒருமுறை காணின் அவர் உறுகுணம் யாவையும்
கணித்துக் கூறலும் கண்டோர் யாவரும்
நல்லவர் என்றே நயக்கும் செவ்வியும்
வாய்ந்த எம் வள்ளல் இவ் வையகத்துள்ள
சுற்றமும் நட்பும் துணைபெறும் ஏழையும்
மக்களும் பிறரும் மயங்கி அரற்றிட
இம்பர் வாழ்க்கையை இறைவன் பிரித்தனன்
இறைவன் பொய்த்தனன் கொல்லோ! அன்றி
ஆகமம் பொய்யோ! அளவைகள் பொய்யோ!
பொய் படுமொன்றைப் புகல்வீர் அன்றி
சாங்கியக் கொள்கையே தலைசிறந்ததுவென
இயம்புதற்கேற்ற எடுத்துக்காட்டோ
யாதென அறியாத் தீது சூழிருளில்
புகுத்திய பெரியோன் பிரிவால்
இனைந்தனன் யானே, இனைந்தனம் யாமே!

**A. M. குப்புசாமி.**



ஸ்ரீ

கோயமுத்தூர் பூளமேடு

திவான்பகதூர்

# பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு அவர்கள்

பிரிவாற்றுமையைக் குறித்த

# இரங்கற்பா

**அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.**

---

**கா. அ. ஷண்முக முதலியார்,**
மானேஜிங் டைரெக்டர்,
குடியேற்றம் திருமகள் மில்ஸ் லிமிடெட்.

சீராரும் பூளை மேட்டில் சிறந்தகா கல்லார் என்னப்
பேராரும் குடியில் தோன்றிப் பெற்றவர் மனங்க ளிக்க
ஊராார்க்கும் பிறர்க்கும் சால ஊக்கமும் தொழிலும் தந்தாய்
ஆராரும் புகழ நின்ற ஐயனே அரங்க சாமீ! (1)

பேர்சொல்லிப் பல்லோர் வாழப் பெருங்கலைக் கழகம் கண்டாய்,
ஏர்செல்ல உழுது மண்ணை இரும்பெரும் விளைவு கண்டாய்;
சீர்பெறும் அரசாங் கத்தால் சிறப்புறு பெயரும் கொண்டாய்;
சார்பவர் எவர்க்கும் தேவ தருவெனக் கொடுத்த ளித்தாய். (2)

தந்தையைத் தாயைக் காணச் சார்ந்தங்கு சென்றிட் டாயோ?
சிந்தையில் மனைவி பக்கல் செல்லவே நினைந்தாய் கொல்லோ?
எந்தையே எந்தை யேஎன் றேங்கிநின் ஆறு மக்கள்
நொந்தழு கின்றார்க் கான நுவலொன்றும் நுவல்கி லாயோ? (3)

மக்களுக் கான வெல்லாம் வளம்பெற நிறைத்து வைத்தாய்;
மைக்கடல் மேனி மாயன் வைகுமா வைகுந் தத்தில்,
புக்கடி யவர்கு ழாத்தில் பூவையோ டிருந்து வாழ்தல்
தக்கதென் றடைந்தாய் போலும் தருமமே உருக்கொண் டன்னோய்! (4)

அய்யநின் பூத யாக்கை அழிந்ததாம் எனினும் மக்கள்,
உய்யமா நிலத்து நீசெய் உயர்தொழில் இடங்கள் தோறும்;
செய்யநின் புகழு டம்பு திகழ்கின்ற வெந்த நாளும்
வையகத் துனது கீர்த்தி வளர்ந்தெழுந் தோங்கு மன்றே. (5)

# "பண்பாடுள்ளவர்"

(திரு. வி. சி. வெள்ளிங்கிரிக் கவுண்டர்)

---

காலம் சென்ற பி. எஸ். ஜீ. ரங்கசாமி நாயுடு அவர்கள் எனக்கு நெருங்கிய நண்பர்களில் ஒருவர். அவர் எல்லோராலும் சிநேகத்துக்கு விரும்பத்தக்கவரும், ஆழ்ந்த கருத்து, அமைதி, உழைப்பு, பொறுமை, பொறுப்பு, ஏற்ற காரியத்தை நிறைவேற்றும் ஆற்றல் முதலிய உயர்ந்த குணங்களுள்ள கனவான். எச்சமயமும் ஆத்திரம், அவசரம், கோபம் என்பது அவருடைய வார்த்தைகளிலும், நடத்தையிலும் இருந்ததாகத் தெரியவில்லை. கௌரவமான ஒரு பெரும் குடும்பத்தை நிர்வகிப்பதிலும், திருவாளர் பி. எஸ். ஜீ. சகோதரர் கைத்தொழில் தர்மஸ்தாபனத்தை நாட்டின் பொது நலத்துக்கு விரும்பத்தக்க ஒரு பெரிய கல்லூரியாக ஆக்கும் முயற்சியிலும், விவசாய முன்னேற்றத்திலும், சிக்கனமும் தற்கால நவீன முறைகளையும் அனுசரித்து நடத்துவதிலும் பெருமுயற்சியுள்ளவர்.

பொது சேவையினால், ஜனங்களாலும், சர்க்காராலும் நன்கு மதிக்கப்பட்டவர். நல்ல பண்பாடுள்ளவர்.






திரு. நாயுடு அவர்களுக்கு அன்னூர் (ஜனவரி 1934ல்-) 'ராவ்பகதூர்' பட்டம்
பெற்றதைப் பாராட்டி பூளமேடு பொதுஜனங்கள் சார்பாக
திரு. V. கோபால் நாயுடு அவர்கள் தலைமையில் அளித்த உபசாரம்.

# “ஆளப் பிறந்தார்”

புலவர். வீ. உலகஊழியனுர், தலைமைத் தமிழாசிரியர்,
நாட்டாண்மைக்கழக உயர்நிலைப்பள்ளி, இராசிபுரம், சேலம்.

---

**நேரிசை வெண்பா.**

*கம்மவார் கூட்டத்தின் கண்ணு யிருந்தவன்*
*மும்மைத் தமிழ்நாட்டை முன்னேற்றும்—செம்மைசேர்*
*கல்லூரி கண்டோன் கவினரங்க சாமி புகழ்*
*எல்லோரும் பாடுவோம் இன்று.*

*பூளைமேட்டில் சர்வஜன உயர்நிலைப்பள்ளியில் 1928, 1929-ஆம் ஆண்டுகளில் தமிழாசிரியராக யான் இருந்த காலத்தில் அக்கலை நிலையத்துத் தலைவராகிய திருவாளர் பூ. சா. கோ. அரங்கசாமி நாயுடு அவர்களை அடிக்கடி சந்தித்துப் பேசும் பேறுடையேனுயிருந்தேன். அவர் ஆங்கில அறிவு பெருதவர் எனினும் நிறைந்த ஆங்கிலப் புலமையுடையவர்களும் அவர் பால் விஞ்ஞான அறிவினையும் உலகியல் அறிவினையும் கடன் வாங்கியதனை யான் பலமுறைகள் கண்டிருக்கின்றேன். கூர்த்த அறிவும், தம்பள்ளியிற் பயிற்றும் ஆசிரியர்களைத் தரமறிய நிறுக்கும் மதிவன்மையும் இயல்பில் படைத்தவர்.*

*பள்ளியில் எத்தகைய பற்றுடையேனுய் யான் ஒழுகுகின்றேன் என்பதனை அவர் அறிதற்பொருட்டு ஒருநாள் என்னேடு உசாவும்போது “நம் பள்ளியில் பயிலும் மாணவர் எத்துணையர்?” என வினவினர். அவர் கருத்தினை உடனே அறிந்தயான் 355 மாணவர் பயில்கின்றனர் என்று விடையளித்தேன். ஆசிரியர்களை நிறுத்துத் திறமையறிதற்கு இதனை ஒரு அளவு கோலாக முதல் முதல் அவர் பயன்படுத்தியதனை நினைந்து இன்றும் அவர் திறமையை யான் மதிப்பதுண்டு.*

பள்ளிக்கூடத் தலைவராக இருந்த அவர் ஆசிரியர்களுடனும் மாணவருடனும் நட்பு முறையிலும் பழகுவர்; அங்கிலையில் தலைவ ராகவும் நடந்துகொள்ளும் திறமையும் அவர் பால் இருந்தது. மற்றவர்கள் கருத்தினையறிந்து கொள்ளுதல் எளிதில் அவர்க்கு இயல்பாயிருந்தது. ஆனால் அவர் உள்ளக் கிடக்கையை அறிதல் யாராலும் இயல்வதன்று.

யான் அங்கு தமிழாசிரியர் பணியினை மேற்கொண்டு ஒழுகிய காலம் என்னுடைய இளமைப்பருவம். இருபத்தொராட்டைப் பருவம் உடையேன். என்னை ஒரு முறை அன்னார் வெறுத்துக் கூறியது எனக்கு நினைவில் இருக்கின்றது. "நீர் நன்கு படித்திருக்கின்றீர் ஆயினும் இளமைப்பருவத்திற்கேற்கச் சிறு குறும்பும், உலகியலறிவின்மையும் உடையீராயிருக்கின்றீர்" என்று அவர் சொல்லியது அப்பொழுது எனக்குச் சிறிது கசந்ததேனும் இப்பொழுது வாழ்க்கையில் இனித்தே வருகின்றது.

கலைநிலையம் கண்ட அவர் அதனிற்படிக்கும் மாணவர் பயன் பெறுதல் வேண்டும் என்னும் எதிர்கால அறிவுடன் தொழிற்கல்வி நிலையத்தினை அப்பொழுது அமைத்துக்கொண்டிருந்தனர். அதனை அடிக்கடி சென்று மேற்பார்வையிடுவர். அப்பொழுது தான் அத் தொழிற்கல்வி நிலையத்தின் கட்டிடம் கட்டப்பட்டுக் கொண்டிருந்தது. திருவாளர் வேணுகோபால்சாமி நாயுடு அவர்கள் அதனை மேற்பார்த்துக் கொண்டு வந்தனர். அவரிடத்து மிகவும் நட்புடையராகவும், அவர் பேச்சுக்கு இணங்குபவராகவும் திருவாளர் அரங்கசாமி நாயுடு அவர்கள் அப்போது காணப்பட்டனர்.

தன் உறவினர்களையும், பங்காளிகளையும் பேணுவதிலும், அவர்கள் பால் பழமை கெழுதகைமை காட்டுவதிலும் சிறிதும் பின் வாங்காதவர். திருவாளர் நாயுடு அவர்களின் குடும்பத்திற்கு நெருங்கிய தொடர்புடைய கே. இராமசாமி என்னும் மாணவர் ஒருவர் (இப்பொழுது பாப்பநாயக்கன்பாளையம் பஞ்சு மில்லில் உயர் அலுவலில் உள்ளார் போலும்) மாணவர் விடுதியில் என் அறையில் என்னுடன் இருந்தார். அம்மாணவரிடத்து அவர் காட்டிய பரிவு என்னுடைய உறவினரைக் கண்டபோதெல்லம் என் நினைவுக்கு வருதல் உண்டு.

செய்தித்தாள் பயிலாத சிற்றூரில் யான் சில நாள் இருந்த போது இவர்கள் பெரும்பிரிவு நிகழ்ந்தமையான் யான் அறிந்தற் கில்லை. அண்மையில் இவர் தம் நினைவுமலர் வெளியீடுபற்றிய மடலை யான் பார்த்தபொழுது என் உள்ளம் மிகவும் வருந்திற்று. இப்பெரியார் பூதவுடல் மறையினும் புகழுடல் என்றும் நின்று நிலவுதற்கேற்ற அருஞ்செயல்கள் செய்துள்ளனர். இவர் செயலைச் செல்வர்கள் மேற்கொள்ளின் நாடு நன்னிலையெய்தும் என்னும் துணிபுடையேன்.



பூளைமேடு, திவான்பகதூர்

# திரு. பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடவர்களின்

பிரிவாற்றாமையால்

அநுப்பபட்டி அ. இராமாநுஜலு நாயுடு இயற்றிய

## இரங்கற்பா

---

திருமகள் அருளும் நாமகள் அருளும்
சீரும் பேரும் சிறந்து விளங்கும்
பூளைமேடெனும் பெரும்பதி தன்னில்
பி. எஸ். ஜி. அவரின் பெருந் தவப் புதல்வராய்ப்
பிறந்த ரங்கசாமி நாயுடு பெரியீர் !
அறுபத் தைந்து ஆண்டுதான் வாழ்ந்தீர்,
அறுவரைப் பெற்றீர் ஐவராய்ப் பிறந்தீர்,
அறுவரும், பிறந்தார்—அனைவரும் வருந்த
ஐந்தும் ஐந்தும் நாற்பத் தேழில்
பிரிந்தீர் எம்மிடை மறைந்தீர் எம்மிடை
பிரிவுக் கிரங்கினம் மறைவுக் கிரங்கினம்,
பல்லாண் டிருக்கப் பார்க்கிலம் இங்கே
பல்லாண் டிருக்கப் பரமனடி சேர்ந்தீர்,
கம்ம குலத்திற் கனிந்த கனியே !
அம்மா-உம்மைப்போல் அன்பும், அருளும்,
ஆற்றலும், அறிவும், அமைந்த ஆராய்ச்சியும்
போற்றற் குரிய பொறுமையும், திறமையும்,
வினையின் நுட்பமும், வேலையின் நுணுக்கமும்,
வினைசெய் முறையும், வினையின் முடிவும்,
எந்தாய் யாரினி யாரிடம் காண்குதும் ?
அந்தோ நொந்தனம், அந்தோ நொந்தனம்,
மதிநலம் நிரம்பிய மாசறு மணியே !
மதியே பெரிதெனும் மொழியை நிறுத்தினீர்
பூளைமேட்டைப் பீடுடை, பொருளுடை, பண்புடை,

பூவைசுக ரெனும் பெரும் ஆக்கினீர்,
தளரா முயற்சியால் வளர்மிகு பொருளும்,
கிளரப் புகினோர் கோடியாய் ஈட்டினீர்,
ஞாலம் முன்னேற நற்றொழிற் சாலைகளும்,
ஞானம் முன்னேற நற்பள்ளிச் சாலையும்,
ஈட்டிய பொருளை ஏற்ற முறையில்
நாட்டிற் கேற்ற நல்திறம் பலவும்
வாட்டமிலாது வகை வகை வழங்கினீர்
வாழுக அறமே, வாழுக அருளே,
வாடி வந்தோர்க்கும், தேடி வந்தோர்க்கும்
நாடிய தொழிலும் நல்ல கல்வியும்
உண்டியும், உடையும், உறையுளும், தந்து
அண்டிய மக்களுக்கு அன்னையும் ஆனீர்!
கண்ட அரசியலார் கருத்திற் கொண்டு
ராவ் பகதூரென திவான் பகதூரென
தாவிக் கொண்டு தந்தனர் பட்டமும்
புகழின் புகலே! புண்ணிய உறைவே!
இகத்தில் நீரெய்தா இன்பம் உண்டோ?
பரத்தில் சென்றநீர் பரமனடி ஒன்றியும்,
புறவுடல் நீங்கினும் புகழுடல் தங்கவும்,
ஆத்மா சாந்தி அடையவும்,
ஏத்துவம் பரமனை ஏத்துவம் யாமே.



# நினைவு அலைகள்.

(திரு. சு. துரைசாமி நாயுடு, பி. ஏ. எல். டி.)

---

இப்பரந்த நிலவுலகு நாற்பக்கமும் கவினுற கடலால் சூழப் பெற்றுள்ளது. இரவும் பகலும் இடைவிடாது இந்நீர் உலகத்து அலைகள் அடித்தவண்ணமே இருக்கின்றன. இவை சில சந்தர்ப் பங்களில் மலைகள் போன்று பேரிரைச்சலுடன் எழுகின்றன. இன் னும் சில சந்தர்ப்பங்களில் பாலுண்டு படுத்துறங்கும் குழவிகள் போன்று சாந்தமாக உள்ளன. இதுபோன்று மனம் என்னும் மாபெருங் கடல் சில சந்தர்ப்பங்களில் பெருவேலை செய்கிறது; எண்ணங்கள் எனும் அலைகள் குவிந்து எழுகின்றன; இவை அருஞ் செயல்களில் முற்றுப் பெருகின்றன. இது பல சந்தர்ப்பங்களில் அமைதியாக இருக்கின்றது. இப்பரந்த உலகின் நிலப் பரப்பிற்கு எல்லையளிக்கும் நீலத் திரைக் கடலின் ஆழத்தைக்கூட அறியலாம்; ஆனால் மனக் கடலின் ஆழத்தைக் கண்டறிதல் அதன் வாக்கு செயல் மூலமன்றி வேறு வகையில் இயலாது.

மக்கள் யாவரும் பிறப்பையொத்து ஒரு நிகர் சமம் எனினும் மனோ வளர்ச்சியையும் செய்தொழிலையும் பொறுத்து வேறுபடு கின்றனர். அவர்களில் சிலர் இதர பெரும்பான்மையான மக்களி னின்றும் தனிச் சிறப்பொடு காட்சியளிக்கின்றனர்; அன்னவர் தமது சூழ்நிலையைத் தமக்கு ஒவ்விய முறையில் திருத்தி அமைக்க வோ அன்றி மாற்றியமைக்கவோ சக்தி பெற்றவராக உள்ளனர்; அன்னவர் செயற்கரிய காரியங்களைச் செய்கின்றனர்; அவர்களை உலகம் சிறப்பொடு போற்றி வழிபடுகின்றது. அத்தகைய பெரும் மனிதரது மனப் பண்புகளை அறிதல் மிகக் கடினமானதோர் காரிய மாகும். அவர்களை அவர்கள் ஆற்றிய செயல்கள் எனும் திரைக் கண்ணுடியின் மூலந்தான் தெரிய இயலும். இச்செயல்களைச் சரிவர உணர்வதற்கு அன்னவரோடு நெருங்கிய தொடர்பு இன்றி யமையாதது. இவ்வான்றோர் வரிசையில் வைத்துப் போற்றுதற் குரிய உத்தமர், தமது முயற்சியால் உன்னத நிலை எய்திய செல்

வந்தர், இலக்கியக் கல்வி தொழில் கல்விகளை ஊக்குவித்து கோவைமா வட்டத்திற்கே தனிப் பெருமையைத் தந்த பெரியார், வரையாது கொடுக்கும் வள்ளலார், கம்ம குலத்திற்கே பெறலரும் மாணிக்கம் எனும் பூ. சா. கோ. அரங்கசாமி நாயுடு அவர்களது தொடர்பில் அறியலுற்ற சிறிய நிகழ்ச்சிகள் சில பின் கொடுக்கப் பட்டுள்ளன.

"உனது கலாசாலை விடுமுறை இன்றோடு துவங்கிவிட்டதே! நீ இவ்விடுமுறையில் யாது செய்ய உத்தேசித்திருக்கிறாய்?" எனத் திருவாளர் நாயுடு அவர்கள் தமது ஆதரவின்கீழ் கோவை அரசிய லாரது கல்லூரியில் எப். ஏ. படிக்கும் மாணவன் ஒருவனை ஒரு நாள் மாலைப் பொழுதில் கேட்டார். அதற்கு அம்மாணவன், "தாங்கள் இங்கு எனக்கு ஏதாவது ஒரு வேலை கொடுத்தால் இங்கேயே இருக் கின்றேன். எனது சொந்தக் கிராமத்திற்குப் போவதைக் காட்டி லும் இந்நகரில் இருக்கவே நான் விரும்புகிறேன்" என்றான். உடனே நாயுடு அவர்கள், "நீ நமது கிராமங்களை அலட்சியமாக நினைக்கக்கூடாது. அவை முன்னேறினால்தான் நம் நாடு முன்னே றும். நீ படித்து வரும் கலாசாலை, சர்க்காரது காரியாலயங்கள், மாடமாளிகைகள், களியாட்ட இடங்கள், பூங்கா வனங்கள் அனைத் தும் கிராமத்தார் உழைத்துக் கொடுத்த இறையால்தான். எனவே உன்போன்ற கல்லூரி மாணவர் விடுமுறைகளில் கிராமத்தார்க்குத் தொண்டு புரிதல் வேண்டும்" என உணர்ச்சி பொங்கப் பேசி, "இந்த விடுமுறையில் நீ இவ்வூருக்குச் சுற்றுப் புறத்து உள்ள கிராமங்கட்குத் தினம் இரண்டு கிராமங்களாகச் சென்று கிராம மக்கள் முன்னேறும் வகையில் பேச்சுக்களைக் கூட்டங்கள் கூட்டி நிகழ்த்தி வருதல் வேண்டும். உனது விருப்பம் என்ன?" என்று வினவினர். அதற்கு அம்மாணவன், "சரி" என்றான். உடனே நாயுடு அவர்கள், "நீ கிராம முன்னேற்றத்தை ஒட்டி எந்தெந்த விஷயங்களைப் பற்றிப் பேசுவாய்?" எனக் கேட்டார். மாணவன், "சுகாதாரம், கைத்தொழில் உழவுத் தொழில் வளர்ச்சி, மூடப் பழக்க வழக்கங்கள் ஒழிப்பு, முதியோர் கல்வி, கூட்டுறவு, உலக அறிவு ஆகியனபற்றிப் பேசுதல் சரியென நினைக்கிறேன்" என்றான். திருவாளர் நாயுடு அவர்கள் அது சமயம் தம்மொடு கூட இருந்த பெரியார் ஒருவரிடம், கிராமப் பிரசாரத்தோடு தாம் முதியோர் கல்விப் பாடசாலைகள், நூல் நிலையங்கள் ஆகியவற்றை நிறுவ உதவு

வதாக வாக்களித்தார். தமது ஆதரவில் கல்லூரிக் கல்வி பயின்று வந்த மேற் குறிப்பிட்ட மாணவனைத் தாம் விரும்பிய அவ்வுன்னதப் பணிக்கு மறுநாட் காலை தயாராக இருக்கும்படிச் சொல்லியனுப்பி விட்டார். இந்நிகழ்ச்சி நிகழ்ந்தது இற்றைக்குப் பத்து ஆண்டுகட்கு முன்பு என்பதை மட்டும் வாசகர்க்கு நினைவூட்டுவதோடு நிறுத்திக் கொள்கிறேன்.

ஒரு நாள் மாலை வேளை. கோவை தனவந்தர் ஒருவர் தமது வயது வந்த பிள்ளை ஒருவன் தமது சொற்படி நடப்பதில்லை என்றும், தமக்குத் தெரியாமல் வீட்டிலிருந்து பொருளை எடுத்துப் போய் தீய வழிகளில் செலவிட்டு வருவதாகவும் தாம் எப்பொழுதும் பணப் பெட்டியின் திறவு கோலை தமது மடியிலேயே வைத்துக்கொண் டிருக்க வேண்டியுள்ளதென்றும் அங்கலாய்த்தார். இவ்வார்த்தை களைச் சாவதானமாகக் கேட்டு வந்த நாயுடு அவர்கள், "அந்தத் திறவுகோலை உமது பையன் கையிலேயே கொடுத்து விடுங்களேன். அவன் அதைப் பத்திரமாக வைத்துக் கொண்டிருக்கட்டுமே!" என்றார். இவ்வார்த்தைகளால் திகைப்புற்ற அத்தனவந்தர், "நன்று கச் சொன்னீர்கள்! இவ்வளவு பத்திரமாக நான் திறவுகோலை வைத்திருந்துங்கூட நான் பெட்டியில் வைத்த பணம் வைத்த அளவு இருப்பதில்லை. இனி திறவுகோலையே அவன் கையில் கொடுத்துவிட்டால் அப்புறம் நான் ஓடு எடுக்க வேண்டியதுதான்" என்றார் பரபரப்புடன். அதற்கு அன்பு சுரக்கும் ஆர்வலர் நாயுடு அவர்கள் இன்சொல் வாயினின்றும் வந்த வார்த்தைகள் பின் வருவன:—"ஐயா, உமது பிள்ளைக்கு வயது வந்துவிட்டது. இனி அவன் தானாகவே உலகில் புகுந்து, அடிபட்டு, சீர்திருந்த வேண்டு மேயன்றி அவனுக்குப் பதிலாக நீர் அவனது உணவையும் சேர்த்துச் சாப்பிட இயலாது. முதலில் உமது மனத்தினின்றும் அப்பிள்ளை தொட்டிலில் இட்டு ஆட்டும் சிறு குழந்தை எனும் எண்ணம் மறைய வேண்டும். நீர் அவனைப் பூர்ணமாக நம்ப வேண்டும். உமது குடும்ப நிர்வாகத்தையும் நிதிப் பொறுப்பையும் அவன் வசமே விட்டுவிடுங்கள். பின் என்ன மாறுதல் ஏற்படுகிறது என்பதை எனக்குச் சொல்லுங்கள்". அத்தனவந்தர் நாயுடு அவர்கள் கூறிய படியே செய்தார்; அத் தெய்வீக வாக்கு பலிக்கவும் செய்தது; அத் தனவந்தரின் மைந்தர், "இவன் தந்தை என்நோற்றான் கொல்" எனும் சொல்லுக்கு அருகரானார்.



1930-மே 22-தியன்று 22-வது மாகாணக் கல்வி மகாநாட்டில் கலந்துகொண்ட பெரியார்கள் தொழில் நிலையத்துக்கு விஜயம் செய்தபோது எடுத்த படம்.




ஆசிரியர்களிடம் கண்டிப்பாக இருப்பார்; ஆனல் அவர்களோடு கலந்துங் கொள்வார்.

திருவாளர் நாயுடு அவர்களது ஸ்தாபனத்தில் வயதான ஆங்கிலப் பட்டதாரி ஒருவர் வேலை பார்த்து வந்தார். அவர் படிப்பிலும் வயதிலும் உயர்ந்தவரன்றி உலக அநுபவ முறையில் உயர்ந்தவர் அல்ல. "சிவ பூசையில் கரடி புகுந்தது" என்று சொல்வார்களே, அதுபோன்று அவர் தமக்குத் தீர்ந்த சமயமெல்லாம் நாயுடு அவர்களிடம் சென்று, பிறரது காலத்தின் அருமையைச் சிறிதும் பாராது, பிறர்க்குப் போதிக்கும் அளவில் பேசத் துவங்கி விடுவார். இத் தொந்தரவு நாளுக்குநாள் அதிகரித்துக் கொண்டே வந்தது. ஒரு நாள் மாலை அப்பட்டதாரி அவர்கள் எப்பொழுதும் போல் கங்கு கரையில்லாத தமது பேச்சைத் துவக்கிவிட்டார். அப்பொழுது நாயுடு அவர்கட்குத் தாம் அவசரமாகக் கவனிக்க வேண்டிய பல அலுவல்கள் இருந்தன. பட்டதாரியோ தமது பேச்சை நிறுத்துவதாகக் காணோம். திடீரென நாயுடு அவர்கள் அப்பட்டதாரியைப் பார்த்து, "ஐயா! உமது தஞ்சை வளத்திற்குக் காரணமான பொருள் யாது?" என்றார். திடுக்கிட்டெழுந்த அப்பட்டதாரி, "காவிரி எனும் புண்ணிய நதி" என்றார். நாயுடு அவர்கள் தொடர்ந்து, "அந்நதி எங்கு உற்பத்தியாகின்றது?" என்றார். அவ்வாங்கிலம் படித்தவரோ சிறிதும் யோசியாது எக்களிப்புடன், "குடகு நாட்டில்" என்றார். மீண்டும் நாயுடு அவர்கள், "அந்நதி அதற்கடுத்து எந்த நாட்டினுள் செல்கின்றது?" என்றார். "மைசூர் பீடபூமியில்" எனப் பதில் வந்தது. "பின் எந்த நாட்டில்?" என்றார் நாயுடு அவர்கள். இன்னும் நிலையைப் புரிந்து கொள்ளாத அப்பட்டதாரி, "கொங்கு நாட்டில்" என்றார். இனி மறைத்தலில் மகிமை இல்லையென நாயுடு அவர்கள், "உங்களது வளப்பத்திற்குக் காரணமான காவிரியை உமக்குமுன் கொங்கு நாட்டவர் ஆகிய நாங்கள் காண்கிறோம். உம்முடையதையே பன்னிப் பன்னிப் பேசி மற்றையோரது காலத்தை வீணாக்குவது உமது கல்வி வளப்பத்திற்கு ஏற்றதல்ல" என்றதும் அப்பட்டதாரி மன்னிப்புப் பெற்றுக் கொண்டு தாம் வந்த வழியில் திரும்பி நடையைக் காட்டினார்.

திருவாளர் நாயுடு அவர்களது பண்புகள் சிலவற்றைத் தெள்ளிதிற் காட்டும் மேற்கண்ட நிகழ்ச்சிகளை வாசகரையே உன்னிப் பார்க்க வேண்டுகின்றேன்.



ஸ்ரீராமஜெயம்.

பூளைமேடு திவான்பகதூர்

# பி. எஸ். ஜி. அரங்கசாமி நாயுடு

அவர்கள் பிரிவாற்றுமை குறித்து,

பூளைமேடு

**திரு. இ. பாலகிருஷ்ண நாயுடு, பி. ஏ., பி. எல்.,**

இயற்றிய

# இரங்கற்பா.

---

விஜய நகரின் விறலுறு வேந்தர்
கஜபல மிகுந்த கம்ம வாரை
கொங்கு நாட்டின் கொற்றல ராகத்
தங்கி யிருக்கத் தாமே யமைத்த
பாளையங் களினுள் தாளாண்மை சேர்
வாளாண் மைக்கும் வேளாண் மைக்கும்
மூளை மிகுந்த பூளை மேட்டில்
ஓங்கிய திறனும் ஒழுக்கமு மிக்க
காங்கல் லாரின் கண்மணி யாக
அங்கைச் செல்வர் அருங்கோ விந்தர்
மங்கைத் தாயார் மகனுய்ப் பிறந்து
திறங்கள் பலவும் திகழப் பெற்ற
அரங்கப் பெயருடை அண்ண லேறே!
பள்ளியில் பயிலும் பலபல படிப்பும்
உள்ளுற வறிவால் உணர்ந்தே கற்று
சாணிக் குப்பையும் மாணிக்க மாக
காணிக் காசைக் கோணி யாக்கி
ஆணித் திறமாய் வாணிபஞ் செய்தீர்.
சோற்றுப் பஞ்சம் தோற்றுப் போக
திண்ணிய முறையில் பண்ணையம் வைத்து,

ஆடைப் பஞ்சம் நீடிக் காது
நூற்றல் தொழிலைத் தேற்ற வைத்து,
வேலைப் பஞ்சம் சாலத் தீர
தொழிலார் சாலை அழியா தமைத்தீர்.
பேழை நிறையப் பெரும்பண மீட்டி
ஏழை எளியவர் இல்லார்க் கீந்து
"வழங்கிய பொருளே வளம்பெறு" மென்று
முழங்கிச் சொல்லி முன்வழி காட்டி
பல்லாயிரம் பேர் பணியா ளர்க்கே
எல்லா நலனும் இயற்றி வைத்தீர்.
கம்மவார் குலத்தின் "கான்பரன்ஸ்" ஒன்று
செம்மையாய் நடத்திச் சீரும் பெற்றீர்.
பழனி யாண்டவர் பாங்குறு மலையில்
நிழலைத் தந்திடும் நீள் மண்டபங்கள்
அழகே யுருவென அமைத்து வைத்தீர்.
மாரியம்மன் மதிள் பெருங் கோயில்
சீரிய கோபுரம் சிறக்கச் செய்தீர்.
மார்கழி மாதம் மகத்துவம் செய்து
தைப் பூசத்தில் தனிவிருந் திட்டு
தலங்கள் தோறும் நலங்கள் நல்கி
துலங்கும் இன்னருள் குலுங்கப் பெற்றீர்.
"தாழ்ந்த வகுப்பார் வாழ்ந்து முன்னுற
ஆழ்ந்த அறிவைச் சூழ்ந்து நலம்பெற
இரவுப் பள்ளியும் இலவசக் கல்வியும்
உரமிகு ஞான உள்ளம் திறக்கத்
திறவு கோலெனத் திகழ வளித்தீர்.
உயர்தரக் கல்வியின் உன்னத முணர்ந்து
பெயர்பெற வமைத்தீர் பெருமைப் பள்ளி.
வைத்திய சாலை வகையா யமைக்க
வைத்தீ ரதற்கும் வகுத்தோர் லக்ஷம்.
சிறியா ரிடத்தும் சிரித்துப் பேசி
வறியா ரிடத்தும் வணக்கங் காட்டி
மலர்ந்த முகமும் மகிழ்ந்த மொழியும்
அலர்ந்த பூப்போல் அகன்ற நகையும்
தொட்டது விளக்கும் தோற்றது செயிக்கும்

பட்டது தழைக்கும் பழையது புதுக்கும்
அற்றது பொருந்தும் அலுத்தது கெலிக்கும்
உற்றது சேரும் உன்னரும் சக்தி.
வாடிய பூவும் வந்தா லுன்னிடம்
மூடிய திறந்து முனைந்தே மலரும்.
வன்னெஞ் சத்தார் வம்பே செய்தால்
புன்சிரிப் பென்னும் புகையை விட்டு
இன்சொல் லென்னும் இடியைப் போட்டு
அன்புக் கயிற்றால் அணைத்துப் பிடித்து
கசியும் சொற்கள் கணத்தில் வீசி
வசியம் செய்யுமுன் வகைதா னென்னே!
இந்திர சாலம் இயற்று தெல்லாம்
மந்திர சாலம் மடக்கா தெல்லாம்
சுந்தரச் சிரிப்பாம் சுடு பாணத்தால்
தந்திர மாகத் தகர்த்தே விடுவீர்.
அரசர் மகிழ்ந்தே அருமைப் பட்டம்
வரிசை வழங்கி வாழ்த்தப் பெற்றீர்.
பட்டம் பெற்றும் பகட்டே யில்லை.
செல்வம் பெற்றும் செருக்கே யில்லை.
பாட்டாளி மக்கள் பலபே ருடனும்
கூட்டாளி யென்றே குலவித் திரிந்தீர்.
மின்னிடும் தாரகை எண்ணிடு மாபோல்
உன்னிட மிளிரும் உன்னத மாண்பில்
எதுதா னுரைப்பேன் எதுதான் மறப்பேன்.
இத்தனை சொல்லியும் இலங்குமுன் மாண்பில்
பத்தினி லொன்றும் பகன்றிடி லேனே.
நூற்றினி லொன்றும் நுவன்றிடி லேனே.
"வற்றா தீயும் வள்ளலே" என்றும்
"தட்டா தளிக்கும் தருவே" என்றும்
முன்னா ளிருந்த செந்நாப் புலவர்
கன்னா பின்னா கழறப் பெற்றோர்
உன்னோ டிணைசெய் துரைகல் தேய்த்தால்
பொன்னோ டிணைசெய் புளிவிதை யொப்பர்.
உம்பர் புகழும் கம்பனின் றிருந்தால்
கொடையப்பனே! உன் குணங்களை யெல்லாம்

சடையப் பனுக்கும் சற்றுயர் வாக
மடை திறந்தாற்போல் மளமள வென்று
நடையுயர் காவியம் நவின்றே யிருப்பான்.
மின்னொளிர் வாழ்க்கை மிச்சம் விட்டு
பொன்னடி சேர்ந்தநில் புகழே வாழி
திருவடி சேர்ந்தநின் திறமே வாழி
அருளடி சேர்ந்தநின் அறமே வாழி.
குறை வொன்று மில்லாக் கோவிந்தர்தம்
நிறைவான சந்ததி நீடு வாழ்க.



# பூளைமேட்டுப் பெரியார்.

(திரு. கே. சுப்ரி, எம். எல். ஏ., கோவை.)

---

கோவை நகர் இந்நாட்டிலுள்ள பிரபல நகரங்களில் ஒன்றுகவும் தென்னுட்டின் தலைசிறந்த பட்டணமாகவும் இன்று விளங்கி வருகிறது. இச்சிறப்பு அதற்குச் சரித்திர பூர்வமாக ஏற்பட்டதல்ல. க்ஷேத்திர மகிமையால் கிடைத்ததும் அல்ல. கைத்தொழில் பெருக்கத்தால் வாய்த்ததே ஆகும். "தென்னிந்திய மான்செஸ்டர்" என்ற புகழுக்குரிய பெயரோடு குறிப்பிடுவது பூளைமேட்டோடு கூடிய கோவை நகரைத்தான்.

பூளைமேட்டைச் சார்ந்த பி. எஸ். ஜி. குடும்பத்தார்கள் இந்த ஜில்லா வாசிகளில் முதல் முதலாகத் துணிந்து பஞ்சாலை ஒன்றை ஸ்தாபனம் செய்தனர். அவர்கள் காட்டிய வழியையும் ஊட்டிய ஊக்கத்தையும் பின்பற்றி ஏனையோரும் கைத்தொழில் முயற்சியில் ஈடுபட்டனர். நாளடைவில் கைத்தொழில், வியாபாரம் ஆகிய துறைகளில் கோவை நகரும், ஜில்லாவும் விரைவாக முன்னேற்றமடைந்தன.

பி. எஸ். ஜி. குடும்பத்தாரின் திலகம் போன்றவர் காலம் சென்ற திவான்பகதூர் ரங்கசாமி நாயுடு அவர்கள். "அடக்கமே அணிகலம்" என்பதற்கு அவர் ஓர் உதாரண புருஷர். தான் மேற்கொண்ட பணியில் "கருமமே கண்ணுயினுர்" என்னும் லக்ஷியத்துடன் அவர் செய்த தொண்டின் பலனை எவரும் நிலையாக இன்றும் என்றும் காணலாம். பி. எஸ். ஜி. தர்மஸ்தாபன தொழிற்சாலையும், சர்வஜன ஹைஸ்கூலும், அவைகளின் வியக்கத்தக்க வளர்ச்சியும், அவருடைய சீரிய சேவையின் சின்னங்களே ஆகும்.

பூளைமேட்டுப் பெரியாராகிய இவருடைய பெயரும், புகழும் நீடூழி வாழ்ந்திடும்.

உ

## எழுசீர் விருத்தம்.

### (திரு. பாப்பையா என்கிற மருதாசல ஐயா.)

---

மங்களப் பூளை மேட்டினில் வாழ்ந்த மாண் ரங்கசாமி நாயுடுவின்

துங்கமா தவத்தால் பிறந்திடுஞ் சுதர்கள் சுபகர ராசுடன் நால்வர்,

தங்குசீர்ப் பெண்கள் பாக்கியம் மென்மேல் தழைத்து நீடூழி வாழ்ந்தோங்கப்

பொங்கருள் ராதா ருக்மணி கணவன் பொன்னடி போற்றுதும் மாதோ.



# "புரட்சியாளர்."

(திரு. கே. வேங்கிடசாமி பி. ஏ.)

சுமார் முப்பது வருடங்களுக்கு முன் பூளைமேடு மற்ற கிராமங்களை விடக் கேவலமான நிலையிலேயே இருந்தது. ஊருக்கு அழகு தரும் ஆறு ஏதும் அண்மையில் இல்லை. கிணறுகளோ ஒவ்வொன்றும் ஒரு பிலத் துவாரம் போல. வான் நோக்கி வாடும் பயிர்களும், பயிர் நோக்கி வாடும் குடிகளும் உடையனவாக இருந்தது கிராமம்.

இந்த முப்பது ஆண்டுகளிலே நம் கண்முன்னேயே இங்கே ஒரு அற்புதம் நிகழ்ந்து விட்டது. பஞ்சாலைகளும், தொழிற்சாலைகளும், பாடசாலைகளுமாக மாறிவிட்டது பூளைமேடு. மங்களமான தொழிலொலியும், கலையொலியுமே எங்கும். சோம்பலும், வறுமையும் செத்துவிட்டன. வியாபாரம் தழைத்துவிட்டது. வியவசாயமும் பயன் தருகிறது. ஆம் இங்கே ஒரு சமூகப் புரட்சி சாதிக்கப் பட்டுவிட்டது.

ஒரு தொழில் ஸ்தாபிக்கப்படுகிறது. அது காரணமாக மக்கள் ஒரு இடத்தில் கூடி வசிக்கின்றனர். பின்னர் கல்வி, வைத்தியம் முதலான வசதிகள் அவர்கள் நிமித்தமாக ஏற்படுகின்றன. இம்மாதிரியான பந்தங்களால் பிணைக்கப்பட்ட மக்கள் தாங்கள் ஒன்று கூடினதாலேயே எழுந்த சக்தியை உணர ஆரம்பிக்கிறார்கள். உடனே அவர்கள் சரித்திரத்தின் கருவி ஆகிறார்கள். முதலில் சமூகப் புரட்சி உண்டாகிறது. அதை அரசியல் புரட்சி முடித்து முத்திரை வைக்கிறது.

அரசியல் புரட்சிக்குத் தலைவர்கள் இருப்பதுபோல் சமூகப் புரட்சிக்கும் தலைவர்கள் உண்டு. சாதாரண மக்களுக்கும் அவர்களை நடத்தும் தலைவர்களுக்கும் ஒரு வித்தியாசம் உண்டு. சாதாரண மக்கள் எதை எடுப்பினும் அதன் ஒரு புறத்தையே பார்க்கிறார்கள். ஆனால் தலைவர்களின் நோக்கிலும், செயலிலும், ஒரு பூரணத்துவம் பொலிகிறது. அவர்கள் சமூக முன்னேற்றத்தின் எல்லா முனைகளிலும் சமமாக ஈடுபடுகிறார்கள்



தமது அண்ணா அவர்களை முன்னே நிறுத்திவிட்டுத் தாம் பின்னின்று கொள்கிறார்.




17—7—'33-ல் சென்னை நிதி மந்திரியாகவிருந்த திரு. ஸ்டோக்ஸ் அவர்கள் விஜயஞ்செய்தபோது எடுத்த படம்.

பூளைமேட்டில் நிகழ்ந்த அடிப்படைப் புரட்சி ஒரு பூரணப் புரட்சி யாகும். அதை நடத்தி வைத்தவர் பூ. சா. கோ. ரங்கசாமி நாயுடு அவர்களே யாவர். தொழில், கல்வி, வைத்தியம் முதலிய எல்லாத் துறைகளிலும் அவர் முனைந்து முன்னேற்றத்திற்கு ஏதுவானுர். ஆகையால் அவரை ஒரு சரித்திர புருஷன் என்று அழைத்தால் அது மிகையாகாது. சந்தர்ப்பங்களையுண் டாக்கிச் சக்திகளையும், சக்திகளைக்கொண்டு சந்தர்ப்பங்களையும் தோற்று வித்து இவ்வாறு சரித்திரச் சக்கரத்தை உருட்டுவிப்பதுதானே தலைமையின் தொழில். சற்றேறக் குறைய ஒரு நூற்றுண்டு உறங்கிக் கிடந்த சமூகத்திற் கிடையே தொழில்களைத் தோற்றுவித்து, மக்கள் ஒன்று கூடியதால் விளைந்த சக்திகளைக்கொண்டே மேலும் சந்தர்ப்பங்களை சிருஷ்டித்து, இவ்வாறு சிறைப் பட்டுக் கிடந்த சரித்திரத்தை விடுவித்துப் பிரவகிக்கச் செய்தது தலைமைத் தொழிலே அல்லவா ?

அன்னுர் பிரியும்போது, தம்பால் உறவாலும், அன்பாலும் உரியார்க் குப் பல உரிமைகளையே அன்றிச் சில கடைமைகளையும் வைத்துச் சென்றுள் ளார். அவற்றுள் ஒன்று மத்திய நூல் நிலையம் ஒன்றைப் பூளைமேட்டில் நிறுவுவதாகும். அவர் நிறுவிய உயர்தரப் பாடசாலைக்கு நல்ல முறையில் நிறுவப்பட்டு நடத்தப்படும் ஒரு நூல் நிலையம் வேண்டப்பட்டது. அதுவே போல அவரால் வளர்க்கப்பட்ட தொழில், கல்வி ஸ்தாபனத்திற்கும் ஒரு நூல் நிலையம் தேவையாயிருந்தது. மேலும் அவர் தோற்றுவித்த பல ஸ்தாபனங் களில் தொழில் செய்வோர்க்கும், பூளைமேட்டின் பொது மக்கட்கும் ஒவ்வொரு நூல் நிலையம் தேவையாக இருந்தது. பிறர்க்குத் தத்தம் தனித் தேவையா கப்பட்ட இது, பூரண நோக்கைக் 'கொண்ட அவருக்கு ஒரு பொதுவான தேவையின் பல முகங்களாகவே தென்பட்டது. குழந்தைகளுக்கு வித்தை யை அறிவிற்கு உரிய ஒரு விளையாட்டாக மாற்றுவதும், இளைஞர்கள் தேடிக் கொள்ளுமாறு கிடக்கும் அறிவின் புதையலும், ஏனையோர்க்கு வாழ்விலும், தொழிலும் தேவைப்படும் செய்திகளின் களஞ்சியமும், சோர்வுற்றுர் தம் சோர்வை ஏற்ற நூல்களால் தீர்த்து வைப்பதும், வேலையற்றவர்கள் வீணர் களாகிப் போகாமலிருக்க வேண்டப் படுவதும், கற்றுர் கற்றன மறதியிற் கரைந்து போகாமல் காப்பதும், காலப் போக்கிற்காக வருவார் தம் கருத்தை வளர்ப்பதும் ஆன ஒரு மத்திய நூல் நிலையத்தை அவர் கற்பனை செய்து கொண்டார். கற்பனைசெய்து அதைக் கருத்தில் பதிய வைத்துக்கொண்டு காலங் கருதிக் காத்திருந்தார்.

தமது வாழ் நாள் எதிர்பாராதவாறு குறுகிவிட்டமையால் அவர் தமது இக்கனவை நனவாக்கும் பொறுப்பை அன்பால் உரிய எல்லார்மேலும் சுமத்

திச் சென்றுள்ளார். மத்திய நூல் நிலையத்தை எழுப்பி அதன் முன்னர் அவர் தம் சிலையை நாட்டின், அச்சிலையில் பூசைக்குரிய அவர்தம் ஆத்மா கோயில் கொள்ளும் என்பது எனது நம்பிக்கை.

வேண்டுவது மறவாமை. பூதவுடல் நீத்த பெரியார் தம் புகழ் நின்று நம் எல்லாரையும் ஊக்குக.





# பரிதிச்செல்வா!

(வித்வான் தா. ஏ. ஞானமூர்த்தி, B. O. L.
பி. எஸ். ஜி. கல்லூரி, பூளமேடு.)

---

உலகொடு தோன்றி நாளும்
உலப்பிலாக் கதிர்கள் வீசி

நலமுற ஞாலங் காத்து
வலமுறும் பரிதிச் செல்வா!

செலவுறு நாடும் ஊரும்
ஒன்றிலை நயந்தோர் சாற்றும்

நிலைநடு நிலைமை நின்று
நவிலுவாய் வாய்மைச் சொல்லே.

மண்ணக மாந்தர்க் கெழுமை
ஒண்பொரு ளாகுங் கலைகள்

விண்முகிற் போலப் பொழியும்
எண்கழ கங்கள் கோலித்

தண்ணருள் பிலிற்றுங் கண்ணன்
தயாநிதி அரங்க சாமிக்

குண்மைநேர் கண்ட துண்டோ
நீயறி நல்லோ ருள்ளே?

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

**பூளைமேடு ஸ்ரீ ரங்க விலாசம் தலைவரும் பெருநிலத்**
**திருவாளரும் ஆகிய ஸ்ரீமான் திவான்பகதூர்**

# பூ. சா. கோ. அரங்கசாமி நாயுடு

**அவர்கள் பேரில்**

**ஸ்ரீமான் பண்டிதர் அ. கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள் பாடிய இயன் மொழி வாழ்த்து.**

---

# இரதபந்தம்.

நிலைமண்டிலவாசிரியப்பா.

சீர்வரங் கொண்டு செழித்துபு வோங்கவிப்
பாரகம் பலபுதுக் கலைவாழ் கம்ம
குலாசலந் தனில்சேர் குறைவிலா வளமாந்
தீபமே! தேர்நதெப் பொழுதும் இன்சொல்
நிறைந்துந் தண்ணளி நேருமிப் பூப்போன்ம்
மலர்ந்த முகத்தோய்! மன்னிலக் குனக்கே
மிகவிறும் பூதா வேண்டிய பொருள்களை
மேன்மையாய்ப் படைத்து விசாலமாத் தருமங்
கொடுக்குமின் றென்னுங் கொள்கை யன்றோ?
கோமான்! கொள்கையீ தாரிட முண்டு?
கல்வி வளரக் கசிந்துநீ அன்பாய்
நாடொறும் நாடியும் நலமே காண
லேழை மக்கட் கிரங்கி யன்றோ?
மனதில் சரிவர மதிப்புற் றோறையிங்
குனைப்போன் றுயர்வுஞ் செய்தெத் துறையினுங்
களிக்க வைத்தன வரதமுங் காண்குவை
அசாத்தியத் தொழி லய்ய! சாத்தியமே
தாமிக வாக்கிச் சராசரத் தாமெனு
நாயக மன்ன! வேண்டுநல் லாயுளமரச்
சுவாமி மேலிடுமாசை கூடும் யோக
வாழ்வு மிக வாழ்ந் தோங்க பூவே.







பூவில் வாழ்ந்த போல் போற்று வைகுந்தம்

மேவியும் எம்மை விரும்பி வாழ்த்துகவே

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்

பூனைமேடு ஸ்ரீ ரங்கவிலாசம் தலைவர், பெருநிலத் திருவாளர்

ஸ்ரீமான் திவான்பகதூர்

# பூ. சா. கோ. அரங்கசாமி நாயுடு

அவர்கள்பேரில்

பண்டிதர் அ. கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள் பாடிய

**இயன் மொழி வாழ்த்து.**

# இரத பந்தம்

---

**நிலைமண்டிலவாசிரியப்பா.**

சீர்வரங் கொண்டு செழித்துபு வோங்கவிப்
பாரகம் பலபுதுக் கலைவாழ் கம்ம
குலாசலந் தனில்சேர் குறைவிலா வளமாந்
தீபமே! தேர்ந்தெப் பொழுதும் இன்சொல்
நிறைந்துந் தண்ணளி நேருமிப் பூப்போன்ம்
மலர்ந்த முகத்தோய்! மன்னிலக் குனக்கே
மிகவிறும் பூதா வேண்டிய பொருள்களை
மேன்மையாய்ப் படைத்து விசாலமாத் தருமங்
கொடுக்குமின் றென்னுங் கொள்கை யன்றோ?
கோமான்! கொள்கையீ தாரிட முண்டு?
கல்வி வளரக் கசிந்துநீ அன்பாய்
நாடொறும் நாடியும் நலமே காண
வேழை மக்கட் கிரங்கி யன்றோ?
மனதில் சரிவர மதிப்புற் றோரையிங்
குனைப்போன் றுயர்வுஞ் செய்தெத் துறையினுங்
களிக்க வைத்தன வரதமுங் காண்குவை:
அசாத்தியத்தொழி லய்ய! சாத்தியமே
தாமிக வாக்கிச் சராசரத் தாமெனு
நாயக மன்ன! வேண்டுநல் லாயுளமரச்
சுவாமி மேலிடுமாசை கூடும் யோக
வாழ்வு மிக வாழ்ந் தோங்க பூவே.

# சலியா உழைப்புள்ளவர்.

(திரு. எஸ். ராஜம், பி. ஏ. எல். டி.)

காலஞ்சென்ற உயர்திருவாளர் திவான் பஹதூர் பி. எஸ். ஜீ. ரங்கசாமி நாயுடு அவர்களைப்பற்றி ஒரு கட்டுரை எழுத இயலாததற்கு விசனிக்கின்றேன். ஆனால் அன்னாருடைய ஞாபகார்த்தமாய் ஒரு மலர் தயாரிப்பது மிகவும் பொருத்தமாகும். நான் அறிந்த பெருமக்களில் நாய்க்கர் அவர்கள் தனிச்சிறப்பு வாய்ந்தவர். கல்விச் செல்வமும், பொருட் செல்வமும் ஊற்றெடுத்துப் பெருகும் பூளைமேட்டின் சமூக வாழ்க்கையின் வித்து அவரால் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர் ஊன்றப்பட்டது. அவரது உள்ளத்தைக் கவர்ந்த உயர் லக்ஷியங்கள், அவரது பரோபகார சிந்தனைகள், அவரது நிகரற்ற சலியாத உழைப்பு இவைகளே இன்று அந்த சமூக வாழ்க்கையாகத் திகழ்ந்து பொலிகின்றது. இதை அறியாதார் யார்? நாய்க்கர் அவர்களின் சுறுசுறுப்பும் உழைப்பும், விடாமுயற்சியும், இன்று நமது நாட்டு வாலிபர் முதியோர் யாவருக்கும் சிறந்த வழிகாட்டியாய் விளங்குகின்றது. அவருடைய புகழ் வீசும் 'நினைவு மலர்', குழப்பம் நிறைந்து தத்தளிக்கும் இன்றைய உலகின் இருளைப் போக்க வல்ல ஒரு மலராய்ப் பொலிவதாக.





சென்னை அரசாங்க ஆலோசகராயிருந்த ரூதர் போர்ட் அறநிலையத்துக்கு விஜயம் செய்தபோது எடுத்த படம்.




சென்னை மாகாண கவர்னராகவிருந்த சர். ஆர்தர் ஹோப், விஜயம் செய்தபோது எடுத்த படம்.

# "அவருடன் சிலநாள்"

( திரு. ச. கு. கணபதி ஐயர், பி. ஓ. எல். )

---

கைத்தொழில் அரசர் டாடாவின் ஜீவிய சரித்திரம் 1941-ல் எழுதி முடித்தேன். அதன்பின் தமிழ் நாட்டிலேயே பிரபலமாக உள்ள பி. எஸ். ஜி. இன்ஸ்டிட்யூட்டைப் பார்த்து வரவேண்டும் என்ற அவா என்னிடம் குடிகொண்டது. 1942 மே மாதம் இடையில் சில நாள் நான் கோவையில் தங்கியிருந்தேன். அச்சமயம் என்னை எவரும் உணர்ந்துகொள்ளாத முறையில், எவருடைய அறிமுகமும் இன்றி நான்மட்டும் தனியாக அந்த இன்ஸ்டிட்யூட்டுக்குச் சென்று வந்தேன். 'வார் டெக்னீஷியன்' களுக்கு இன்ஸ்டிட்யூட் பயிற்சி அளித்துவந்த சமயம் அது. பூளைமேடு நகரமே அல்லோல கல்லோலமாக இருந்தது. திவான்பகதூர் பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடுகாரைப் பற்றி முதன் முதல் விரிவாக நான் அறிந்து கொண்டது அப்பொழுதுதான். அவருடைய தர்ம சிந்தையையும் அபார அறிவையும் நிர்வாகத் திறமையையும் கேள்வியுற்றதிலிருந்து அன்னார் தம் ஜீவிய சரித்திரத்தின் அவசியத்தை நான் கண்டுகொண்டேன்.

அவர்களுடைய ஜீவிய சரித்திரத்தை எழுதவேண்டும் என்ற நோக்கத்துடன் நான் கோயம்புத்தூர் விவசாயக் கல்லூரியில் மைகாலஜிஸ்டாக இருந்து ஓய்வு பெற்றுக்கொண்ட என் நண்பர் திரு. எஸ். ஆர். வெங்கட கிருஷ்ண முதலியாரவர்களை அழைத்துக்கொண்டு 1945 மே மாதம் பூளைமேடு சென்று ஸ்ரீமான் நாயுடு அவர்களைக் கண்டேன்.

தம் சரித்திரம் வெளிவருவதில் விருப்பம் இல்லாததனாலோ, நான் அதனை எழுதுவதில் அவருக்குப் பற்றுதல் இன்மையினாலோ 'அது அத்துணை முக்கியமில்லை' என்று எங்கள் சம்பாஷணைக்கு முற்றுப்புள்ளி போட்டுவிட்டார். எனினும், விவசாயம் கிராமச் சீர் அமைப்பு முதலியவற்றில் எனக்குள்ள விருப்பத்தை என் நண்பர் முதலியாரவர்கள் வாயிலாகத் தெரிந்துகொண்

டிருந்தமையால், அவர்கள் தம் விருந்தினராகச் சிலநாள் அங்கே தங்கியிருக்கு மாறு என்னை வற்புறுத்தினார்கள். நான் அதற்கு இசைந்து ஒரு நல்லநாள் பார்த்துக்கொண்டு அங்கே சென்றேன்.

பெரிய அரண்மனை போன்ற தம் பங்களாவிலேயே எனக்கு விடுதி அளிக்கப்பட்டது. அவர்களுடன் ஒரு பந்துவைப் போலவே இருந்து கொண்டு சிலநாள் அங்கே தங்கினேன். இக்காலத்தில் நாங்கள் இருவரும் ஒவ்வொரு நாளும் சிறிதுநேரம் பொது விஷயங்களைக் குறித்து உரையாடி வந்தோம். அக்காலை அவர்கள்பால் இருந்த பல அரிய குணங்களை நான் கண்டு கொண்டேன். நாயுடவர்களின் மூலமாக அவர்களுடைய உறவினரில் சிலருடைய நட்பும் எனக்குக் கிடைத்தது.

ஒரு வாரத்துக்குள் எங்கள் தொடர்பு அதிகமாகிவிட்டது. என்னை அவர்கள் நன்றாக அறிந்துகொள்ள அவகாசம் ஏற்பட்டது. ஜீவிய சரித்திரம் எழுதப்படும் அவசியத்தை நான் அடிக்கடி வற்புறுத்தி வருவதை முற்றிலும் மறுக்க அவர்களால் பின் இயலாமற் போயிற்று. அவர்களுடைய கட்டளை யின் பேரில் நான் அன்னார் தம் நிர்வாகத்தில் இருந்து வந்த இன்ஸ்டிட்யூட், உயர்தரப் பள்ளிக்கூடம், வேடச்சேரியில் அமைந்துள்ள கிராமப் பள்ளி, பண்ணை, தொழிற்சாலை ஆகிய இவற்றை நிதானமாகப் பார்வையிட்டு, வேண் டிய குறிப்புகளைத் திரட்டிக்கொள்ளும் பாக்கியம் பெற்றேன். சர்வஜன உயர் தரப் பாடசாலையின் தலைவர் திரு. ஆர். ஸ்ரீனிவாச ஐயங்காரவர்களும், வேறு சிலரும் பல விஷயங்களைச் சேகரிப்பதில் உற்ற துணைபுரிந்து வந்தமையை நான் மறத்தல் இயலாது.

நிற்க, கிராம முன்னேற்றம், விவசாயம் முதலிய விஷயங்களில் திவான் பகதூரவர்களுக்கும் எனக்கும் கருத்தொற்றுமை மிகுதியாக இருந்தது. புதிதாக நான் அப்பொழுதுதான் எழுதி முடித்திருந்த 'கிராமப் பொருள் நிலை' என்ற புத்தகத்தை அவர்கள் அச்சிட்டு வெளிப்படுத்த முன்வந்தார்கள். இச் சமயம் இங்கே ஒரு விஷயம் குறிப்பிடத் தக்கதாகும்: 'கிராமக் கூட்டுறவு' என்று நான் எழுதியிருந்த கையெழுத்துப் புத்தகத்தைப் பரிசோதித்துச் சில திருத்தங்களை அமைத்துக் கொடுத்தவர் திவான் பகதூரவர்களின் மாப் பிள்ளை திரு. ஆர். ஆர். ராமசாமி நாயுடவர்கள் ஆவார்கள். அப்புத்தகம் திவான் பகதூரவர்களின் சம்பந்தியார் உடுமலைப்பேட்டை வேங்கடேஸ்வரா மில்ஸ் மானேஜிங் ஏஜன்ட் ஸ்ரீமான் ஜி. வி. கோவிந்தசாமி நாயுடவர்களின் பொருளுதவியைக் கொண்டு வெளிவந்திருக்கிறது.

சரித்திரம் அவ்வளவு அவசரத்தில் எழுதப்படாது என்பதும், நானுகவே விஷயங்களை நிதானமாகக் கவனித்து அறிந்துகொள்ளவேண்டும் என்பதும், புகழ்ச்சி காரணமாக இல்லன கூறல் அந்நூலில் இடம் பெறலாகா தென்பதும் அவர்களுடைய அபிப்பிராயம் என்பதை நான் பின்னுல் தெரிந்து கொண்டேன். எனவே, சிலநாளில் நான் விடைபெற்றுக்கொண்டு சென்னை வந்து விட்டேன். பிறகு மறுபடியும் அக்டோபர் மாதம் 2-ம் தேதி பூளைமேடு சென்று பத்து நாள் அவர்களுடைய விருந்தினராக இருந்தேன். இம்முறை அவர்களுடைய வாழ்க்கை வரலாறுகள் சிலவற்றை அவர்கள் சொல்ல நான் தெரிந்துகொண்டதுண்டு.

'பல விஷயங்களை நான் மேலும் அறிய வேண்டும்; நீங்களே சொன்னு லன்றி நானுகவோ, பிறர் கூறியோ அவற்றை அறிவதற்கில்லை' என்று ஒரு நாள் என் அபிப்பிராயத்தைத் தெரிவித்தேன்.

நான் சரித்திரம் எழுதும் முயற்சியில் அமைத்துக்கொண்ட முறை களில் அவருக்குப் பூர்ண திருப்தி இருந்தது. அதனுல், நீங்கள் கேட்க விரும்புவனவற்றை எல்லாம் ஒரு தாளில் குறித்துக் கொடுங்கள்; சொல்ல வேண்டியவற்றைச் சொல்லுகிறேன். மற்றவைகளை நிதானமாக எழுதி அனுப்புகிறேன்' என்ருர்கள்.

அவர்களுடைய யோசனையின்படி நான், 'தெரிவிக்க வேண்டிய விபரங்கள்' என்ற தலைப்பில் பல கேள்விகளை எழுதி அவர்களிடம் கொடுத் தேன். விடையாகச் சிலவற்றை அவர்கள் நேரிற் கூறினுர்கள். அங்கே அதிக நாள் தங்குவதற்கு எனக்கு அவகாசம் இல்லாததனுல் நான் அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு சென்னை திரும்பிவிட்டேன்.

நான் கொடுத்துவந்த வினுக்களுக்கு அவர்கள் பதில் எழுதி வைத்தார் களோ என்னவோ எனக்குத் தெரியாது. தமக்குச் சில மாதங்கள் ஜாதக ரீதிப்படி போதாத காலம் என்றும் அதற்குப்பின் எழுதத் தொடங்கலாம் என்றும் தெரிவித்ததுமட்டும் இன்று நிகழ்ந்த நிகழ்ச்சிபோல் தோன்றுகிறது. அதற்குள் காலகதி மாறி அப்பெரியார் இறைவன் திருவடி நிழலை அடைந்த தனுல் அச்சரித்திரம் குறிப்புகளாகவே நின்றிருக்கிறது. சில தகவல்கள் கிடைக்காததனுல் எழுதுவது தாமதப்பட்ட போதிலும், ஸ்ரீ வேங்கடேசப் பெருமானின் அருளால் அது இனிது நிறைவேறும் என்பது என் நம்பிக்கை.

• சிறிகாலம் அவர்களுடன் பழகிவந்த சமயம் நான் தெரிந்து கொண்ட இயல்புகளில் இரண்டொன்றை இங்கே எழுத விரும்புகிறேன்.

# 1

கல்வி முறையைப்பற்றி அவர்களுக்கு உயர்ந்த அபிப்பிராயம் உண்டு. தம் செல்வக் குமாரர்களின் இளமைக் கல்வியைப்பற்றிக் கூறிவரும் காலையில்,

> 'பிள்ளைகளைச் சிறுவயதில் கீழ் வகுப்புக்களிற் கவனிக்காமற் போனால் பெரிய வகுப்புக்களில் அவர்களுக்கு விமோசனம் இல்லை; மேல் வகுப்புப் பாடங்களை அவர்களால் அறிந்து கொள்ள முடியாது; மேல் வகுப்புக்களில் கீழ்வகுப்புக்குரிய விஷயங்களைக் கற்பிக்கவும் இயலாது; ஆசிரியர் அப்பிள்ளைகள் விஷயத்தில் பராமுகமாக இருந்துவிடுவார்கள்; அவர்களையும் குறை கூறுவதற்கில்லை'

என்று குறிப்பிட்டார்கள். திரு. வேங்கடேசலு என்னும் குமாரரைச் சிறந்த முறையிற் படிப்பிக்க வேண்டுமென்று இவர்கள் பெருஞ் செலவையும் பொருட்படுத்தாது டோராடூனுக்கு அனுப்பி வைத்தார்கள். அங்கே பயிற்றப்படும் கல்வி முறையில் இவருக்குப் பிற்காலத்தில் நம்பிக்கை இல்லாமற் போயிற்று. கல்விக்கும் வாழ்க்கைக்கும் நெருங்கிய தொடர்பு அமையுமாறு பயிற்றப்படும் கல்வி முறையே நாட்டுக்கு இப்பொழுது அவசியம் என்று அவர்கள் கூறினார்கள்.

# 2

நான் எழுதிய கிராமப் பொருள் நிலை என்ற புத்தகத்தை நிதானமாக ஊன்றிப் படித்து விட்டு அதில் அங்கங்கே அடையாளமிட்டுச் சில விடங்களில், 'உண்மை' என்றும் வேறு சில இடங்களில், 'உண்மை, உண்மை' என்றும் எழுதித் தங்களுடைய கருத்தொற்றுமையையும் பாராட்டையும் தெரிவித்திருக்கிறார்கள். மற்றும் சில விடங்களில், எனக்கு யோசனை கூறும் நோக்கத்தோடு, 'மறுபடியும் கவனிக்க' என்று எழுதியுள்ளார்கள். அந்தப் புத்தகத்தைத் திருத்தி அமைக்க இக்குறிப்பு எனக்குப் பெரிதும் உதவியது. பிழைகளைக் காட்டுவதில் அவர் காட்டிய மரியாதையும், உண்மையைக் கண்டவிடத்துப் பாராட்டும் இயல்பும் இதனால் தெரிய வருகின்றன. அப்புத்தகம் இன்றும் அவர்களுடைய உடைமையாகவே இருந்து வருகிறது.

# 3

நான் ஒரு முறை அவர் முன்னிலையில் என்னை அறியாமல் உற்சாகத்தினால், 'பச்சையப்பன் தர்மங்கள், செங்கல்வராயன் இன்ஸ்டிட்யூட் முதலியவை அவைகளின் சொந்தக்காரர் ஆயுட்காலத்தில் அமையவில்லை; உங்களுக்குத்தான், நீங்களே இருந்து நேரில் தர்ம கைங்கரியங்களைச் செய்துவரும் பாக்யம்

கிடைத்திருக்கிறது' என்றேன். அதற்கு அவர்கள் மிகவும் நாணினார்கள். பிறகு, 'நான் ஒன்றும் செய்து விடவில்லை; ஆயினும் பிறர் அவற்றைப் பாராட்டும் போது, பிறருக்காக என்னைப் பயன்படுத்திக்கொள்ள அது ஒரு தூண்டுதலாக இருக்கிறது' என்று கூறினார்கள். இந்தத் தொடர்பாகப் பேசி வந்த போது, "இந்த இன்ஸ்டிட்யூட்டில் பிறர் கொடுக்கும் 'ஆர்டர்கள்' படி செய்யப்படும் பொருள்களைக் கண்டால், 'அவை போன்றவற்றை நாமும் ஏன் இங்கே செய்து கொள்ளக்கூடாது!' என்று எனக்கு ஆசை தோன்றுவதுண்டு. ஆனால் இவ்வளவும் தர்ம சொத்தல்லவா என்று சும்மா இருந்து விடுவேன்" என்று கூறினார்கள்.

அவர்களுடைய உயர்ந்த குணத்திற்கு வேறு என்ன சான்று வேண்டும்.



# கோயமுத்தூரும், கைத்தொழிலும்.

(திரு. டி. ஏ. ராமலிங்கம் செட்டியார், கோவை.)

சென்னை மாகாணத்தில் கோயமுத்தூரானது கைத்தொழிலில் விருத்தியடைந்த பிரதேசமாக எண்ணப்படுகிறது. நெடுநாளாக கோயமுத்தூரில் கைத்தறி நெசவு விருத்தியடைந்து வந்தது. கோயமுத்தூர் பட்டுப்புடவைகளும், கோயமுத்தூர் ஜரிகை உருமால்களும், பம்பாய் மத்திய மாகாணங்களில் அதிகமாகச் செலவாகிக்கொண்டுவந்தன. கோயமுத்தூர் ஜில்லாவிலுள்ள கிராமங்களில் நூல் வேஷ்டி சவுக்கங்களும், துப்பட்டிகளும் அதிகமாகச் செய்யப்பட்டு வெளியூர்களுக்கு அனுப்பப்பட்டு வந்தன. கதர் இயக்கம் ஆரம்பித்தபொழுது இந்த ஜில்லாவிலும் அடுத்த பிரதேசங்களிலும் பலப்பட்டது. இப்போது தமிழ்நாட்டுக்கே திருப்பூர் தனிஸ்தானமாக விளங்குகிறது. இம்மாதிரியாக வெகு காலமாக இந்த ஜில்லாவானது நெசவுத்தொழிலில் ஈடுபட்டு முன்னேற்றமடைந்து வந்தது.

நெசவுக்கு வேண்டிய நூல் உற்பத்தி விஷயமாக பல பிரயத்தனங்கள் செய்யப்பட்டன. முதலில் சுமார் 75 வருஷங்களுக்கு முன் இவ்வூர் முக்கிய வியாபாரிகள் சிலர் ஒரு நூல் சாலை ஏற்படுத்த முயற்சி செய்தார்கள். அந்தக்கால வழக்கப்படி ஐரோப்பியர் உதவியில்லாமல் வேண்டிய பொருள் சேகரிக்கவும், நடத்தவும் முடியாதெனக்கண்டு இங்கே வியாபாரம் செய்து வந்த ஸ்டேன்ஸ் கம்பெனியாரைச் சேர்த்து நடத்த ஆரம்பித்தார்கள். சீக்கிரத்தில் ஸ்டேன்ஸ் கம்பெனியாரே முக்கியஸ்தர்களாக ஏற்பட்டு அந்த மில்லை நடத்தி வந்தார்கள். பின்னாலே அவர்கள் கையைவிட்டு அந்த மில் மாறி உள்ளூரார் வசப்பட்டது தற்காலத்திய சரித்திரம். இந்த நூற்றாண்டு ஆரம்பத்தில் இரண்டாவது நூற்சாலை தேவகோட்டை ஜமீன்

தாராலும், அவர் காரியஸ்தர் சோமசுந்திரம் செட்டியராலும் ஏற்படுத்தப்பட்டு அதுவும் நன்ருக நடந்து வந்தது. பின்னுல் தொழில் அபிவிருத்தி விஷயமாக தேசத்தில் இயக்கம் பலப்பட்டவுடன் இந்த ஜில்லாவில் ஒன்றுக்குப் பின் ஒன்ருக சுமார் முப்பது சாலேகள் வரை ஸ்தாபிக்கப்பட்டு நடந்து வருகின்றன. இவைகளில் நாலு, ஐந்து மில்களில் மாத்திரம் நெசவுத்தொழிலும் நடந்து வருகிறது. இந்த மில்கள் ஏற்பட்டபின் கைத்தறிகளுக்கு நூல் கிடைப்பது சுலபமாக இருக்கிறது. ஆனுல் இரண்டு மூன்று மில்களில் மாத்திரம் 40-க்கு மேல்பட்ட கவுண்ட்ஸ் உள்ள நூல் உற்பத்தியாவதால் சரசமான நூல் அதிகமாக வெளியிலிருந்து தான் வந்து கொண்டிருக்கிறது.

இந்த ஜில்லாவில் வெகுகாலமாகப் பருத்தி அதிகமாகப் பயிர் செய்யப்பட்டு வருவதாலும், கம்போடியாப் பருத்தி வந்தபின் புஞ்சை நிலங்களிலும், தோட்டங்களிலும் பருத்தி உற்பத்தி வெகு அதிகமாக பயிர் செய்வதாலும், ஜின்னிங் பேக்டரிகளும், நூல் ஆலேகளும் அதிகமாகப் பெருக்கமடைந்தன. பொள்ளாச்சியிலும் வேறு சில இடங்களிலும் நிலக்கடலே அதிகப்பட, நிலக்கடலே உடைக்கிற யந்திரங்களும், எண்ணெய் ஆட்டுகிற யந்திரங்களும் பல இடங்களில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன.

ஜில்லாவில் சில இடங்களில் கரும்பு அதிகமாகப் பயிர் செய்யப்படுகிறது. சர்க்கரை உற்பத்திச் சாலேக்காகச் செய்யப்பட்ட சில பிரயத்தனங்கள் பலனடையவில்லே. சில இடங்களில் புகையிலே பயிர் செய்யப்படுகிறது. ஆனுல் அதை உபயோகிக்க வேண்டிய ஏற்பாடுகள் இன்னும் செய்யப்படவில்லே. சீக்கிரம் சர்க்கரை செய்யவும், சிகரெட், சுருட்டு செய்யவும் ஆலேகள் ஏற்படுமென்று எதிர்பார்க்கப்படுகின்றது. இதோடு கண்ணுடி செய்யவும், கெமிக்கல்ஸ் உற்பத்தி செய்யவும் ஆலேகள் தயாராகிக் கொண்டிருக்கின்றன.

மேற்கண்டபடி ஆலேகள் அதிகப்பட்டுக் கைத்தொழில் அபிவிருத்தி அடைதல் வேண்டும்; வேண்டிய யந்திரங்களேத் தயார் செய்யவும் யந்திரங்களில் வேலே செய்ய வேலேயாட்கள் தயாரிக்கவும்

43443

வேண்டிய ஏற்பாடுகள் செய்தல் அவசியம். அந்த அவசியத்தைப் பூர்த்தி செய்ய பி. எஸ். ஜீ. ரங்கசாமி நாயுடு அவர்கள் தங்கள் குடும்பத்தாரால் வைக்கப்பட்ட நிதியிலிருந்து ஒரு கைத்தொழில் வித்யாசாலை ஏற்படுத்தித் தானே அதை நடத்தும் பொறுப்பை ஏற்றுக்கொண்டு அதை இப்போதிருக்கும் உன்னத ஸ்தானத்திற்குக் கொண்டுவந்திருக்கிறார். அவர் தொழில் அபிவிருத்திக்குச் செய் திருக்கும் சேவை அதிகமாக விளக்கமடையும். இந்தப்பெரும் சேவை செய்த அவருக்கு ஜனங்கள் அதிகமும் கடப்பாடுடையவர் கள். அவருக்குப் பின் அந்தப் பள்ளிக்கூடத்தை நடத்துபவர்களும் அவரைப் பின்பற்றி, கைத்தொழில் அபிவிருத்திக்கும், சமூக அபி விருத்திக்கும் வேலை செய்வார்களாக.





இந்திய அரசாங்கக் கல்வி மந்திரியாகவிருந்த கனம். ஜோகேந்திர சிங் விஜயஞ்செய்தபோது எடுத்த படம்.



சர்வசன உயர்பள்ளி மாணவ மாணவிகளுடனும் ஆசிரியர்களுடனும் பள்ளி ஸ்தாபகர் நாயுடு அவர்கள் வீற்றிருக்கும் காட்சி.

# வாழ்க்கையின் பயனடைந்தார்.

(எ. வேங்கடேசலு, பி. எ. எல். டி., பூனைமேடு.)

---

இறைவன் படைப்பில் ஒவ்வொரு பொருளும் ஏதாயினும் ஒரு விதத்தில் பயனுடையதாக விருக்கிறது. பயனற்றவைகளை மனிதன் வெறுத்துக் களைந்து விடுகிறான். பலன்தராத பழமரங்களை வெட்டிச் சாய்க்கிறோம்; விளை நிலத்திலுள்ள புல்லுருவிகளைக் களைந்து விடுகிறோம். நீரற்ற கிணற்றைப் பாழுங்கிணறு எனச்சொல்லித் தூர்த்து விடுகிறோம். மக்கட் சமூகத்திலும் கொலைகாரரைக் களைந்து விடுகிறோம்.

"தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன், "நாட்டுக்கு நல்லுயிரீந்த நல்லான்", "யாதும் ஊரே யாவரும் கேளிர் எனும் துறவி," "உண்டி கொடுத்து உயிர்கொடுத்தோர்" ஆகியோரைப் பழந்தமிழ் நூல்களும், தற்கால நூல்களும் போற்றக் காண்கிறோம். "எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே யல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே" என்றார் தாயுமானார். "அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை பண்பும் பயனுமது" என முழங்கினார் பொய்யா மொழியார். ஆகையால் பழங்காலந்தொட்டே மனிதன் தன் உடலைப் பேணுவதுடன் நின்றுவிடவில்லை; உயிரையும் பேணினான். ஆனால் உயிரைப் பேண அறத்தைப் பேணவேண்டும்.

உண்கிறோம்; உடுக்கிறோம்; பணந்திரட்டுகிறோம்; அளவளாவிக் காலங்கழிக்கிறோம். "வாழ்க்கை வாழ்வதற்கே" என்பர் ஒரு சிலர். ஆனால் மனிதவுடல் எடுத்த எந்த அறிவுடை மனிதனும் தன்னைப்போன்ற பிறர்க்குத் தன்னாலியன்றவளவு பயனுடையவனாக்கிக் கொள்ளாமலிருந்தால் வாழ்க்கையின் நோக்கத்தை எப்படியடைந்தவனாவான்? சிறந்த கலைவாணர், நூதன ஆராய்ச்சியாளர், அமைதியை நிலைநாட்ட ஆருயிரும் வழங்குந் திண்மையாளர் ஆகியோர்க்குச் சென்னி தாழ்த்துகிறோம். அரிஸ்டாடில், பிளேடோ, மனு, பாரி, ஓரி, குமணன், நியூடன், ராமன், காந்தியடிகள், நேரு, ரவீந்திரன், ரவிவர்மா முதலியோரை நாம் போற்றுகிறோமென்றால் அவர்களுடைய வாழ்க்கை பயனுடையதாயிருந்தமையால் தான்.

இங்ஙனம் வாழ்க்கையின் பயனைப்பெற்ற பெரியார்களில் நம் பள்ளி ஸ்தாபகரும் ஒருவர். அவர் தன் முயற்சியால் உயர்வடைந்த தகைசால் பெரியர். படித்துப்பட்டம் பெருவிடினும் பழம் பிறப்பிற் கற்றகல்வி அவரைத் தொடர்ந்து வந்துளது என்பதை யாருமே மறுக்கமாட்டார். உயர் தொழிலாகிய உழுது பயிரிடும் தொழிலைச் சிறுவயதிலே பயின்ருர். எதைச் செய்யினும் செவ்வனே ஆற்றுந் திறமையைப் பெற்றிருந்தார். சிறிய பஞ்சறைக்கும் ஆலையை நடத்த முற்பட்ட இவர் பஞ்சாலைத்தொழில் பிற்காலத்தில் சிறப்படையப் போகிறது என அறிந்து ரங்கவிலாஸ் மில்லைத் தன் குடும்பத்தாரைக் கொண்டு நிறுவினர். பொருளைத் தேடுவதிலேயே மாத்திரம் இவர் நின்றுவிடவில்லையாகையால் புகழ் இவரைத் தேடி வந்தது.

ஏழையொருவனுக்குக் கல்வியறிவூட்டுதலானது

"இன்னறுங்கனிச் சோலைகள் செய்தல், இனிய நீர்ச்சுனைகளியற்றல்,
அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல், ஆலயம் பதினாயிரம் நாட்டல்,
பின்னருந் தருமங்கள் யாவும் பெயர் விளங்கி யொளிர நிறுத்தல்,
அன்னயாவினும் புண்ணியங்கோடி..........." கிடைக்

கும் என்ற பாரதிவாக்கின் உண்மையை அவர் அறிந்தார். உறு துணைவரைக் கொண்டு பள்ளியை நிறுவ ஏற்பாடுகள் செய்து வெற்றியும் பெற்ருர். மாளவியாஜிக்குக் கல்வியைப் பரப்புவதில் இருந்த ஆர்வமும் டாடாவுக்குக் கைத்தொழிலைப் பெருக்குவதில் இருந்த ஆர்வமும் இவரிடம் ஒருங்கே யமைந்திருந்தன. இவர் சமைத்த இவ்வகன்ற பள்ளியாகிய ஆலமரத்தின் நிழலில் இளைத்துப் போய்க் களைப்பாறி வாழ்க்கைப் பாதையில் முன்னேறியோர் மிகப்பலர். இளைப்பாறிக் கொண்டிருப்போர் பலர்; இன்றும் அவருடைய புகழை மங்காத வண்ணம் ஞாபகப்படுத்திக் கொண்டு கம்பீரமாக நிற்கிறது.

மேனாடுகட்குச்சென்று படித்துப்பட்டம் பெற்றவர்க்கும் தோன்ருத உயரிய எண்ணங்கள் அவரிடம் மலிந்திருந்தன. கிராமத்துக்குக் கிராமம் தவருது சென்று மக்களுக்கு நூல்களைக் கொடுத்துதவும் நூல் நிலயங்களைத் தோற்றுவிக்க எண்ணினர்; பெரிய கல்லூரியைக் காணப் போவதாகக் கனவு கண்டார். முந்தையது இன்னும் கனவாகவேயுள்ளதாயினும் பிந்தையது நனவாகிவிட்டது.

உயர்பள்ளிக்கு எதிரேயுள்ள அறநிலையம் இம்மைக்கு வேண்டிய தொழிற் கல்வியைப் பரப்புகிறது. இதை ஏற்படுத்தியதில் தான் அவருடைய பரந்த நோக்கமும், உலகானுபவமும் மக்களுக்குத் தெரியலாயிற்றெனலாம். இந்தத் தொழிற்கல்வி நிலயமாகிய குளத்துநீரை யருந்தி உடல் திண்மையும்,

மனத்திண்மையும் பெற்று உறு பொருள் தேடப்புகுந்தவர் மிகப்பலர். தொழிற் கல்வியைப் பரப்பிக் கொண்டே உழவுக்கான கருவிகளையும் அது செய்து வருகிறது. "உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்" என்பதைச் செயலில் காட்டினார். இப்பள்ளியை மேனாட்டுப் பள்ளிகளுக்கு ஒப்பானதாகச் செய்ய விரும்பினார். இன்னும் சிறிது காலம் இருந்திருப்பின் செய்து முடித்திருப்பார். எத்தனை இடையூறுகள் நேர்ந்த போதிலும் சிறந்த துணைவரின் உதவியால் இந்த ஸ்தாபனங்களைத் தோற்றுவித்தார். அடுத்த படியாக நுண்ணிய நூல் நூற்கும் ஆலையை நவீன முறையில் நாட்டிய பெருமையும் இவரைச் சார்ந்ததே. கைத்தொழிலுக்கு ஆதரவாக இருக்கும் பாங்கு இன்ஷூரன்ஸ் கம்பெனிகளை ஆரம்பிக்கவும் திட்டமிட்டார். ஒன்று இவருடைய குடும்பத்தாரால் ஆரம்பிக்கப்பட்டு விட்டது; மற்றது இன்னும் பெரிய அளவிலே ஆரம்பிக்கப்படவேண்டும்.

பள்ளி, தொழிற்பள்ளி, பஞ்சாலை இத்தனையும் கவனித்துக்கொண்டு உழவுத் தொழிலையும் மேற்பார்த்து வந்தார். இன்றும் வேடபட்டி கிராமத்துக்குச் செல்வோர் அவருடைய சிறந்த ஏற்பாடுகளைக் காணலாம். அவைகளைக் கண்டு விவசாய இலாகா அதிகாரிகளே வியக்கின்றனரென்றால் அவருடைய திறமையை எடுத்துரைக்கவும் வேண்டுமோ?

இனி இவருடைய பண்புகள் சிலவற்றை எடுத்துரைக்கலாம்.

"புன்னுனிமேல் நீர்போல் நிலையாமை யென்றெண்ணி
இன்னினியே செய்க அறவினை—இன்னினியே
நின்றான் இருந்தான் கிடந்தான் தன்கேள் அலறச்
சென்றான் எனப்படுதலால்" என்ற முதுமொழிக் கிணங்க

இவர் அறம்புரிந்தார். உண்டியும், உறையுளும் பெற்றுக் கல்வி பயின்ற சிறுவர் பலர்; பணவுதவி மட்டும் பெற்றுப் படித்து முடித்தோர் பலர். தன் செழுங்கிளை தாங்கி, ஊராரைப்பேணி எல்லாருடைய போற்றுதலுக்கும் இலக்காக விளங்கினார். வேளாளனென்பான் விருந்திருக்க உண்ணாதான் என்றபடி பார்த்தால் இவர் சிறந்த வேளாளன். புன்னகை பூத்த முகத்துடன் யாரையும் விரும்பியுபசரித்தல், காலந்தவறாது கருமம் முடித்தல், அறிவாளிகளைக் கலந்து உரையாடி தன் கேள்விச் செல்வத்தைப் பெருக்குவதில் ஆர்வம் காட்டுதல், எண்ணித்துணிதல், இல்லையெனாது ஈதல், முடிந்தவரை முயன்று பணியாற்றல், எடுத்த கருமத்தை முடித்தல், செய்வன திருந்தச் செய்தல், நாட்டுப்பற்று, எவருடைய மனத்தின் ஆழத்தையும் அளவிடுந் திறமை ஆகி

யவை அவருடைய பண்புகளில் சில. பரந்த நோக்கமும், வரும் பொருள் உரைக்கும் திறமையும் அவரிடமிருந்தமையால் தான் அவர் பல ஸ்தாபனங் களை நிறுவ முடிந்தது.

காந்தியடிகளுக்கு மிக விருப்பமான "வைஷ்ணவ ஜனதோ என்ற பாடலின் மொழிபெயர்ப்பைக் கீழே காணலாம். அது உண்மை வைஷ்ணவன் யார் எனக் கூறுகிறது. இப்பாடல் பன்னிப்பன்னிக்கூறும் பண்புகள் யாவை யும் நமது கட்டுரைத் தலைவரிடம் காணப்படுகின்றன எனக்கூறுவது மிகை யாகாது.

"உலகத்தீரே! உலகத்தீரே!
உண்மை வைணவன் உறுகுணங்கேண்மோ
பிறருடை யரந்தை பிழைபடாதறிந்து
விரைந்தவண் சென்று வீழ்த்தும் அவர் துயர்
நீக்கிக் கொஞ்சமும் நெஞ்சினிற் செருக்கு
இல்லாஞகி இறைஞ்சி நடக்கும்
பண்புடைய மானவன் வைணவன்;
சகத்துளோர் சாற்றும் சமரசத்தன்மை கொண்
டகண்டபுவனம் அடக்கும் மாந்தரை
ஏற்றிப் புனைந்து இகழா திறையும்
மானமும் பொறையும் மையறு மெய்யும்
அறுவகை கள்வர் அலைக்கும் மனனொடு
கச்ச மிவற்றைக் காசுறுப் புரந்து
அறம் பல பயின்று அருள் மிக வீந்து
பெற்றவன்னையையும் பெரிதும் போற்றி
வாழும் மானவன் வைணவனுவன்;
நான்முகன் படைத்த நானில மதனில்
மக்கள் முதற்கொடு மாக்களீருய்
'எல்லாவுயிரினும் யானே உளன்' எனக்
கண்ணன் கீதையில் கனிவுடன் கழறிய
அன்புடை மொழியை அகத்தினினில் நிறுத்திப்
புந்தியாலுரை செயற் பொறுமை நோகறும்
அற்றது பற்றெனில் அடையெலாம் வீடெனப்
பழியிழிவடையும் பாசம் போக்கியும்

பிறர்தா ரத்தைப் பெற்றதா யாகப்
பேணும் பான்மை பெரிதெனக் கூட்டியும்
மெய்யே யன்றிப் பொய்யொன் றறியான்
வாழு மானவன் வைணவ னவனே.
போகம் போக்கி மோகம் மாய்த்து
மற்கடத் தன்மை மனதை விராகம்
எனும்பா சத்தா லியல்புறப் பிணித்து
எப்பொரு ளுள்ளும் எங்கணும் பரந்து
நிற்கும் ஈசனின் நின்மலர்ப் பெயரைக்
காதினல் கேட்பின் கண்ணீர் மல்கி
மெய்யிற் பாய மேனி புளகித்
தானந் தக்கடல் ஆடுவோன் வைணவன்;
அன்னவன் தூயோன் ஆகத் திலெல்லாம்
புண்ணிய தீர்த்தமும் நண்ணிப் பொருந்தும்
வஞ்சமும் விஞ்சு வாதும் கோபமும்
எஞ்ச லின்றி யாவையும் நீத்து
ரமிக்கச் செய்யும் ராமநா மத்தைக்
காப்பாய்க் கொள்ளும் கண்ணியன் வைணவன்;
இத்தகை யோனை யெதிரிடு பவர்தம்
ஏழேழு பிறப்பும் ஈடே றும்மே.''

(இம் மொழிபெயர்ப்பு திரு. சி. கு. நாராயணசாமி முதலியாரின் நூலிலிருந்து எடுத்தெழுதப்பட்டது.)



# "நல்ல பையனுச்சே!"

(வேல்தாசன். கு. வேங்கடாசலம், பி. ஏ. எல். டி.
ஸ்ரீ ராமகிருஷ்ண வித்யாலயம்.)

---

திவான் பஹதூர் பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு அவர்களை நான் நேரில் அறிவேன். ஆனல் அப்படி அறிந்தது நான் மாணவனுக இருந்த பொழுதே. அவரை அறிவதற்கு வாய்ப்பாகச் சில சம்பவங்கள் நிகழ்ந்தன. அவைகளில் ஒன்றைப்பற்றியே நான் இங்கு விளக்கம் செய்ய விரும்புகின் றேன். அங்ஙனம் விளக்குவதில் சில முடிவுகளைத் தெரிவிப்பேனுகில், அவை அவருடைய குணத்தைப்பற்றி இரா. ஏனெனில் அவருடைய குணத்தைப் பற்றிய முடிவுக்கு வருவதை வாசகர்களுக்கே உரிமையாக்குகிறேன்.

இப்பொழுது கதையை ஆரம்பிக்கிறேன்.

பெரியப்பன் எங்களூர்ப் பையன். நல்ல குடும்பத்தில் பிறந்தான். எனக்கு நெருங்கிய சொந்தக்காரன். என்னைவிட வயதில் சிறியவன். ஆனல் உருவத்தில் பெரியவன்.

அவனும் நானும் 1925-ஆம் ஆண்டு ஜுன்-மாதம் 10-ந் தேதி சர்வ சனப் பள்ளியில் சேர்க்கப்பட்டோம். பள்ளியைச் சேர்ந்த மாணவர் விடுதி யில் விடப்பட்டோம். இருவரும் ஒரே அறையில் இருக்க ஏற்பாடு செய்யப் பட்டது. அவனுக்கு நான் துணை, எனக்கு அவன் துணை என்னும் நம்பிக்கை யுடன் எங்கள் பெற்ருேர் ஊர் திரும்பினர்.

ஒரு வாரம் ஆயிற்று. இருவருக்கும் ஊரைப்பற்றிய எண்ணங்கள் உதிக்கலாயின. எண்ணங்கள் என்னவோ இனிமை வாய்ந்தவையாகத் தானிருந்தன. இப்பொழுது நினைத்தாலும் அவ்வினிமை குன்றியதாகத் தோன்றவில்லை.

நான் எங்கள் வீட்டைப்பற்றியும் வீட்டிலுள்ளோரைப் பற்றியுமே நினைப்பாக இருந்தேன். பெரியப்பனே காட்டைப்பற்றியும் காட்டிலுள்ள குதிரையைப் பற்றியுமே ஞாபகமாக இருந்தான். தினே தினம் இவ் வெண்ணங்களுக்கு விசை அதிகரித்தது. ஒரே வாரத்தில் அவ்விசை அதன் உச்ச ஸ்தானத்தை அடைந்தது.

ஜூன் மாதம் 24-ஆம் தேதி இரவு. படுக்கையில் படுத்தபடியே நாங்கள் இருவரும் எங்கள் மனதைப் பரிமாறிக்கொள்ள ஆரம்பித்தோம். என்னுடைய ஞாபக சக்திக்கு ஒப்ப நடந்தது நடந்தபடியே தெரிவிக்கின்றேன்.

**அவன்** — தம்பீ, (தம்பீ, என்பது எனது செல்லப்பெயர்) எங்கய்யா அந்தச் செவலைக் குதிரையை எனக்காகவே வாங்கினர்; தெரியுமா?

**நான்** — ஆமா, ஆமா, உங்கம்மா எங்கிட்ட அப்படித்தான் சொன்னுங்கோ.

**அவன்** — எனக்குப்பாரு, அந்தக்குதிரை ஞாபகமாகவே இருக்கிறது. ரொம்ப நல்ல குதிரை. என்னைக் கண்டால் அப்படியே கனைத்துக் கொண்டு ஓடிவரும். எனக்கு அதன்மேல் வெகு பிரியம். எப்படிச் சவாரி செய்வேன், தெரியுமா? அடடா! கிரகத்தே!!

**நான்** — ஏன், இன்னும் மூணு மாசம் போனுல் கால் வருஷப் பரிஷை லீவு வரும்ணு சொல்ருங்களே; அப்பொப் போய் சும்மா சவாரி செய்யே. வேணும்னு, நானுங்கூட உங்க தோட்டத்துக்கு வர்ரேன், 'பெருமாள் புண்ணியத்திலே பொரி மாவு சாப்பிடறேனே'. என்ன சொல்ருய்?

**அவன்** — அது வரையிலும் தாட்டோணுமே சாமி! இன்னிக்குப் பாரு, வகுப்பிலே வாத்தியாரு குதிரையைப்பற்றி வியாசம், வேறே,' எழுதச் சொல்லி விட்டார். நான் எங்க செவலைக் குதிரையைப் பற்றி ஜோராய் முக்காப் பக்கம் விளாசித் தள்ளிவிட்டேன். பத்துக்கு ஆறு மார்க்குக்குக் குறைஞ்சுதோ அப்புறம் பாத்துக்கோ. ஆனு, என்ன கஷ்டம் தெரியுமா? குதிரை நினைப்பாகவே இருக்குது. எனக்காகவே அதை வாங்கியிருக்கிருங்கோ. எப்படியோ போய் அதைப் பாத்தே தீரோணும்.

**நான்** — அதெப்படி முடியும்? நீ கால் வருஷ லீவிலே தான் போகமுடியும். உங்கய்யா, அப்படித்தானே சொல்லிவிட்டுப் போனுர். அதுக்கு முந்திப் போனீன்னு, என்ன ஆகும் தெரியுமா?

**அவன்** — அதுக்கு முந்தி, எனக்குப் படிப்பு வராதுன்னு, வேறே சோசீகாரன், எங்கய்யா விடத்திலேயே சொல்லீயிருக்கிருன். அதுக்கென்ன சொல்லப் போறே?

**நான்** — எனக்குந்தான் படிப்பு வராதுன்னு ஜோசியன் சொன்னுனென்று எங்க மாமா எங்கய்யாவிடத்திலே, என்னையும் வெச்சீட்டுச் சொன்னுங்க. அதிலிருந்து பாரு, மனசுக்குள்ளே எப்படியோ

மாதிரி, மோடம் போட்ட மாதிரி இருந்துட்டு இருக்குது. நமக்கு வேறே படிப்பு வருது!

**அவன்** — (எழுந்து உட்கார்ந்து மிக ஆர்வத்துடன்) ஆமான்னே! அது தான் சரி!! பிடித்து விடலாம்னே சவாரி!!!

**நான்** — (வினயமாக) அது சரி. எங்க மாமன் என்னைச் சக்கையாய் வெளுத்துப் போடுவாங்களே! அதுக்கு என்ன பண்றது? எங்கய்யனுவது....................

**அவன்** — படிப்பு வராதுன்னு சொல்றவரும் அவர். பிறகு படிப்பு வராமெ, ஊருக்குப் போனுல், சக்கையாய் வெளுக்கிறவரும் அவர். அதெப்படி? இருந்திருந்து உன்னைப்போயி, அடிப்பாங்களா? அப்படித்தான் அடிச்சாலும், எங்கய்யனை விடவா, உங்க மாமன் அடிச்சுப் போடுவாரு?

**நான்** — அதெப்படி இப்பொச் சொல்றது? போய்ப் பார்த்தால் தானே தெரியும்? எனக்கென்னமோ பயமாகத்தான் இருக்குது.

**அவன்** — நான் போனென்னு, என்னைத் திண்ணைக்காலில் கட்டி வெச்சு எங்கய்யன் அடிப்பதாகச் சொல்லியிருக்கிறுங்கோ. ஒரு நாளைக்குத் தானே கோவத்திலே அடிப்பாங்கோ? யாருதானுகட்டும், தினந்தினமா அடிப்பாங்கோ?

**நான்** — ஒரு நாளைக்கு அந்த மாதிரி திம்மால் வாங்கினுல் போதாதா? ஊர்க்காரரெல்லாம் வேறே சிரிப்பாங்களே! கேவலத்துக்கல்லவோ அது வருது!

**அவன்** — இதிலென்ன கேவலம்? எனக்குப் படிப்பு வல்லே! அவ்வளவு தான்! ஜோசியன் சொன்னது வேறு இருக்குது!! படிப்பு வல்லீன்னு, அதுக்கு நாமென்ன செய்யமுடியும்? படிப்பு வல்லீன்னு, ஊருக்குப் போகாமே வேறெ எங்கே போகிறதாமா? ஆமான்னே! பேசாமப் புறப்படு. கோழி கூப்பிட எந்திரிச்சு, ரோட்டைப் பிடிச்சா, நேரா மதுக்கரை போயிடலாம். அப்புறம் வேணும்னு..................

**நான்** — (யோசனையுடன்) என்னை, வேறே, 'நல்ல பையன்' 'நல்ல பையன்' என்று ஊரிலே எல்லாரும் சொல்ருங்கோ. என்னைக் கண்டால் எல்லாரும் பிரியமாய், வேறே, பேசருங்கோ. 'படிப்பிலே கெட்டிக்காரன்' என்று பேரு, வேறே, வந்துட்டது. எங்க மாமனுக்கோ, எம்மேலே அளவு கடந்த பிரியம். நான் என்ன வேணும்னு வாங்கிக் கொடுத்துவிடுவாங்கோ. ஊர் வாத்தியார்

எஸ். எஸ். எல். ஸி. பரிக்ஷைக்கு (1931—32)ல் அனுப்பப் பட்ட மாணவர்கள்.
இதில் பி. எஸ். ஜி. ஆர். ஞாபகார்த்தக் கமிட்டியின் நிதிக் காப்பாளர்
திரு ஜி. கிருஷ்ணன் அவர்களையும், அங்கத்தினரான
திரு கே. ஈ. நாராயணசாமி நாயுடுவையும் காணலாம்.



என்ன சொல்லுவார்? என்ன பண்றதுன்னு ஒண்ணும் தெரிய மாட்டேங்குது எனக்கு.

**அவன்** — ஆமாமா, உனக்கும் உங்க தோட்டத்திலே குதிரை ஒண்ணு வாங்கி விட்டிருந்தாத் தெரியும். எங்களது இருக்குதே, என்னத் தெச் சொல்றது? எப்பேர்ப்பட்ட குதிரை தெரியுமா, அது? எனக்காகவே அதை வாங்கினுங்கோ? வாங்கி ரண்டு மாசமுங் கூட ஆகலே, அதுக்குள்ளே இங்கு வந்து தொலைஞ்சேன். எம் மனசுக்குள்ளே எப்படி வெந்துாட்டிருக்குது தெரியுமா? அட கிரகத்தே! கிரகத்தே!! கிரகத்தே!!!

—என்று சொல்லிக்கொண்டே மெல்ல எழுந்து ஒன்றுக்கு உட்கார்ந்து விட்டு வர வெளியே சென்றுன்.

இதைக் கேட்டதும் எனக்கும் குதிரைமேல் ஆசை பிறந்து விட்டது. ஊருக்குப் போய்க் குதிரை ஒன்று வாங்கிக் கொடுக்குமாறு தந்தையைக் கேட்பது. அவர் இசையாவிடில், தாயாரைக் கேட்பது; அவரும் இசையா விடில் மெல்லப்போய் மாமனைக் கேட்பது, என்ற திட்டத்தை உடனே மனதில் இட்டேன்.

ஆனால் நல்ல விதமாகப் போனால்தானே குதிரை கிடைக்கும். ஓளிந் தோடினல் குதிரைக்குப் பதிலாக முத்திரை கிடைப்பது உறுதி. மேலும் என்னை 'நல்ல பையன்' 'நல்ல பையன்' என்று அனைவரும் சொல்வது மனதுக் குள் பளீரென்று பிரகாசித்தது. ஊரார் வார்த்தையைப் பொய்ப்பிக்க மனதில் தைரியம் பிறக்கவில்லை. ஆகவே, ஒளிந்தோட மனம் இசைய வில்லை.

பெரியப்பன் திரும்பி வந்தான். என்னைப் பார்த்துத் துடுக்காக முடிவு கேட்டான். நான் சொன்ன 'வழ வழா' முடிவு அவனுக்குத் திருப்தி அளிக்க வில்லை. முணுமுணுத்துக் கொண்டே படுத்துக்கொண்டான்.

சற்று நேரம் இருவருக்கும் பேச்சே இல்லை. பிறகு நான் தூங்கி விட்டேன்.

* * * *

காலையில் எழுந்திருந்தேன். பெரியப்பனைக் காணேன்! விடுதியில் ஒரே குழப்பம். பெரியப்பன் ஊருக்கு ஓட்டம் பிடித்து விட்டான் என்ற விஷயம் பரவி விட்டது. வழியில் சந்தித்த ஒரு பையனிடம், 'நான், ஊருக்குப் போகிறேன். மத்தியான வரையில் வெங்கடாசலத்திடம் சொல்லி விடாதே. அதற்குள் நான் ஊருக்குப் பக்கமாய்ப் போய் விடுவேன்' என்று சொல்லிச் சென்றதாகத் தகவல் கிடைத்தது.

உடனே நானும் வெங்கிடசாமி என்னும் பெரிய மாணவனும் அவசர அவசரமாகப் பின் தொடர்ந்தோம். குறுக்கு வழியில் வேகமாக ஓட்டமும் நடையுமாகச் சென்று பாப்பநாயக்கன்பாளையம் அடைந்தோம்; அங்கு ஓர்க் ஷாப்புக்கு முன்னாலே, பாதையில் செல்லும் போது, "பிடித்தாடா! அவனையும்!! என்ற உரத்த குரலாக்னை கேட்டது.

அவ்வளவு தான். என் முன்னால் ஒரு பெரிய ஆள் நின்றார். "வா, நாயக்கர் உன்னைக் கூட்டிக்கொண்டு வரச் சொன்னார்" என்று கவலையற்ற தொனியில் சொன்னார்.

நானும் வெங்கிடசாமியும் நாயக்கர் முன்கொண்டு செல்லப்பட்டோம்.

அங்கு பெரியப்பன் கண்ணீரும் கம்பலையுமாகத் தலையைத் தொங்க விட்டுக்கொண்டு நின்று கொண்டிருந்தான். நிமிஷத்துக்கொரு தரம் தேம்பிக் கொண்டிருந்தான்.

'நாயக்கர்' என்றால் திருவாளர் பி. எஸ். ஜி. ரங்கசாமி நாய்க்கர் அவர்களையே இங்கு நான் குறிப்பிடுகிறேன். அப்பொழுது அவர் சர்வசனப் பள்ளிக்கு மானேஜர்; மாணவர் விடுதிக்குந் தலைவர்; வியாபாரத் துறையிலும் ஈடுபட்டு வந்தார். 'சிரசில் தலைப்பா, நெற்றியில் திருமண், முகத்தில் மீசை, மேனியில் கோட்டு, கழுத்தில் வஸ்திரம், இடுப்பில் தார்ப்பாச்சும்' அணிந்து கண்ய ரூபியாகக் கம்பீரப்பார்வையுடன், காரியத்துடுக்குடன், நாற்காலியில் அமர்ந்திருந்தார்.

என்னைப் பார்த்ததும்

**அவர்** — என்ன? நீயும் ஓடப் பார்க்கிறாயா?

**நான்** — (கொஞ்சம் பயத்துடனே) இல்லீங்கொ, நான் இவனைத் தேட வந்தேனுங்கொ. வெங்கிடுசாமியை வேணுமானால் கேளுங்கோ.

**அவர்** — (வெங்கிடுசாமியை நோக்கித் தெலுங்கில்) அடே! இவன் இவனைத் தேடித்தான் வந்தானா? அல்லது ஊருக்கு ஓட்டம் பிடிக்கிறானா?

**வெங்கிடசாமி** — (தெலுங்கில்) இவனைத் தேடித்தான் நாங்களிருவரும் வந்தோம்.

**அவர்** — (என்னை நோக்கி அதட்டி) நேத்து ராத்திரி நீங்க ரண்டு பேரும் என்ன பேசி வெச்சிருந்தீங்கோ? உள்ளதை ஒளிக்காமல் சொல்லி விடு.

நான் — இவன் தானுங்கோ, குதிரைமேலேயே நெனப்பா இருக்குதான்னு சொன்ஞன். எங்கள் தோட்டத்திலே குதிரையே இல்லீங்கோ. வேணும்னு அவனையே கேட்டுப்பாருங்கோ.

அவர் — உன் பேரு வெங்கடாசலந்தானே, ஆமாமா, உன்னைப்பற்றி நல்லாத் தெரியும். உங்க வகுப்பு வாத்தியாருங்கூட உன்னை நல்ல பையன் என்று தான் சொன்னார். இவனுடைய தகப்பனருங் கூட உன்னைப்பற்றி மேலாகத்தான் சொன்னார். நீ நல்ல பையன் ஆயிற்றே! நல்லாப் படிச்சு மேலுக்கு வரவேணும், தெரியுமா? படிக்காவிட்டால் மாடுதான் மேய்க்கப் போகணும், இல்லா விட்டால் (பெரியப்பனைப் பார்த்துவிட்டு) குதிரை மேய்க்கப் போகணும். மாடு, குதிரை மேய்ப்பவர்களுக்கு ஏது மரியாதை? படித்தவர்களுக்குத்தானே எல்லா மரியாதையும் வரும்.

இது வரை 'நல்ல பையன்' 'நல்ல பையன்' என்று என்னைப் பலபேரும் சொல்லியதை நினைத்து நினைத்து ஏற்கெனவே ஒரு விதச் சங்கடமான நிலைமையிலிருந்து கொண்டிருந்த என்னை நோக்கி "நீ நல்லபையன் ஆயிற்றே!" என்று நேர் முகமாகத் திருவாளர் பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு அவர்கள் சொன்னது, முந்திய 'நல்ல பையன்களுக்கெல்லாம் சேர்த்து முத்தாய்ப்பு வைத்தாற் போலாயிற்று. அவர் சொன்ன வார்த்தை என்னை நல்ல பையனுகவே செய்து விட்டது. ஏனெனில் நானும் ஏதோ, ஒரு சாக்காடு வைத்துக்கொண்டு ஊருக்குக் கம்பி நீட்டிவிடலாம் என்ற எண்ணத்தைத் தான் மனதுக்குள் மறைமுகமாகக் கொண்டிருந்தேன். ஆனால் 'நல்ல பையன்' என்று நாயக்கரவர்கள் சொன்னது, எனது தகாத நினைப்புக்குச் சரியான தடுதலாக வாய்த்தது.

இது வரையில் பெரியப்பனிடம் சாம, பேதமாகிய இரண்டு உபாயங்களைக் கையாண்டு பார்த்து, வெற்றி பெருமல், இப்பொழுது நாயக்கர் அவர்கள் தானத்தைக் கையாள நினைத்தார்கள். அவர் அவனைப் பார்த்து,

'அப்பா, தம்பீ, உங்கப்பா, உன்னைப்பற்றி எவ்வளவு பெருமையாக நினைத்துக் கொண்டிருக்கிறார், தெரியுமா? நீ, நல்ல படிப்பாளி ஆகி, பெரிய பதவிக்கு வந்தால் உன்னை எல்லாரும் மதிப்பார்கள். உன் குடும்பத்துக்கே அது பெரிய கௌரவம். மேலும் பெரிய இடத்தில் கலியாணம் செய்து, மிகவும் மேன்மையாக வாழலாம். இதையெல்லாம் கெடுத்துக் கொள்ளலாமா? உன்மேல் எனக்கு ரொம்பவும் பிரியம். நீ, பூளைமேட்டுக்கு இப்பொழுது நடந்து போக வேண்டாம். உன்னைக் காரில் கொண்டு போய் விடுகிறேன். உனக்கு என்ன வேண்டும்? சொல், நான் கொடுக்கிறேன். குதிரை உனக்கு அவ்வளவு பெரிதா? எங்கள் குதிரை இருக்கிறது. அதன் மேலே ஏறிச் சவாரி செய்து பழகு. குதிரைக்காரன் ஊர் சென்றிருக்கிறன். வந்ததும் உன்னிடம் அவனை அனுப்புகிறேன். மில் இருக்கிறது வந்து பார்.

நூல் நூற்பது, துணி நெய்வது எல்லாம் நம்ம மில்லில் நடைபெறுகிறது. நானே வந்து உனக்குக் காட்டுகிறேன் இரண்டு நாளைக்கு நம்ம பங்களாவிலே இரு. பிறகு வேணுமானால் விடுதிக்குப்போ. தின்பதற்குப் பலகாரம் தருகிறேன். ஏறு காரில்," என்றெல்லாம் எத்தனையோ சொன்னார்கள்.

குதிரை என்ற வார்த்தை சொன்னபோது மாத்திரம் பெரியப்பன் தனது முகத்தைக் கொஞ்சம் மேலே அசைத்தமாதிரி தெரிந்தது. பின்பு முன் போலவே குதிரை மாதிரி தலையைத் தொங்கவிட்டுக்கொண்டிருந்தான்.

நாய்க்கர் அவர்கள் செய்த பெரும் அறிவுரையினாலோ, அவ்வறிவுரையில் தொனித்த அன்பினாலோ, அவரது பேச்சில் தொக்கிய கண்டிப்பின் காரணமாகவோ, துணையாளனாகிய நான் சைகை மூலம் செய்த தூண்டுதலினாலோ, இவை அனைத்தும் சேர்ந்த காரணத்தாலோ, பெரியப்பன் காரில் ஏறினான்.

அடுத்த ஐந்தாவது நிமிஷத்தில் நாயக்கர் பங்களாவில் இருந்தோம். பலகார பக்ஷணங்கள் சாப்பிட்டோம். பெருமாள் புண்ணியத்தில் பொரிமாவு அடுத்த நாளே எனக்குக் கிடைத்து விட்டது. பிறகு நூல் மில்லைச் சுற்றிப் பார்த்தோம். மாலையில் நாங்களாகவே விடுதி சென்றடைந்தோம். இருவரும் மனச்சந்துஷ்டியுடனே தான் அன்றிரவு படுக்கைக்குச் சென்றதாக ஞாபகம். காலையில் படுக்கையை விட்டு எழுந்தேன். அந்தோ! பெரியப்பனைக் காணேன் !! அவனது படுக்கை விரித்தது விரித்தாற்போல் கிடந்தது. பெரியப்பன் கம்பி நீட்டி விட்டான் !!!

இரண்டு நாட்கள் கழித்து அவன் தந்தை வந்தார். நாயக்கர் அவர்களைச் சந்தித்து, முறையே நமஸ்காரம், நன்றி, வருத்தம், தெரிவித்தார். தமது மகனைத் திண்ணைக்காலில் கட்டிவைத்துச் சாட்டைகொண்டு விளாசியும், அவன் தோட்டத்து வேலையே செய்ய விரும்பினான் என்னும் விஷயத்தை அவர் சொன்னபொழுது, அவரது முகத்தில் தோல்வித் தோற்றமே தென்பட்டது. அவருக்குப் பெரிய தோல்விதான். ஆனால் மகனுக்கு அது பெரும் வெற்றியாக முடிந்தது.

பெரியப்பனிடத்தில் நாயக்கர் அவர்கள் கையாண்ட சாம பேதங்கள் போதிய வெற்றி பெறவில்லையெனினும், தானம் கையாளும் வரையாவது வெற்றி பெற்றது. பின்பு தானம் என்னும் உபாயத்தால் அடைந்த வெற்றி ஒரு நாளேனும் நிலைத்தது. ஆனால் தந்தையார் கையாண்ட தண்டோபாயத்தினால் பெருந்தோல்வி கைமேல் கிடைத்தது. அடியை வாங்கிக் கொண்ட பெரியப்பன் ஓய்வு நேரத்தில் படிப்பதற்காக ஊருக்குக் கொண்டுசென்றிருந்த சில புத்தகங்களை உடனுக்குடன் எடுத்துச்சென்று ஊருக்குப் பக்கத்திலுள்ள கள்ளிப்புதரில் வீசி எறிந்துவிட்டு, செவலைக் குதிரையைப் பார்க்க நேரே காட்டுக்குச் சென்று விட்டான்.

* * * *

"நீங்கள் அவனுக்காகக் குதிரை வாங்கினது பெருந்தவறு. அதுதான் அவனுடைய படிப்புக்குக் குந்தகமாக வந்து முடிந்தது," என்று நாயக்கரவர்கள் பெரியப்பனின் தந்தையை நொந்து கொண்டார்கள்.

ஆனால், குதிரை வேண்டுமென்று பெரியப்பன் சொன்னவுடன் அதை வாங்கித்தந்த அவன் தந்தைக்கு, குதிரை இருக்குமிடத்தில் அவனைப் படிக்க வைக்கவோ, அல்லது அவனிருக்குமிடத்தில் குதிரையைக் கொண்டு போய் விடவோ ஏன் புத்தி வராமலிருந்தது, என்பதுதான் ஆச்சரியமாயிருக்கிறது. அதைவிடப் பெரிய ஆச்சரியம், அவர் தமது மகனைத் திண்ணைக் காலில் கட்டி அடிப்பதால் திருத்திவிடமுடியும் என்று நம்பியதேயாகும்.

* * * *

பிறகு பெரியப்பனின் தந்தை அவனது படுக்கை பெட்டி முதலிய சாமான்களை எடுத்து வண்டியில் வைத்துக்கொண்டு என்னைக் கூப்பிட்டு மெதுவான குரலில் "தம்பீ, நீ நல்ல பையனுச்சே! நன்ருய்ப் படிக்க வேண்டும்" என்று சொல்லிவிட்டுச் சென்ருர்.

எனக்கு எப்படி இருந்திருக்கும்?



# நாயுடு அவர்களின் விவசாய முயற்சி

(பூளைமேடு இ. பாலகிருஷ்ண நாயுடு, பி. ஏ., பி. எல்.)

---

*உணவுப் பஞ்சம்!*

*நமது பாரத நாட்டிலா உணவுப்பஞ்சம்? அதுவும், பேராறுகள் பெருகி, நஞ்சை நிறைந்த தஞ்சை போன்ற வளஞ் சிறந்த களஞ்சியங்களுள்ள "தட்டா தளிக்கும்" தமிழகத்தில் கஞ்சிக்குப் பஞ்சமா? பொன்னைத்தந்த சென்னை நிலங்களின் முன்னைய வளங்கள் என்னவாயின?*

*மகாத்மா காந்தியடிகள் மறைவுக்கு இரண்டு நாட்களுக்கு முன் பியாரிலாலிடம் "சென்னை மாகாணத்தில் உணவுப் பஞ்சம் வரக் காரணமே யில்லை. நல்ல விளை நிலங்களும், ஏராளமான மணிலாக்கொட்டையும் தேங்காயும் வைத்துக்கொண்டு சென்னை மாகாண வாசிகள் ஏன் பஞ்சம் பாடவேண்டும்?" என்று கேட்டார். நமது மாகாணத்தின் உணவு உற்பத்தித் திறனை காந்திஜி உணர்ந்ததுபோல் நாம் உணரவில்லை. நாம் அதை உணர்ந்து உற்பத்தி பெருக்காததினால்தான் ஆறு சிறந்த நாட்டிற் சோறு குறைந்து, நஞ்சை நிரவிய நாட்டிற் பஞ்சம் பரவியது.*

*"பயிரை வளர்ப்பான் உயிரை வளர்ப்பான்" என்று பல நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்தே தமிழகத்தில் உழவுத்தொழில் தொழில்களிலெல்லாம் தலையானதாகக் கொண்டாடப்பட்டது. உழவின் உயர்வைச் சிறப்பித்துப் பாடாத தமிழ்ப் புலவரில்லை; எழுதாத ஏடில்லை. இதைப் பாடல்களில் பதித்தார்கள்; புராணங்களில் புனைந்தார்கள்; இதிகாசங்களில் இணைத்தார்கள். வேளாண்மையின் அருமையையும், வேளாளரின் பெருமையையும் தேன் சொட்டும் மொழிகளால் வான் முட்ட வருணித்தார்கள். உழவின் ஒப்பிலா உயர்வைப் பழமொழிகளில் பண்புற வமைத்ததுடன் அகவல்களில் அலங்கரித்து, சிந்துக்களில் சிங்காரித்து, பள்ளுகளில் பண்ணமைத்து, விருத்தங்களில் விஸ்தரித்து, வெண்பாக்களில் வியந்திருக்கிறார்கள்.*

*"தேன் பிலிற்று நீர்மைய" தான திருக்குறளின் அதிகார முறைமையைப்பற்றிச் சொல்லும் பரிமேலழகர் "உழவு, முன்னே குடி உயர்தற்கு ஏதுவென்ற முயற்சியாதலால், குடிசெயல்வகையின் பின் வைக்கப்பட்டது"*

என்கிறார். எனவே, குடி உயர்வதற்கு ஏதுவானது உழவு. வேறு என்னென்ன தொழில்களைச் செய்து திரிந்து, பல பல துறைகளில் சம்பாதித்துப் பொருள் பெற்றாலும், உணவின் பொருட்டு உழுவாரிடத்துச் செல்லவேண்டுதலால் "சுழன்றும் ஏர்ப் பின்ன துலகம்" என்றார் திருவள்ளுவர்.

இந்த உழவின் மேன்மையையும் அவசியத்தையும் நன்கு அறிந்திருந்தார் நமது திவான்பகதூர் பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயடு அவர்கள். நமது நாட்டிலுள்ள நிலங்களை யெல்லாம் சரிவரப் பயிர் செய்தால், உணவுப் பஞ்சமே இராதென்றும், நாம் உண்டது போக மிகுதி தானியங்களை அன்னிய நாடுகளுக்கும் அனுப்பலாமென்றும் அவர் அடிக்கடி சொன்னார். தமது ஊக்கத்திலும் காலத்திலும் பெரும் பங்கு விவசாயத்திற்காகச் செலவிட்டார். அதன் விளைவு, மேட்டுப் பூமிகள் தோட்டங்களாக, கோப்பில்லாத காடுகள் தோப்புக்களாக, புல் துலங்காத புஞ்சைகள் நெல் குலுங்கும் நஞ்சைகளாக மாறின.

அவர் சொந்த ஊரான பூளைமேடு, நீர் வளமே இல்லாத ஒரு "மேடு" தான். ஊருக்கு அழகு செய்யும் ஆறில்லை; வளந்தரும் குளமில்லை; மாரி நிரப்பும் ஏரியில்லை. கிராமவாசிகளுக்குத் தண்ணீர் "சேந்து" கிணறுகளிலிருந்து கிடைக்கிறது. (தெலுங்கில் "சேந்து" என்றால் கசப்பு என்று பொருள். அந்தத் தண்ணீரும் அப்படித்தான்.) அதுவும், அந்தத் தீர்த்தத்துக்கு, 70 அடி முதல் 100 அடிவரை கிணறுகள் தோண்டவேண்டும். இப்பேர்ப்பட்ட "வறண்ட" ஊரில் குடியிருப்பவர்கள் "வற்றாத பொய்கை வளநாடு" வேண்டுமென்று தேடுவது இயற்கை. இந்த வறட்டு மேட்டிலும் 100-அடி ஆழம் கிணறு தோண்டி அதில் வற்றாத பொய்கை கண்டு இயந்திர உதவியால் அத் தண்ணீரை இறைத்து, ஒரு கிணற்றிலிருந்து நூறு ஏகராவுக்குமேல் ஒருங்கே பயிர் செய்து பெரு வளம் செய்தவர்கள் காலம் சென்ற ஸ்ரீமான்கள் காஜுலு ஏ. அப்பாய் நாயடுவும், திவான்பகதூர் அவர்களின் சகோதரர் பி. எஸ். ஜி. நாராயணசாமி நாயடுவும் ஆவார்கள். அவர்கள் பல நவீன சாதனங்களைக் கொண்டு சிறப்பான முறையில் விவசாயம் நடத்தினார்கள். அதைத் தொடர்ந்து திவான்பகதூரும் அவர் சகோதரர் பி. எஸ் ஜி. கெங்கா நாயடு அவர்களும் பல பல கிணறுகள் வெட்டித் தண்ணீர் பாய்ச்சி, மழையின்றி விளையாத பூமிகளிலெல்லாம் ஏராளமான உணவு தானியங்களை உற்பத்தி செய்கிறார்கள்.

அவர்களின் விவசாய ஆர்வம் தமது சொந்த கிராமத்தோடு நிற்கவில்லை. "நாடா வளந்தரும்" வேடபட்டியில் ஏராளமான பூமியைச் சேர்த்து, நவீன முறையில் பலவித தானியங்களையும் உற்பத்தி செய்து, குன்றாச் செல்வம் குவித்துவருகிறார்கள். இதுவுமல்லாமல், திருச்சி, மதுரை முதலிய ஜில்லாக்களிலும் இக் குடும்பத்தாரின் விவசாய ஆர்வம் பண்ணையங்கள் வைத்துப் பரிபாலிக்கிறது.

திவான்பகதூர் ஒருநாள் தவறாமல் தமது எல்லா நிலங்களையும் செவ்வையாகச் சுற்றிப் பார்வையிட்டு, ஆட்களுக்கு ஏவவிடுவார்.

செல்லான் கிழவ னிருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும்.

என்பது வள்ளுவர் வாக்கு. அதாவது, நிலத்திற்குரியவன் நிலங்களுக்குச் செல்லாமல், ஆட்களை ஏவிவிட்டு, தான் வீட்டில் உட்கார்ந்திருந்தால், அந்த நிலம் என்ற பெண்ணானவள், கணவன் தன்னை அவமதித்த பெண்சாதியைப்போல் வெறுப்புக்கொண்டு, ஊடல் செய்து, சரியான பலனளிக்க மாட்டாள்.

திவான்பகதூர் தமது பண்ணையாட்களிடம் எப்போதும் அகமகிழ்ந்து, முகமலர்ந்து, அன்புகாட்டிப்பேசுவார். சிடுசிடுவென்று எரிந்து விழும் வழக்கமேயில்லை. வெயில் காலங்களில், தம்முடைய காரில் மோர்ப் பானை வைத்துக்கொண்டு வேலை செய்யும் ஆட்களுக்கு மோர் வார்ப்பாராம். அவர் காட்டிய அன்பால், புடைக்கும் வெயிலில் துடைக்கும் வேர்வையோடு, தோளெல்லாம் வலிக்க நாளெல்லாம் உழைத்தோரும் பாடுபட்ட சலிப்பு ஓடிவிட்டதென்பர்.

கால்நடைகளின்மேல் திவான்பகதூருக்கு அலாதி ஆசை. அளவில்லாத எருதுகள், பசுக்கள், எருமைகள் முதலிய இருந்தும், ஒவ்வொன்றையும் தனித்தனியாகக் கவனித்து, ஊட்டி வளர்த்தார்.

திவான்பகதூரின் விவசாய முயற்சியிலும் ஊக்கத்திலும் ஒரு பங்கு நம் எல்லாரிடமும் இருக்குமானால் உணவுப் பஞ்சம் தலைகாட்டா தொழியுமென்பது திண்ணம்.







நாயுடு அவர்களுடைய பெருமுயற்சியின் பலனாக இன்ஸ்டிட்யூட்டுடன் சம்பந்தப்பட்ட இருவர் பெவின் திட்டத்தின்படி பயிற்சிபெற இங்கிலாந்து சென்றனர். நாயுடு அவர்களுக்கு இருமருங்கிலும் அவர்கள் வீற்றிருப்பதைக்



இந்திய சர்க்கார் வர்த்தக மந்திரியாகவிருந்த சர். ஏ. ராமசாமி முதலியார் அவர்கள் விஜயம் செய்தபோது எடுத்த படம்.

# "அறஞ்செய்த பெரியார்"

( சிவக்கவிமணி சி. கே. சுப்ரமணிய முதலியார், பி. ஏ. )

முன்னை நாளிலே—அஃதாவது ஒரு முப்பது நாற்பது ஆண்டுகளுக்கு முன்னே—பள்ளிப் பிள்ளைகளுக்குப் படிப்பு ஆரம்பத்தில் நீதி வாக்கியங்கள் சொல்லி வைப்பார்கள். அவற்றுள் முதலில் வருவது அறஞ்செய விரும்பு. அஃது அகரம் என்ற தமிழ் எழுத்தில் தொடங்குகிறது. அதுபோலவே 'ஆ'காரத்துக்கு 'ஆறுவது சினம்'; இகரத்துக்கு 'இயல்வது கரவேல்' என்றிப்படி சிறுசிறு வாக்கியங்களாக வரும். இதை வரிசைப்படுத்திச் சிறுவர்க்கு எழுத்துக் கற்பிக்கும்போது அதனுடனே நீதி யொழுக்கத்தினையும் எளிய நடையிற் பாட்டாகக் கற்பித்து வந்தனர் நம் முன்னோர்; எழுத்துப் படிக்கும்போதே நல் ஒழுக்கமுங்கூடத் தெரிய வைத்தலே பெரிய அறமல்லவா? இவ்வாறு எழுத்துடனே கற்பிக்கப்பட்டபடி பிற்கால வாழ்க்கையில் நடந்தால் அந்த மக்கள் சிறந்த உலக வாழ்வு வாழ்வார்களன்றோ? அப்போது நாடும் நல்வாழ்வு பெறுமன்றோ?

நம் நாட்டில் இறைவரது மெய்ம் மொழியாகிய வேதம் இரண்டே தர்மங்களை விதி வாக்கியங்களாகப் போதிக்கின்றது. அவை தர்மம் சர: சத்தியம் வத: என்பன. தர்மத்தைச் செய் அல்லது தர்மத்தின்படி நட; சத்தியத்தைச் சொல் என்று பொருள்படும். இவ்வாறு வேதங்கள் தர்மத்தைச் செய் என்று கட்டளையிடவும் நமது பாட்டி அருளிய தமிழ் வேதம் அதனையே 'அறஞ்செய விரும்பு' என்று கூறியது. 'செய்' என்ற வேதத்தை விடச் 'செய்ய விரும்பு' என்ற தமிழ் வேதம் சிறந்த உபதேசம் செய்கின்றது; தர்மத்தை நடத்து என்ற வேத விதியைத் தெரிந்த பின்னர் தானே ஔவையார் அதைவிட இப்படிச் சொல்வது மேல் என்று எண்ணித் தர்மத்தைச் செய்ய விரும்பு என்றார்.

இதற்கு என்ன காரணம்? தர்மத்தைச் செய்யப் பலர்க்கும் முடிகிறதில்லை; செய்ய முடியாவிட்டாலும் விரும்பினாலே போதும் என்றபடியாம். இனி விருப்பம்தான் முதலில் உண்டாவது. அது முற்றி மேலே செயலாக உருவாகின்றது. ஆகையால் விருப்பம் விதை அஃதிருந்தால் காலம் வந்தபோது முளைத்துப் பலன் தரும். இனி விருப்பமில்லாமல் தீராக்கடனாக அறம் செய்வாருமுண்டு; பிறர் மதிக்கவும், பிறர்க்கஞ்சியும், பிறரால் தனக்கு ஒரு பிரதிப்பயன் வேண்டி வியாபாரம் போல எண்ணியும், புகழை

விரும்பியும் செய்வார் பலரைக் காண்கின்றோம்; அப்படியெல்லாம் இல்லாமல் அறத்தைச் செய்வதன்முன் அதனைச் செய்யும் விருப்பத்துடன் செய் என்றதுமாம்.

இனி தர்மம் என்ற வடமொழியே தமிழில் அறம் எனப்படுவது. தருமம் என்றால் இயல்பு என்பது பொருள்; மக்களுக்கு இயல்பாவது தருமம் செய்தல். அஃதாவது உயிர்க்குறுதி செய்தல்; இதம் செய்தல். அதர்மமாவது அது செய்யாமையே; இதனால் ஒருவன் வேறொரு குற்றமும் கெடுதியும் செய்யானாயினும் அவன் பிற உயிர்க்கு இதஞ் செய்யானாயின் அவன் அதர்மம் செய்தவனே யாவன்.

"இத மகிதங்களென் பதிகன் மனவாக்குக்காயத் (து)
இத முயிர்க்குறுதி செய்தல் இதமற்றது செய்யாமை"
(சிவஞான சித்தியார் 1-103)

இவை மனம் வாக்குக்காயம் என்ற மூன்றாலும் செய்யப்படும். செயலினாலன்றி எண்ணத்தினாலே தானும் அறமும் மறமும் செய்யப்படும் என்பதனைப் பலர் அறிவதில்லை. நல்ல சொற்களே தர்மமாம்; தீய சொற்கள் அதர்மமாம் என்பதும் பலபேர் அறிவதில்லை.

இனி இச் சிறிய மூன்று வார்த்தைகள் கொண்ட வாக்கியத்துக்கு இத்தனை பெரிய உரை எதற்கு என்று கேட்பீர்கள்.

நமது அறப் பெரியார் திரு. பி. எஸ். ஜி. அரங்கசாமி நாயுடு அவர்களைப் பற்றியெண்ணும்போது இக்கருத்துக்கள் எல்லாம் என் மனதில் எழுந்தன. அவர்கள்தாம் பூளைமேட்டில் முதலில் பஞ்சாலை தொடங்கியவர். அவர் நிறுவிய உயர்தரப் பள்ளியும், பி. எஸ். ஜி. அற நிலயமும் ஆயிரக் கணக்கான மக்களுக்குச் சீவனோபாயம் தருகின்றன: உழவும் கைத்தொழிலுமே நாட்டுக்கு ஆதரவான ஊன்றுகோல்கள் என்று கண்டு அவ்வழியே அவர் மக்களுக்குச் செய்த ஊற்றுக்கோலான அறங்கள் பல.

இனித்தம் ஊராகிய பூளைமேட்டிலன்றி வேடபட்டியிலும் உயர்தர ஆரம்பப் பள்ளி அவர் நன் முயற்சியால் நடத்தப் பெறுகின்றது; அரிசன இரவுப் பாடசாலையும் இவரது உதாரத்தை விளக்குகின்றது.

பெரியதொரு நூல் நிலயமும், சுற்றி வட்ட மிட்டு வரும் நூல் நிலயமும், மருத்துவ விடுதியும் இவர் விரும்பிச் செய்ய முயன்றுவந்த அறங்களாகும். பி. எஸ். ஜி. அறநிலயத் தொழிற் பள்ளியைப் பெரியதொரு டெக்னலாஜிகல் இன்ஸ்டிட்யூட் ஆக மாற்றி விரிவாக ஆக்க முயன்றார். இவ்வாறு அறப் பெரு மகனாக வாழ்ந்து இறைவனடியடைந்த இவரது இன்னுயிர் சாந்தியுடன் அங்கு நீடுவாழ்வதாக.



# அன்புக் காணிக்கை.

[ ஸ்ரீ ந. லக்ஷ்மணன் ஆசிரியர் "கூட்டுறவு." ]

---

சமூக ஊழியன், ஒரு பத்திரிகை ஆசிரியன் என்கிற அளவில், எனக்கு உயர் திரு. பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு அவர்களுடன் பலகாலம் பழகும் பாக்கியம் கிடைத்தது. ஸ்ரீ பி. எஸ். ஜி. தர்ம தொழிற்சாலையின் அஸ்திவார விழா பூளைமேட்டில் 1926ல் நடைபெற்றபோதுதான் அவர்களை முதன் முதலாகச் சந்தித்தேன். அப்போதிருந்து அவரது அந்தியகாலம் வரையில் இந்த நல்லுறவு சிறுகச் சிறுக வளர்ந்து வந்தது என் அதிர்ஷ்டமே. ஏனென்றால், விவசாயம், கைத்தொழில் போன்ற துறைகளில் அவர்கள் எனக்கு ஒரு வழி காட்டியாக விளங்கினார்கள். இலக்கியக் கல்வி, தொழிற் கல்வி, ஆகிய இரண்டும் ஒருங்கே நமது நாட்டில் வளம்பெறும் வகையில் அவர்களும் அவர்களுடைய குடும்பத்தாரும் செய்து வருகிற பெரு முயற்சிகளும் உருவகமான ஸ்தாபனங்களும் வெற்றியடைந்து வருவதைக் கண்டு மகிழ்ச்சி யடைகிறேன்.

இடம், பொருள், ஏவல் அறிந்து பேசும் திறமையுடையவர் நமது பெரியார். பெயர்பெற்ற நிபுணர்கள் கூட அவரிடம் முன்ஜாக்கிரதையுடனே பேசுவார்கள். இது தெரியாமல், வெளியூரிலிருந்து ஒரு "நிபுணர்" வந்தார். என் பேச்சை நிறுத்திக்கொண்டேன். ஏதேதோ பிரதாபம் பேசினார். அவர் புறப்பட்டுப் போனபிறகு, என்னிடம் நாயுடுகாரு கேட்டார்கள். "அவரை எனக்கு நன்றாகத் தெரியும்" என்று சுருக்கமாகப் பதில் சொன்னேன். எப்படியும் அவரது "பாச்சா" பலிக்கவில்லை. மனிதர்களின் தராதரத்தைச் சரிவர உணர்ந்துகொள்ளும் சக்தி காண்பது அரிது.

தேச பக்தர்களிடமும், பொது நல சேவை செய்கிறவர்களிடமும் அவர்களுக்கு விசேஷ அபிமானம் உண்டு. அவர்களுடைய பெரிய இல்லத்தின் வரவேற்பு மண்டபத்தில் அவர்களுடைய பெற்றோர் உருவப் படங்களும், மாபெரும் தலைவர்களின் படங்களும் காணப்படுகின்றன. என்னுடைய நினைவுக் குறிப்புகளைக் கவனித்துக் கேட்பார்கள். தீனபந்து சி. எப். ஆண்ட்ரூசும், குருதேவர் ரவீந்திர நாத தாகூரும் காலமானபோது, நாயுடுகாரு எனக்கு ஆறுதல் அளித்தது பொருத்தமாகவும் ஆச்சரியமாகவும் இருந்தது.

கிராமச் சீரமைப்பு சேவையில், ஓய்வு நேரங்களில் மாணவர்களின் கண்ணோட்டம் திரும்பவேண்டுமென்கிற நோக்கத்துடன், பூளைமேடு சர்வசன உயர்தரப் பாடசாலையின் தலைமை ஆசிரியர் ஸ்ரீ ஆர். ஸ்ரீனிவாச ஐயங்கார் சில அருமையான முன்னணி ஏற்பாடுகள் 1927லிருந்து செய்தார்கள். அவை களை நாயுடு அவர்கள் பெரிதும் ஆதரித்தார்கள். பல ஆண்டுகளுக்குப் பிறகு, வேடபட்டியில் ஒரு பெரிய பண்ணை அமைக்கப்பட்டபோது, அத்துடன் ஏழை மக்களுக்கு உதவக்கூடிய சுகாதார நிலையத்தையும் ஆரம்பித்து நடத்தினார்கள். அந்த வேலையை ஏற்றுக்கொண்ட அறிவாளிகளுக்குத் தாராளமாக உதவி அளித்தார்கள் என்பதை நேரில் அறிவேன். சுமார் ஏழு ஆண்டுகள் பெருந் துறையில் தங்கிக் கிராமச் சீரமைப்பு வேலை நடத்தியதின் பலனாக எனக்குக் கிடைத்த அனுபவத்தை வேடபட்டி நிலையத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும்படி அந்த கிராமத்திற்கு அவர்கள் என்னை அழைத்துப் போவார்கள். மேற்கு கோயமுத்தூரில் வேடபட்டிப் பண்ணையும் சென்னை சர்க்காரின் பண்ணையும் விவசாய ஆராய்ச்சிக்கூடமும் அருகாமையில் இருக்கின்றன. 1927-வது வரு ஷத்தில், ராஜாங்க விவசாயக் கமிஷனர்களுடன் சுற்றுப்பிரயாணம் செய்த போது, மற்ற மாகாணங்களின் சர்க்கார் பண்ணைகளையும் நேரில் பார்த்திருக் கிறேன். வேடபட்டிப் பண்ணை தனிச் சிறப்புடன் விளங்குவதை நானும், நேரில் விஷயமறிந்த என் நேயர்கள் சிலரும் கண்டு மகிழ்ச்சியடைகிறோம்.

நமது பெரியார் எவ்வளவு தெரிந்திருந்த போதிலும், அதை வெளி யே காட்டிக்கொள்ள மாட்டார்கள். பால் பண்ணை நடத்துவதில் எனக்கு விருப்பம் அதிகமென்று அவரிடம் சொன்னேன், பல நுட்பமான விஷயங் களை அவர்கள் எடுத்துச் சொல்லியதோடு நின்றுவிடவில்லை. அவர்களுடைய மருமகன் அறிவுக் களஞ்சியமாகிய ஸ்ரீ ஆர். ஆர். இராமசாமி நாயுடு பி. ஏ. பி. எல். அவர்களுக்கு என்னை அறிமுகப்படுத்தி, சிந்து மாகாணப் பசுக்களைக் குறித்துப் பேசும்படி செய்தார்கள்.

தமிழ் மக்கள் எல்லோருக்கும் பொது அறிவு புகட்டக்கூடிய வகை யில், எளிய நடையில், சொற்பமான விலைக்குச் சிறுசிறு புத்தகங்களை வெளியிட ஒரு திட்டம் தயாரித்தார்கள். அப்போது காகிதப் பஞ்சம் இடையூறாக நின்றது. ஏழை மக்களின் வாழ்க்கைத்தரம் உயர வேண்டும்; ஏழைகளின் வருவாயைப் பல புதிய வகைகளில் அதிகப்படுத்த வேண்டும் என்கிற ஆவ லுடனே என்னிடம் அடிக்கடி யோசனை செய்வார்கள்.

தமிழ் மொழியில் வெளிவந்து கொண்டிருக்கிற உயர்தரமான புத்தகங் களை வாங்கி வாசிப்பதில், திவான் பகதூர் அவர்களுக்கு விருப்பம் உண்டு.

பகல் முழுவதும் பலவிதமான பொறுப்புள்ள காரியங்களை குறிப்பிட்ட நேரங்களில் கவனிப்பார்கள். அப்படியிருந்தும், தினசரிப் பத்திரிகைகளையும் சிறந்த நூல்களையும் வாசிக்க நேரத்தையும் ஒதுக்கி வைத்திருந்தார்கள். இந்தத் தன்மையை எதிர்பாராத வகையில் உணர்ந்தேன். வெண்டல் வில்கி என்பவர் அமெரிக்காவிலிருந்து ஆகாய விமானத்தில் புறப்பட்டு ஒவ்வொரு தேசத்தையும் பார்வையிட்டார். அவருடைய உலக யாத்திரைக்குப் பிறகு, ஒரே ஒரு உலகம் என்கிற பெயர் பெற்ற புத்தகத்தை வெளியிட்டார். அதன் தமிழ் மொழி பெயர்ப்பு புத்தக ரூபமாகப் பிரசுரமான உடனே நாயுடு அவர்கள் அதை வாசித்துவிட்டு, சீன தேசத்தில் போர் முனைகளில் ஏற்பட்ட கூட்டுறவுத் தொழிற்சாலைகளின் அருமை பெருமைகளைக் குறித்து என்னிடம் பேசினார்கள். தமிழ்நாடு கூட்டுறவு பத்திரிகையின் ஆசிரியராகிய எனக்கு இது உள்ளபடியே திருப்தியளித்தது. உலக அனுபவம் விரிவடைவதற்கு உகந்தபடியாக, சிறந்த நூல்களை வாசிப்பதால் கிடைக்கும் நலன்களை செட்டி நாட்டைச் சார்ந்த பிரமுகர்களைப் போலவே, ஸ்ரீ பி. எஸ். ஜி. குடும்பத்தாரும் நன்கு உணர்ந்தவர்கள் என்பதைப் பல சந்தர்ப்பங்களில் கவனித்திருக்கிறேன்.

சில ஆத்மீகமான தொடர்புகளை வெளிப்படையாகவே குறிப்பிடுவது உசிதமல்ல. அவைகளைச் சொல்லாமலிருக்கவும் முடியவில்லை. பெரிய பணக்காரராகயிருந்தும், பயபக்தியுடனும் அடக்க ஒடுக்கமாகவும் தமது வாழ்க்கையை நமது பெரியார் நடத்திக் காண்பித்தார்கள். அவரது அருமைப் புதல்வர்களும் அவ்வழியே நடந்து நல்வாழ்வு வாழவெண்டுமென்பதில் கண்ணுங் கருத்துமாய் இருந்தார்கள் என்பதற்குச் சில உதாரணங்கள் என் மனதில் குடிகொண்டிருக்கின்றன. பகவத்கீதை பாராயணம் செய்வது அவர்களுடைய வழக்கம் என்று தெரியும்போது, இதய தாமரை மலர்ச்சியடைகிறது. நமது ராஜாஜி இயற்றிய ஆத்ம சோதனை என்கிற தத்துவ நூலும் நல்ல வழிகாட்டியாக உதவிற்று.

இறைவன் திருவடி நிழலை நமது பெரியார் அடையும் தருவாயில், ஏற்பட்ட ஒரு புனிதமான நிகழ்ச்சி. சென்ற தமிழ் வருஷப்பிறப்பு தினத்தில் நடந்தது அது. பல ஆண்டுகளாக நீடித்த ஆத்ம சோதனைக்குப் பிறகு, அவர்கள் எனக்கு ஒரு பண முடிப்புக் கொடுத்து உதவ முன் வந்தார்கள். என் அறுபதாவது ஆண்டில் அதைப் பெற்றுக் கொள்ளுவதாகப் பணிவுடன் உறுதி கூறி, அதில் ஒரு ரூபாய் மட்டும் ஏற்றுக் கொண்டேன். ராஜாஜி அமைத்த புதுப்பாளையம் ஆசிரமத்திலும், பிறகு மாயவரத்திலும் பல வருஷங்களுக்கு முன்பே, மகாத்மா காந்தி என்னிடம் கொடுத்து ஆட்கொண்டது போல, இதுவும் ஒரு அன்புக்காணிக்கை.

# நல்ல உபகாரி.

(திவான்பகதூர் தி. மு. நாராயணசாமி பிள்ளை, எம். ஏ. பி. எல். சென்னை.)

தென்னிந்தியாவிலேயே தங்கள் சொந்த உழைப்பினால் முன் வந்து விளங்குகின்ற பெரியவர்களுள் காலஞ்சென்ற ஸ்ரீமான் திவான்பகதூர் பி. எஸ். ஜி. ரெங்கசாமி நாயுடு அவர்கள் ஒருவர். அவர்களை எனக்குப் பல வருஷங்களாக நன்ருகத் தெரியும்.

அநேக நற்குணங்கள் அவர்களிடம் குடிகொண்டு அவர்களை அலங்கரித்து வந்தன. அவற்றில் முதன்மையாக அவர்களுடைய பக்தியையும், அமைதியையும், பொதுமக்கள் சேவையும் சிறப்பாகத்தான் கூறுவேன். எல்லாம் ஈசன் செயல் என்னும் முது மொழியைக் கடைப் பிடித்து நடந்துவந்தார். எது வந்தாலும், எப்படிப்பட்ட செல்வமும் செல்வாக்கும் எய்தினாலும் கடவுளை மறவாது, கடவுள் பாதங்களையே நினைந்து நினைந்து தொழுது தொழுது பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டிருந்தார். தவிர அவர்கள் எப்பொழுதும் புன்சிரிப்பையும் முக மலர்ச்சியையும் அமைதியையும் கொண்டிருந்தார்கள். ஒன்றிலும் அவசரப்படுவதேயில்லை. எதையும் ஆர தீர யோசித்துத்தான் செய்வார்கள்—எண்ணித் துணிவார்கள்; துணிந்தபின் என்ன இடையூறுகள் வந்தாலும் அவைகளைக் கவனியாமல் இடைவிடா முயற்சியால் வென்று துணிந்த காரியத்தை முடிப்பார்கள். அவர்களுக்கு யோகமும் நிறைய இருந்தது; ஆனால் யோகத்தைவிட யோக்கியதையே தலை சிறந்து விளங்கிற்று.

எவரையும் வசப்படுத்தக்கூடிய சக்தி அவர்களிடம் இருந்தது. அவர்களுக்கு நிர்வாக சக்தியும் நிரம்ப இருந்தது. எந்த நிர்வாகத்திலும் அந்தந்த நுட்பங்களை அறிந்து இடர்களைக் களைந்து ஜெயம் அடையும் வழியிலேயே நடந்துவந்தார். அநேக மில் நிர்வாக சபைகளிலும் தேவஸ்தானக் கமிட்டிகளிலும் இன்னும் பல பொது ஸ்தாபனங்களிலும் அங்கத்தினராகவும் தலைவராகவும் உழைத்து வந்தார். அவரோடு பழகினவர்களுக்குத் தெரியும் அவருடைய வேலைத்திறமை. மற்ற அங்கத்தினர்களுடன் வேற்றுமையின்றி ஒற்றுமையுடன் உழைத்துவந்தார்.

அவர் நல்ல உபகாரி. அநேகர் அவரால் பலன் அடைந்திருக்கிறார்கள். தங்களிடம் வருகிறவர்களை மனக் குதூகலத்துடன் வரவேற்று உபசரிப்பார். அவர் பரோபகாரி. தன் சொந்த ஊராகிய பூளைமேட்டில் பல மாணவ மாணவிகள் படிக்க ஒரு ஹை ஸ்கூலையும் இண்டஸ்ட்ரியல் ஸ்கூலையும், ஹாஸ்டலையும் ஸ்தாபித்துத் தங்கள் குடும்பச் சொத்திலிருந்து ஒரு பாகத்தை அவைகளுக்கு உதவி செய்து சாஸ்வதமாக தர்மம் ஏற்படுத்தியிருக்கிறார்.

அவர்களின் நற்குணங்களைக் கூறப்புகின் விரியும். தென்னிந்தியாவில் பொதுவாகவும், கோயம்புத்தூரில் சிறப்பாகவும் ஒரு திலகம்போலிருந்து விளங்கி வந்தார். அவர் இறந்தது கோயம்புத்தூர் வாசிகளுக்கு ஈடு பண்ண முடியாத ஒரு பெரிய நஷ்டம். அவர் செய்த நற் காரியங்களால் அவர் ஆத்மா சாந்தி அடைய வேண்டுமென்று பிரார்த்திக்கின்றேன்.



# "இவருடைய வாழ்வில் நான் கண்டவை"

[ கா. அ. ஷண்முக முதலியார், குடியாத்தம் ]

---

தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலான்
தோன்றலின் தோன்றாமை நன்றென்ற—சான்றவரின்
சொல்லிற் கிலக்காகத் தோன்றரங்க சாமியென்பான்
நல்லிசைகள் பெற்றுயர்ந்தான் நன்கு.

அண்ணார் திருவாளர் ரங்கசாமி நாயுடு அவர்கள் நல்ல புகழைப் பெற்றுப் பொலிந்தவர். இவருடைய தந்தையார் திரு. பி. எஸ். கோவிந்தசாமி நாயுடு அவர்கள் நிறைய நிலச் செல்வம் படைத்தவர்கள். பயிர்த்தொழிலில் வல்லவர்கள். இவர்கள் அத்தொழிலில் முயற்சி மிகச் செய்து திருவினை ஆக்கியவர்கள். திருமகள் அருள் நிறையப் பெற்றபின்னர் கரும்பாலை, பஞ்சாலைத் தொழில்களில் எண்ணம் செலுத்தினார்கள். இத்தொழில்களில் இவர்கள் பெற்ற அநுபவமும், திறனும், இவர்களை நூலாலைத் தொழிலில் ஈடுபடச் செய்தன.

இவர்கள் 1922-ம் ஆண்டில் ஸ்ரீரங்கவிலாஸ் மில்லைத் தொடங்கிய காலத்தில் எனக்கும் இவர்கள் குடும்பத்திற்கும் தொடர்பு ஏற்பட்டது. அந்த மில்லில் நான் ஒரு டைரக்டரானேன். அதுமுதல் எங்கள் தொடர்பு வளர்ந்து வந்துள்ளது. ரங்கவிலாஸ் மில்லில் நூல் நூற்கத் தொடங்கிய காலத்தில், யானும் என் மைத்துனர் குடியேற்றம் மா. ஆ. வேலாயுத முதலியார் அவர்களும் சேர்ந்து அந்த மில் நூலை விற்கும் ஏஜண்ட் உரிமை பெற்றோம். இக்காரணங்களினால் இவர்கள் குடும்பத்துடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அவர்களுடைய குடும்பத்திற்கு நான் நண்பன் ஆனேன்.

திரு. ரங்கசாமி நாயுடு அவர்களுடன் பிறந்தவர்கள் மூவர். இவர்கள் நால்வரும் குடும்ப முன்னேற்றத்தில் ஊக்கம் கொண்டவர்கள். ஒவ்வொருவரும் குடும்பத்தின் ஒவ்வொரு தொழிலை மேற்கொண்டு செவ்வையாகச்

செய்து வந்தார்கள். பயிர்த் தொழிலின் பொறுப்பு ரங்கசாமி நாயுடு அவர்களிடம் இருந்து வந்தது. இவர்களுடைய குடும்பம் மிகச் செழித்து வளர்ந்து பொலிவதற்கு அக்காலத்தில் இவர் உழைத்த உழைப்பே காரணம் என்று சொல்லுவது மிகையாகாது.

தாம் மேற்கொண்ட செயலை இனிது முடிக்க வேண்டும் என்பதில் அதிக கருத்துடையவர் ரங்கசாமி நாயுடு அவர்கள்.

"எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணியராகப் பெறின்"

என்பதற் கிணங்க இவர்தாம் எடுத்துக்கொண்ட காரியத்தில் மிகவும் திண்மை உடையவர். ரங்கவிலாஸ் மில் ஆரம்ப காலத்தில், நூல் மார்க்கட்டில் போட்டி ஏற்பட்டது. விலையைச் சிறிது தளர்த்தினால், மற்ற மில்களுடன் போட்டியிட்டு அதிகமாக நூல் விற்க இயலுமெனக் கருதி நாங்கள் இவர்களை அணுகினோம். அப்போது, ரங்கசாமி நாயுடு அவர்கள் சொன்னார்கள்:—"நாங்கள் கிராமம் கிராமமாகத் திரிந்து கூலிவேலை செய்து பிழைக்கும் ஏழைப் பெண்மணிகளிடமெல்லாம் அணுகி நம்பிக்கை சொல்லி அவர்கள் சேர்த்து வைத்திருந்த ரூ. 100, 200ஐக் கூட வாங்கிப் பங்கு சேர்த்திருக்கிறோம். மில்லை நல்லபடி நடத்தி லாபம் எடுத்துப் பங்குதாரர்களுக்குப் பங்கு கொடுக்கவேண்டும். தூக்கத்தில் கூட எங்களுக்கு இதே நினைவாக இருக்கிறது. பங்குதாரர்கள் மகிழும்படி அவர்களுக்குத் தக்க லாபம் கொடுக்கின்ற அன்றைக்குத்தான் நாங்கள் பெற்றவர்களுக்குப் பிள்ளையாவோம். உங்கள் கமிஷன் கைவிட்டுப் போனாலும் அதைப் பொருட் படுத்தாமல், இந்த சமயத்தில் அதிகமாக பேல்களை விற்று எங்களுடன் ஒத்துழைக்க வேண்டும். பின்னால் தக்க வருமானம் சம்பாதித்துக் கொள்ளலாம்" என்று சொன்னார்கள். என்ன பொறுப்பு! என்ன பெருந் தன்மை! இனிய வார்த்தை! தொடங்கிய தொழிலை முட்டின்றி முடிக்கவேண்டும்; சொன்ன சொல்லைக் காப்பாற்ற வேண்டும். இந்த இரண்டு ஏக்கங்களும் அவர்களுடைய வார்த்தைகளில் வெளியாகின்றன. இந்தத் தூய மனப்பான்மைதான் அவர்களுடைய குடும்பத்தைக் குபேர சம்பத்தில் திளைக்குமாறு வளர்க்கின்றது.

திரு. ரங்கசாமி நாயுடு அவர்களின் நிருவாகத் திறமைக்கு அவருடைய கண்காணிப்பில் இருந்து வந்த பயனீர் மில்லும், அவர்களுடைய தர்ம ஸ்தாபன கைத்தொழிற் சாலையும், பள்ளிக்கூடமும் ஆகிய இவைகளே தக்க சான்று பகரும்.

திருமகள் நூலாலே இன்று சிறப்புற்று விளங்குவதற்கு முக்கிய காரணம் இவர்கள் குடுபத்திற்கும் எனக்கும் ஒரு குடும்பம்போல் ஏற்பட்ட நல்ல தொடர்பு என்று சொல்லவேண்டும். இவர்கள் ஆற்றிய உதவி அளவிடற் பாலதன்று. மில்லை நடத்துவதற்கு ஊக்கம் அளித்தார்கள்; ஆக்கம் அளித் தார்கள். இயந்திரங்களைப் பூட்டிக் கொடுத்தார்கள்; ஓட்டிக்கொடுத்தார்கள். நிருவாகம் நடத்தும் விதமெல்லாம் காட்டிக்கொடுத்தார்கள். இன்னும் அவர்கள் பலவகையிலும் உதவி புரிந்து வருகிறார்கள். அவர்கள் உதவிக்கு நன்றி பாராட்டக் கடமைப் பட்டுள்ளேன்.

இவ்வாழ்க்கை மிகவும் தொல்லை நிறைந்தது. அதில் தலைமை வகிப்ப வர்கள் மிகவும் பொறுமை உடையவர்களாக இருக்கவேண்டும். பொறுமை உடையவர்கள்தான் வெற்றி காண முடியும். ரங்கசாமி நாயுடு அவர்கள் வாழ்க்கையில் வெற்றி கண்டவர்கள் அது இவர் கொண்டிருந்த பொறுமை யின் பயனாக விளைந்தது. இவருக்கு அண்ணன் தம்பிமார்கள் இருப்பினும், குடும்பத்தில் வருகின்ற பிளவுகளை அப்போதைக்கப்போது கவனித்துப் போக்குகின்றவர் இவரேதான். ஆண்களாயினும், பெண்களாயினும் யாருக் கேனும் மனவேற்றுமை ஏற்பட்டால், அதைப் பிறர் அறியாதபடி விசாரித்து ஒற்றுமை செய்வார். அவரவர்கள் சொல்லுவதைப் பொறுமையுடன் கேட்டு அவரவர்க்குத் தக்கபடி கூறிச் சமாதானப் படுத்துவார்.

இவருடைய வாழ்வில் நான் கண்டவை பொறுப்பு, திறமை, பொறுமை, இனியவை கூறல் ஆகிய இவைகளே. இந்த அரிய நல்ல குணங்களால், இவர் 'வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்தவர்' எனப் போற்றிப் புகழத் தக்கவராவர்.



# அச்சுக் கலை

(பி. எல். ராமசாமி, பி. எஸ். ஜி. அச்சகம்)

கோயமுத்தூரில் கம்ம குலத்தில் அநேக பெரியார்கள் செல்வத்துடனும் புகழுடனும் விளங்கியிருக்கின்றனர். அவர்களில் மிகவும் தலைசிறந்தவர் **திருவாளர் திவான்பகதூர் பூ. சா. கோ. அரங்கசாமி நாயுடு அவர்கள்;** கோவைக் கடுத்த பூளைமாநகரில் பெருங்குலத்தில் பெருங்குடும்பமாகிய பி. எஸ். ஜி. குடும்பத்தில் அவதரித்தார். பொதுவாக பி. எஸ். ஜீ. குடும்பத்தார் தருமத்திலும் பொதுஜன சேவையிலும் மற்றவர்களைக் காட்டிலும் மிக்க சிரத்தை எடுத்திருப்பது உலகறிந்த விஷயம். தர்மம், பொதுஜன சேவை முதலியவைகளில் முனைந்து நின்று சமூக முன்னேற்றத்திற்காக முழுப்பொறுப்புடனும் விடாமுயற்சியோடும் உழைத்தவர் திருவாளர் திவான் பகதூர் நாயுடு அவர்களே.

நம் நாட்டுக்குக் கல்விச் செல்வம் தொழிற் செல்வம் ஆகிய இரண்டும் மிகவும் அத்யாவசியமெனத் தெரிந்து முதலில் கல்விச் செல்வத்திற்கு ஆதாரமான சர்வசனப்பள்ளி ஒன்று நிறுவினர். அப்பள்ளியில் ஜாதி வித்தியாசமின்றி மாணவ மாணவிகள் கல்வி பயின்று வருகிறார்கள். கல்விச்செல்வத்திற்குத் துணையாக உள்ள தொழிற் செல்வம் நமது நாட்டின் ஜீவநாடி என்று அறிந்து திருவாளர் நாயுடு அவர்கள் பி. எஸ். ஜீ. அண்டு சன்ஸ் தொழிற் பள்ளி ஒன்று நிறுவி நம் நாட்டின் தற்காலத்திற்கு வேண்டிய சாதனங்கள் யாவும் அதன்மூலம் செய்வதற்குவேண்டிய ஏற்பாடு செய்துவைத்துப்போனார். இவை சுதந்திர இந்தியாவில் மிகவும் பயன்படும் என்பது திண்ணம். இவையெல்லாம் நன்கு ஆராய்ந்துபார்த்தால் திருவாளர் நாயுடு அவர்களின் விடாமுயற்சியும், உழைப்பும் நாட்டின்பால் உள்ள பற்றும் நன்கு புலப்படும்.

நம் நாட்டின் பிற்போக்கான மக்கள் ஹரிஜனங்கள் மற்றெல்லா வகுப்பாரைப்போல் எல்லாத்துறைகளிலும் சமமாக இருக்க

வேண்டுமென்பது நமது ஒப்புயர்வற்ற உத்தமர் காந்தியடிகளின் எண்ணம். அவ்வுத்தம எண்ணத்தை நடைமுறையில் காட்டும் வண்ணம் பூளைமேட்டிலும், வேடபட்டியிலும் பகல் இரவு பள்ளி களைத் தோற்றுவித்து கண்போன்ற கல்வியை அம் மக்கள் பெறும் படி செய்து அவர்களின் அறிவு வளர்ச்சியை வளர்த்த அவர்தம் சீரிய எண்ணத்தைப் போற்ருதார் யாருமிலர்.

திருவாளர் நாயுடு அவர்கள் கலை வளர்ச்சியில் மிகவும் ஆர்வ முள்ளவர். அவர் அச்சுத் தொழிலின் அபிவிருத்தியைப் பற்றியும், வருங்கால இயந்திர சாதனங்களின் இயல்புகளைப்பற்றியும் எண்ணி ஞர். அச்சகத்தின் முக்கியத்துவம் எதிர்காலத்தில் மகத்தானது என்றுணர்ந்து புதிய இயந்திரங்களாலும் எழுத்துப் பொறிகளாலும் ஆன ஒரு அச்சகத்தை நிறுவ மிகவும் ஆவல் கொண்டார். உலக மகா யுத்தத்திஞல் தேவையான சாதனங்கள் உடனே அகப்படாது என்ற கருத்திஞல் அவர் அந்த எண்ணத்தை ஒத்திப்போட நேர்ந் தது. இன்றைய நாகரிக உலகிலே உணவு, உடை எப்படி மனித னுக்கு இன்றியமையாததோ அதே மாதிரி அச்சடிக்கப்பட்ட செய்தித்தாள்களும் கல்வியறிவுக்குக் காரணமாக உள்ள புஸ்தகங் களும் அந்தக் கலையின்மூலமே வெளிவருவதால் ஆரம்ப நிலையிலுள்ள அச்சுக்கலையை மிகவும் சிறந்த முறையில் வளர்ச்சியடையச் செய்வ தன் மூலம் அநேக நன்மைகளைப் பெறலாம். மேஞட்டில் அச்சுத் தொழில் பெற்றுள்ள ஸ்தானத்தைப்பற்றியும் பலதடவைகளில் என்னிடம் சொல்லியிருக்கிருர். லட்சிய வாழ்வு வாழ்ந்த அவர் விதி வசத்தால் நம்மை விட்டுப் பிரிந்தார். அவர் சொன்ன பொன்மொழி களை மறவாமல் அச்சுக் கலையின் உதவியால் மலரும் அவர் நினைவு மலருக்கு இதை சமர்ப்பிக்கின்றேன்.



# "உண்டாலம்ம இவ்வுலகம்!"

(பி. ஆர். கிருஷ்ணமூர்த்தி நாயுடு, எம். ஏ. எல். டி.
பிரின்சிபால், பி. எஸ். ஜி. கல்லூரி.)

---

"உண்டா லம்மஇவ் வுலகம்...........
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுநர் உண்மையானே"

இவை இளம்பெருவழுதியின் பொய்யா மொழிகள். பிறர்க்கெனவே வாழும் பெருந்தகையாளர்கள் இருப்பதாலேயே இவ்வுலகம் நிலைத்திருக்கின்றது என்ற உண்மையை உணர்ந்து வியக்கின்றார் புலமை மிக்க இவ்வரசர். அவர்கள் இல்லையேல் இவ்வையகம் விரைந்து அழிவது திண்ணமன்றோ ?

யான் முதன்முதலில் பீளையம்பதிக்குச் சென்றபோது அங்குள்ளவை சில என் சிந்தையைக் கவர்ந்தன. அவற்றுள் அங்குப் பொலிவுறும் உயர்நிலைப் பள்ளியும் பொறித்தொழிற் கல்லூரியும் சிறப்பாகக் குறிப்பிடற்பாலன. இதனை ஆக்கியோர் மேன்மை என்னே !

இவை சுமார் இருபது ஆண்டுகளுக்குமுன் தோன்றின என்பதை யான் அறிந்தேன். இருபது யாண்டுகளுக்கு முன்னிருந்த காலநிலையை ஓர்மின். பொறித் தொழிற் கல்வியைப் பற்றிப் பெரும்பாலும் நம் நாடு நினையாத காலமன்றோ அது? மேலும் அக்காலத்தின் பொருள் நெருக்கடியைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ? ஆனால் எத்தகைய இடர்ப்பாட்டையும் பொருட்படுத்தாது "இடுக்கண் வருங்கால் நகுக அதனை, யடுத்தூர்வ தஃதொப்பதில்" என்ற தமிழ் மறைக்கேற்ப பெருமுயற்சி செய்து பொறித் தொழிற் கல்லூரியைத் தோற்றுவித்த பெரியார் திவான்பகதூர் அரங்கசாமி நாயுடு அவர்களைத் தமிழ் நாடு என்றேனும் மறக்குமோ ? இவரை யான் நேரில் அறியேனாயினும் இவருடைய நல்லியல்புகளெல்லாம் கேட்டறியும் பேறு பெற்றுள்ளேன்.

இன்று பி. எஸ். ஜி. அறநிலைச் சார்பில் நடைபெறும் பொறித் தொழிற் கல்லூரி ஒப்பற்று விளங்குகின்றது. நம் நாடு மேனாடுகளுக் கிணையாக வன்மையும் சிறப்பும் எய்த வேண்டுமாயின் நம் நாட்டின்கண் தொழின்முறை ஓங்கவேண்டும். இத்தொழில் வளர்ச்சித் துறையில் பி. எஸ். ஜி. அறநிலைப் பொறித்தொழிற் கல்லூரி சீரிய பணியாற்றி வருவது உலகறியும். மின்சாரத் துறையிலும், பொறித் துறையிலும் இன்னபிற சிறப்பான தொழிற்றுறையிலும் எத்துணை வல்லுநர்களை ஆக்கித் தந்துள் ளது இக்கல்லூரி! வாழ்க இக்கல்லூரி! இத்தகைய கல்லூரிகள் நாடு முழுதும் பல்குவதாக!

இதனைத் தோற்றுவித்த பெரியார் மறைந்தனர். இது நம் நாட்டின் தீவினைப் பயனன்றி வேறென்னை! இப்பெரியாரின் அருமைச் செல்வர்களும் அவர்தம் இளவலாம் பெருந்தகை உயர்திருவாளர் கங்கா நாயுடு அவர்களும் அவர் காட்டிய வழிநின்று அறநிலையங்களைச் சிறப்புற வளர்ச்சி செய்து வருகின்றனர். பொறித்தொழிற் கல்லூரியைக் கண்ணிமையெனக் காத் தொழுகும் இப்பெரியாரின் திருத்தோன்றல் உயர்திரு. தாமோதரனார் உற்சாகம் அளவிடற் கரிதாம். இவர் மேனாடு சென்று ஆண்டு பல காலம் உறைந்து தொழின் முறையில் நன்கு தேர்ந்து பலபட்டங்கள் சிறக்கப் பெற்ற பேரறிஞராவர். இவர்தம் தலைமையில் நடைபெறும் கல்லூரிகள் பொலிவுடன் மிளிரும் என்பதில் ஐயமுண்டோ?

"கேடில் விழுச் செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யாவை".

எனும் உண்மையை யுணர்ந்து உலகினுக்கு இச்செல்வத்தை வாரி வழங்கும் கழகங்களுக்குத் தோற்றம் தந்த பெருந்தகையார் அவர்களின் புகழ் மன்னுக! இளம்பெருவழுதியின் பொன்னுரைகள் எத்துணைப் பொருளுடையன என்பதை இப்பெரியாரின் வரலாறு உணர்த்துகின்றதன்றோ!



# கல்வியை வளர்த்த கருணை வள்ளல்

(எ. எம். குப்புசாமி, தலைமையாசிரியன், பி. எஸ். ஜி. அறநிலைய
அடிப்படைப் பள்ளி, பூளைமேடு.)

---

" கண்ணுடைய ரென்போர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லாதவர் " என்பது பொய்யாமொழி.

" கல்வி கைத்தொழில் கண்ணெனக் காக்க " என்பது
அரங்கசாமியார் அமுத வாக்கு.

மக்கட் பிறப்பின் பயன் கற்றலும் கற்றவை கேட்டலும் கேட்டதன் கண் நிற்றலுமாகுமென்றனர். அதனுள் முதலிற் கூறிய கற்றல்—கல்வி; மாந்தரின் அறிவு வளர்ச்சிக்கு இன்றியமையாதது. மக்களை மாக்களினின்று வேறுபடுத்தி யுணர்த்துவது அதுவாகலின் வள்ளுவரும் " விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல் கற்றாரோ டேனையவர் " என்றார்.

மேலும் இக்கல்வி அறம் பொரு ளின்பமும் வீடும் பயந்து, புறங் கடை நல்லிசையு நாட்டி உறுங்கவல் உற்றுழி கைகொடுக்கவும் வல்லது. இதனை யுணர்ந்து சமுதாய வளர்ச்சி செய்யப்புகுந்த ஆன்றோர், மாநில மக்கட்கு அறிவை வளர்ப்பதே, சமுதாய வளர்ப்பு எனக் கருதினர்; ஆங்காங்கே கல்விச் சாலையையும் குருக்குலங்களையும் நிறுவினர். அரசாங்கம் இத்துறையி லீடுபட்டதன் காரணமாக ஆண்டுதோறும் புதுப்புது முறைகள் அறிவுறுத் தப்பட்டன; கையாளப்பட்டன. இதன் விளைவாகக் கேடில் விழுச்செல்வம் கல்வி யென்பதை நாடெங்கும் உணர்ந்து நல்லறிவும் நற்பயனும் பெற்றன.

ஆனால் நம் இந்தியநாட்டிலோவெனில், வேதராமன் குதிரையின் வேகத்தில் கல்விவளர்ச்சி முன்னேறுகிறது. கல்வி முறையும் ஆரம்பக்கல்வி, உயர்தரக்கல்வி, கல்லூரிப்படிப்பு எனப் பிரிக்கப்பட்டது. இதன் பயனாக நாட்டில் கையெழுத்துப்போடத்தெரிந்தோர் தொகையைக் கணக்கிட்டு 100-க்கு இத்தனைபேர் படித்தவர்கள் என்ற கணக்கும் காட்டிவிட்டனர்.

உயர்தரக்கல்வி பரப்புவோரோவெனில் பிறமொழி மோகம்கொண்ட பட்ட தாரிகளேயும் சட்டப் புத்தகப் பூச்சிகளேயும் படைத்து விட்டுத் தம் கடமை முடிந்ததெனக் கைகொட்டி ஆரவாரிப்பாராயினர். இறுதியாக இதன்பயன் பள்ளிக்கணக்கு புள்ளிக்குதவாமலும் படிக்கும் மாணவர்களுக்கு அத்துறை யில் உள்ளக்கிளர்ச்சியில்லாமலும் போயின.

ஆனால் நாட்டை முன்னேற்ற முயற்சிகள் எடுக்கப்பட்டன. கூட்டங் கள் கூடின. ஆரம்பக் கல்வியே அடிப்படைக் கல்வியென்று அனைவரும் அறிந்தனர். அதனை வளப்படுத்தலே நாட்டின் வளம் என அறிவுறுத்தினர். உண்மையுடனும் ஊக்கத்துடனும் உள்ளக் கிளர்ச்சியுடனும் வேலை செய்தற் கேற்ற முறையில் அமைக்கப்படும் ஆரம்பப் பள்ளியே உண்மையில் பயனுள் ளது எனக் காட்டினர். யார்?

இந்தியாவின் தந்தை, அண்ணல், ஆத்ம ஞானியாகிய காந்தி மகான்.

கல்விப் புரட்சி வேண்டுமென்றல் எளிது. அடிப்படைக் கல்வியே அனைத்தினும் நன்றெனல் அதனினும் எளிது. ஆனால் ஆதரிப்போரும் செயல்முறையில் பின்பற்றுவோரும் இல்லையெனில் யாது பயன்?

அரையுயிராய் அலையும் ஆசிரியர்கள் மட்டும் போதுமா? போதாது.

கல்வி ஸ்தாபனங்களை நிறுவும் கர்த்தாக்களும் அவசியம்.

அத்தகைய கர்த்தா யாவர்?

அடிப்படைக் கல்வியில் ஆர்வம் கொண்டோர் — அதில் வெற்றி பெறப் பெரிதும் முயன்ற வீரர் — அறமே உருக்கொண்ட ஆண்டகையாளர் — காலமே பொருளெனக்கண்ட கனவான் — உழைப்பால் உயர்ந்த உத்தமர் — கடவுட் கொள்கையில் திடமுடை யுளத்தோர் — வாணிபம் கைத்தொழில் மாணுறு நிலையம் அமைத்தோர் — ஒரு முறை காணின் அவர் உறு குணம் யாவையும் அறுதியிட்டுரைக்கும் ஆற்றல் படைத்தோர் — காடாய்க்கிடந்த பூளைமேட்டை பூளைமா நகராக்கிய கொங்குநாட்டுக் குறுநிலக்கிழார், பூ. சா. கோ. அரங்கசாமி நாயுடு அவர்கள்.

செய்த தென்ன?

பூளைமேட்டிலும் வேடபட்டியிலும் சிரழிந்து, பாழடைந்த நிலையி லுள்ள ஆரம்பப் பள்ளிகளை மிக்க சிரமப்பட்டு, வேண்டுவன செய்து 1943

ஜூன்மாதத்தில் தமது நிர்வாகத்துக்கு மாற்றிச் செப்பனிட்டு, அறிவின் திருவுருவங்கள் அமர்ந்திருக்கும் கோயில்களாக ஆக்கி அப்பள்ளிகளை நல்ல நிலைமையிற் கண்டு அதிற் பயிலும் இளங் குழந்தைகள் உடல், உளம், ஒழுக்கம் வளரக் கண்டு களிக்கவேண்டுமென எண்ணங் கொண்டு ஆவன செய்தோர் — ஏழைக்குழந்தைகளுக்கு உண்டியும் உடையும் அளித்துச் சுத்தமாக இருத்தற்கு வேண்டிய சாதனங்களும் அளித்தார். மகாகவி பாரதியார் கூறியபடி வீதிதோறு மிரண்டொரு பள்ளி வேண்டுமென்று விரும்பினர். கிராமத்திற் கொரு பள்ளி வீதமேனும் அமைக்கவேண்டுமென உணர்ந்தார்.

இவையெல்லாம் கவிஞர் கற்பனையல்ல. புலவர் புகழ்ச்சியல்ல. இல்லதை உள்ளதாகக் கூறும் உரையல்ல. இரு ஆரம்பப் பள்ளிகள், ஒருயர்தரப்பள்ளி, கல்லூரி, தொழிற் கல்விப்பள்ளியும், ஆகியவை அவர் முயற்சியால் அவர் கருத்தினை முற்றுவிக்க நடைபெறுவது கண்ணிற்கண்ட காட்சிகள். இன்னும் ஐயம் உளதேல் காண்போர் கருத்தைக் கவருமாறு அவர் தம் கைப்பட எழுதிய கடிதத்தைக் காணுங்கள்.

நமது ஏ. எம். குப்புசாமிக்கு,

இப்பவும் 20—11—1946 திய கடிதம் கிடைத்தது. அடிப்படைக் கல்வி போதனாமுறைப்பள்ளியில் திறம்படப் படித்து வருவதைக் குறித்து சந்தோஷப்படுகின்றேன். குழந்தைகளுக்கு நல்ல முறையில் பாடங்களைக் கற்பித்து அவர்களை நற்பிரஜைகளாகக் கொண்டுவரும் நோக்கத்துடனேயே நீங்களெல்லோரும் போதனாமுறைப் பாடசாலைக்கு அனுப்பப்பட்டிருக்கிறீர்கள்....................ஒவ்வொரு ஆசிரியரும் தங்களுக்கு ஆர்வத்துடன் போதிக்கும் போதனாமுறைப்பள்ளி ஆசிரியரைப்போல் தங்களிடம் இனிமேல படிக்கப்போகும் இளைஞர்களுக்கு முயற்சியுடனும் ஆர்வத்துடனும் கற்பிக்க முயலவேண்டும்...................

உன்னிடம் படிக்கும் மாணவர்கள் பிற்காலத்தில் சகல துறைகளிலும் முன்னணியில் நின்றால்தான் உனக்கு நல்லபெயர் கிடைக்கும்.

நீயும் உன்னைப்போல நமது நிர்வாகத்தில் போயிருக்கும் மற்ற ஆசிரியர்களும், போதனாமுறைப்பயிற்சி அளிக்கப்பட்டபின் நல்ல ஊக்கத்துடன் மாணவர்களுக்குப் போதித்து அவர்களை நற்பிரஜைகளாக்க முயற்சிப்பீர்கள் என்று நினைக்கிறேன்.

இங்ஙனம்,

(ஒப்பம்) பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு.

ஆனால் சொல்லியவண்ணம் செய்தல் முயற்சியுடையார்க்கு எளி தெனக்காட்டிய முன்னேற்றவாதி. கல்லாதவர்க்கும் கல்வி புகட்டக் கல்விச் சாலையமைத்த கண்கண்ட தெய்வம். என்போன்றார் எத்துணையோ பேர்க்கு எளிமை நீக்கிய எம்மான்—இன்று இம்மண்ணுலகில் நம் புறக்கண் காணவாறு மறைந்தனர். அவர் உடல் மறையலாம். உள்ளக் கருத்து மறையாது. அவரை நம் கண்முன் காணுதிருக்கலாம். ஆனால் அவர் காட்டிய வழி நாம் கண்டு முன்னேறும் கருவியாய் அமைந்துள்ளது. அரங்கசாமியார் அமர வாழ்வெய்தினர். அவர் தொடங்கிய ஆரம்பப் பள்ளியாகிய அடிப்படைப்பள்ளி எத்துணையோ அறிஞர்களைத் தோற்றுவிக்கும் முயற்சியி லீடுபட்டுள்ளது; கல்வி—கைத்தொழில் கண்ணெனக் காக்க முற்பட்டுள்ளது. அதற்கென அவர் கட்டத் தொடங்கிய கட்டிடம் அவர்தம் புதல்வர்களின் முயற்சியில் கவினுற்று விளங்கும். மனத்தில் எண்ணிய கல்விவளர்ச்சி, மரபினர் முயற்சியால் மாண்புற்று விளங்கும்.

அவர் ஆசிரியர்பாற் கொண்டிருந்த அன்பிற்கும் ஆர்வத்துக்கும் அறிகுறியாகவும், அவர் செய்த நன்றியை மறவாச் சீர்மைக்காகவும், அவர் உளத்தில் கருக்கொண்டிருந்த உன்னதத் திட்டங்கள் உருப்பெற்று மேன்மை யடையவும் ஆசிரியர்களாகிய நாங்கள் முயலவேண்டும்; செயலாற்றவேண்டு மென்று வேண்டுகின்றேன். அத்துடன் அவர் மரபினர்க்கும் அவரைப் பின் பற்றுவோருக்கும், அவருடைய கருத்தால் ஒன்றுபட்டார்க்கும், அவரது நண்பர்க்கும், உற்றார் உவினருக்கும் உரிய வேண்டுகோள் ஒன்று. அவர் உளத்தில் கருக்கொண்ட திட்டங்கள் உருக்கொண்டு இவ்வுலகில் நிலவ அவர்கள் ஆவன செய்யவேண்டும் எனக் கோருகின்றோம்.



# வாழ்வாங்கு வாழ்ந்த பெருந்தகையாளர்

(வி. என். இராமசாமி நாயுடு, எம். ஏ., பி. டி., பூளைமேடு.)

---

நெருங்கிப் பழகிய கேண்மையாளர்களைப்பற்றி விளக்கி நயம்பட உரைத்தல் கடினமே. எனினும் எதிர்பாரா வகையில் காலஞ்சென்ற திவான்பகதூர் உயர் திரு. பி. எஸ். ஜீ. அரங்கசாமி நாயுடு அவர்களைப்பற்றி அன்னார் நினைவு மலருக்கு எழுதக் கடமைப் பட்டுள்ளேன் என்ற முறையில் சில கருத்துக்களை மட்டும் விரிவஞ்சி சுருக்கமாய்த் தர முற்படுகின்றேன்.

திவான்பகதூர் நாயுடு அவர்களிடம் குழந்தைநாள் தொடங்கி குழந்தைபோல் பழகிய பேறு எனக்குண்டு. அவர் இந்திய சுதந் திரம் தோன்றிய பின்னர் காலமாகாது முன்னரே விண்ணுல கெய்தி யதில் எனக்கு மிக்க வருத்தம். தேசத்தின் கல்வி, தொழில், பொரு ளாதாரம், உழவு ஆகியவற்றின் முன்னேற்றத்துக்காகத் தம் வாழ் நாளில் பெரும்பகுதியை ஈடுபடுத்திய பெரியார் தம் நாட்டைச் சுதந் திரநாடாய்க் காணக் கொடுத்துவைக்காததொன்றே குறை. நமக் கேற்பட்ட இப் பெருங் குறையை நாம் நிறை செய்வதேது?

நிற்க, உலகில் புகழொடு பிறந்தார், புகழ்தேடிக்கொண்டார், புகழ் சுமத்தப்பெற்றார் எனப் பொதுவாய் மூவகைப் புகழாளர்கள் உண்டு. இவர்களில், திவான்பகதூர் நாயுடு அவர்கள், நடுப் பிரி வினைச் சேர்ந்தோராவர். பாடுபடாது பழம் பெருமையால் அன்னார் உயர்ந்தாரல்லர்; பிறர் வேண்டிச் சுமத்திய புகழைத் தாங்கினா ரில்லை; தம் உறுதியான உழைப்பாலும், தம் நலத்தோடு பொது நலத்தையும் ஒன்றுபடுத்திப் பாடுபட்டதன் பயனாய் எய்திய புகழ் புனைந்து விளங்கிய செம்மல் அவர்.

அறம், பொருள், இன்பமென்னும் மூவகை உறுதிப்பொருள் களுள் நடுவண தெய்த இருதலையு மெய்தும் என்னும் உண்மை

யுரைக்கு சிறந்த சான்ருய் திவான்பகதூர் நாயுடு அவர்கள் திகழ்ந் தார். தீங்கின்றி இயன்றவழியெல்லாம் பொருளீட்டல், ஈட்டிய பொருளைத் தாமும் பிறரும் பயனெய்தும் வகைகளில் செலவிடல், என்ற கொள்கையைக் கடைப்பிடித் தொழுகிவந்தார். தம்மிடம் பழகுவார்க்கு, அதிலும் வாழ்க்கையில் புதிதாய்ப் புகுவார்க்கு அவர் இக் கொள்கையைப் பின்பற்றுமாறு அழுத்தமாய் எடுத்துரைப்பது வழக்கம்.

வினைத் திட்பம் மிக்க அவர் உழவும் தொழிலும் மக்கட்கு உடலும் உயிரும் போல்வன எனவே ஓர்ந்து அவற்றின் செயல் வகை களைச் செவ்வனே ஆய்ந்து நடைமுறையில் வெற்றிபெற ஆற்றி வந்தார். உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வதோடுமட்டும் அமையாமல் அவர் அவற்றை நல்வாழ்வின் பேருறுப்புகளாய்க் கொண்டார்.

உயர்ந்த கலாசாலைப் படிப்பும் பட்டங்களும் பெருதவராயி னும் நம் நாட்டு வளர்ச்சிக் குறு துணையாவது கல்வி என்ற உண் மையை இப் பெரியார் போன்று ஓர்ந்துணர்ந்தவர்கள் மிகச் சிலர். அதிலும் நம் நாட்டுப் பெண்மணிகள் கல்வித் துறையில் சிறந் துயர வேண்டும்; அவர்களே தேசவாழ்க்கையின் உயிர் நாடிகள் என்பது அவரது திடமான நம்பிக்கை. பெண்கள் நல வளர்ச்சியில் அவர் கொண்டிருந்த ஆர்வம் ஈடும் எடுப்பும் அற்றது என்பதை அவருடன் நெருங்கிப் பயின்ருர் எவரும் நன்குணர்வர்.

பொதுக்கல்வியும் தொழிற்கல்வியும் திவான்பகதூர் நாயுடு அவர்களிடம் புத்தொளியும் மணமும் பெற்றன எனல் மிகையன்று. ஏனெனில், அவர் எத்தகைய அறிவுத்துறையையும் வாழ்க்கையொடு பொருத்திக் காணும் இயல்புடையவராய் இருந்து வந்தார். வாழ்க் கைக்குச் சுவையற்ற வெறும் ஏட்டுக் கல்விப்பெருக்கில் அவர் நம்பிக்கையற்றவராய் இருந்தார். நல்லறிவு பெற்ருரிடம் அவர்கள் இளமை பாராட்டாது அவர் காட்டிவந்த பரிவும் மதிப்பும் அன்ஞர் பெருந்தகைமைக்கு ஏற்ற சான்றுகளாகும்.

வாழ்க்கை முறை பற்றிய அவர் கருத்துக்கள் பொன்னே போற் போற்றற் குரியனவாகும். குறிக்கோளில்லாத வாழ்க்கை நெறியற்றதென்பது அவரது ஆழ்ந்த கருத்தாகும். வாழ்க்கையில்

எவ்வளவுக் கெவ்வளவு போராட்டப் புயல்கள் மிகுந்து காணப்பட்டு அவற்றுடன் போரிடுகின்றேமோ அவ்வளவுக்கும் நல்லது என்பார். வாழ்க்கைச் சுழல்களிடை மனஉறுதி குன்ருது வெற்றி ஒன்றினையே நோக்கமாகக்கொண்டு மேற்செல்வதே உண்மையான வாழ்க்கை என்பது அவர் நம்பிக்கை. அமைதியான வாழ்வு நிலையற்றது; மாறுதலும் போராட்டமும்தான் நிலையானவை என்று கூறிய பழங் காலப் பேரறிஞர் ஹிராக்ளிடஸ் என்பவரது கருத்துக்களை திவான்பகதூர் நாயுடு அவர்களின் எண்ணங்கள் நினைவூட்டுவன வாய் இருக்கின்றன.

இறுதியாக திவான்பகதூர் நாயுடு அவர்களது செயல் திறமை யையும், அவர் எடுத்துக்கொண்ட முயற்சிகளில் கண்ட வெற்றி களையும் நினைத்துப் பார்க்கும்போது நமது பழம் பெருமை வாய்ந்த பாரத நாட்டின் தொழில் தந்தை எனப் பாராட்டிப் புகழப்பெறும் ஜே. என். டாடா அவர்களது பெரும் பெயர் என் உளக்கண்முன் நடமாடுகின்றது. தென்னுட்டின் டாடாவாய் திவான்பகதூர் நாயுடு அவர்களது திருப்பெயர் எனக்குக் காட்சியளிக்கின்றது. அதன் நிழலில் அவர் தொடங்கிவைத்து மேம்பட நடத்திவந்த முயற்சிகள் யாவும் பொலிந்து புகழ்பெற்றேங்கவேண்டும் என்பதே அப்பெரியா ரிடம் எடுத்துரைக்க இயலாத ஒருவகைப்பற்றும் மதிப்பும் கொண் டிருந்த எனது பேரவா வாகும்.

மேலும் "ஆற்றுவா ராற்றல் பணிதல்" என்ற மெய் யுரைக் கெடுத்துக்காட்டாய் விளங்கிய திவான்புகதூர் நாயுடு அவர்கள் நற்பெயர் சிறந்த முயற்சிகளில் ஈடுபடுவார்க்கு கலங்கரை விளக்கமாய் வழிகாட்டும் என்பது திண்ணம்.



# கம்மகுல விளக்கு.

க. தா. நாராயணசாமி நாயுடு,
(உடுமலை ஸ்ரீ பழனியாண்டவர் ஆலை, திண்டுக்கல் ஸ்ரீ சௌந்திரராஜா ஆலை.)

---

இன்றைக்குக் கோயமுத்தூர் பகுதி, தொழில் வளம் மிகுந்து விளங்குகிறது. இங்கிலாந்திற்கு மேன்செஸ்டர் எப்படியோ, அப்படி தென் இந்தியாவுக்கு கோவை, என்று போற்றுவதைக் கேட்டுக் களிக்கிறோம். கோவைக்கு எப்படி இப்பெருமை வந்தது, என்று ஆராய்ந்தால், பூளைமேடு சாமி கோவிந்தசாமி நாயுடு மக்கள் குடும்பம் கண்முன் காட்சியளிக்கிறது. அந்தக் குடும்பத்தவரே, முதல் முதலில், கோவைப் பக்கத்துப் பாதாளக் கிணறுகளுக்கு இயந்திரம் வைத்து நீர் இறைத்துப் பயிர் வளம் பெருக்கியவர்கள்; பஞ்சாலைகள் (ஜின்னிங் பாக்டரி) துவக்கியவர்கள்; நூல் ஆலைகள் தொடங்கியவர்கள்; ஆலைக்கருவிகள் செய்தவர்கள்; கோவையிலும் சுற்றுப் புறங்களிலும் உள்ள மற்றவர்களுக்கு இத்துறைகளில் வழி காட்டிகளாக விளங்கியவர்கள்.

அக்குடும்பத்தின் குன்றின்மேல் இட்ட விளக்கொளியாக மிளிர்ந்த பெரியாரே, ஸ்ரீமான் பி. எஸ். ஜி. அரங்கசாமி நாயுடு அவர்கள் ஆவார்கள். பள்ளிக்கூடப் படிப்பிற்கும், கூர்ந்த இயற்கை அறிவிற்கும், தொடர்பு இல்லையென்பதை அவர்களது வாழ்க்கையிலே காணலாம். அவர்களுக்கு, இளமைக் காலத்திலே, தற்காலக் கல்வியிலே, பயிற்சிபெற வாய்க்காது போனாலும், தொட்ட தொட்ட தொழில்களில் எல்லாம், அவர்களது துலங்கிய நுண் அறிவு திகழ்ந்து தோன்றி வந்தது. காலை எழுந்ததும், சிப்பந்திகள் பலர் அவர்களைக் காணக் காத்துக்கொண்டிருப்பர். அவரவர்கள் கொண்டுவந்த தபால்களைப் படிக்கக்கேட்டு, அவரவர்கள் எழுத வேண்டிய பதில்களை, மிக விரைவாகவும், மிக்க அறிவோடும், கூறும் ஆற்றலைக் கண்டால், வியப்பாக இருக்கும்.

ஆழ்ந்த நுண் அறிவும், அடர்ந்த ஆற்றலும் மட்டும் அவர்களுக்கு உரிமையானவையல்ல. இனிய சொல், கனியும் உள்ளம், நட்பிற்குகந்த தன்மை, வருவிருந்து ஓம்பும் வன்மை, பெரிய பொறுமை, எவர்க்கும் தம்மால் ஆன உதவியை உவகையோடு செய்ய முன்வரும் சிறந்த இயல்பு, முதலிய உயர்ந்த தெய்வப் பண்புகளும் அவர்களுடைய உரிமையான சொத்துக்களாக மிளிர்ந்தன.

அவர்களுடைய குணத்தின் மேன்மையை, 1924-ம் ஆண்டில் அவர்களோடு ஒருமாதம் நெருங்கிப்பழக நேர்ந்தபோது, கண்டு களித்திருக்கிறேன். இப்போது இந்திய அரசாங்கத்தின் நிதி அமைச்சராக இருக்கும் ஸ்ரீமான் ஆர். கே. ஷண்முகம் செட்டியார் அவர்கள், அந்த ஆண்டிலே இந்திய சட்ட சபைத் தேர்தலுக்கு நின்றார்கள். அவர்கள் சார்பாகத் தேர்தல் வேலை செய்யப் புறப்பட்ட திரு. நாயுடு அவர்கள், உடுமலை, பொள்ளாச்சித் தாலூக்காக்களில் எனக்கு உள்ள செல்வாக்கை அறிந்து, என்னை உடன் அழைத்துக் கொண்டு சென்றார்கள். ஒரு மாதம் ஊர் ஊராய் சுற்றினோம்.

எப்படிப்பட்டவரையும் வெல்லும் குணநலம், எதிர் வாதாடுபவரையும் வெல்லும் பொறுமை, எடுத்த செயலில் விடா முயற்சி, ஏசிப் பேசினாலும் சகித்துக் கொள்ளும் சக்தி, இவை அவர்களிடம் எவ்வளவு நிரம்பியிருந்தன என்று, பார்த்துப் பார்த்து உளம் பூரிப்பேன். நட்பிற்கு அவர் எவ்வளவு உரியவர்கள் என்று, நான் நேரில் அனுபவித்து அகமகிழ்ந்தேன்.

பி. எஸ். ஜி. மக்கள் குடும்பமே, தரும சிந்தை மிகுந்த குடும்பம். செய்யும் அறங்கள் நீடூழி நிலவிப் பெரும் பயன் விளைவிப்பதற்கான முறையில் திட்டம் இட்டு அமைப்பது என்பது, திருவாளர் அரங்கசாமி நாயுடு அவர்களுக்கு இருந்த திறமைகளில் சிறந்த திறமையாகும்.

பூளைமேடு சாமி கோவிந்தசாமி நாயுடு அவர்களுக்கு நான்கு பிள்ளைகள். ஆனால், தேடும் பொருள் யாவற்றையும், ஐந்து பாகங்களாகப் பிரித்துக்கொண்டே வந்தார்கள். ஐந்தாவது பங்கை அறவளர்ச்சிக்கென ஒதுக்கினார்கள். பி. எஸ். ஜி. தருமங்கள் எனப் பெயரிட்டார்கள். அத் தரும நிலையங்களாக, சர்வஜன உயர் நிலைப் பள்ளியையும், கைத்தொழில் கருவிகள் பள்ளிக்கூடத்தையும்

அமைத்தார்கள். எல்லா வகை இரும்புக் கருவிகளும் ஆலைகளும் செய்யும் தொழிற்சாலையை ஏற்படுத்தினார்கள். இப்போது அந் நிலையங்களில் 2500 இளைஞர்களுக்கு மேல் கல்வி பயின்றும், பயிற்சி பெற்றும், தொழிலாற்றியும், வருகின்றனர். நாட்டின் எதிர்காலச் சிறப்புக்கு இந்நிலையங்கள் ஏராளமாகக் கைங்கரியம் செய்து வருகின்றன. இவற்றோடு நில்லாமல் அண்மையில் பி. எஸ். ஜி. இன்ஸ்டிடியூட்டுக்குப் பக்கத்தில், ஒரு கல்லூரியையும் (காலேஜ்) இக்குடும்பத்தார் அமைத்து நடத்துகின்றனர்.

கிட்டத்தட்ட ஒரு அரைக்கோடி ரூபாய் இந்நிலையங்களுக்கு மூலதனம் சேர்த்துவிட்ட பெருமையில் பெரும் பங்கு, உயர் திரு. அரங்கசாமி நாயுடு அவர்களுக்கு உரியதாகும்.

இப்பள்ளிக்கூடங்களும், தொழிற்சாலைகளும், அமைக்கப் படுவதற்குமுன்பு, கோவையிலும் சுற்றுப்புறத்திலும், கம்ம இனத் துப் பிள்ளைகளும், படிப்பில் முன்னேறி வராது இருந்த மற்ற இனத்து மக்களும், எப்படி இருந்தனர், அவை அமைத்து சில ஆண்டுகளாக நடந்துவந்தபிறகு, அம்மக்கள் இப்போது, கல்வி யிலும், தொழில் வல்லமையிலும், எவ்வளவு மேம்பட்டிருக்கின்ற னர் என்று நோக்கினால், பி. எஸ். ஜி. அறநிலையம் செய்துள்ள அரிய சேவை, குன்றின்மேலிட்ட விளக்காக விளங்கும்.

படிக்கும், தொழில் பயிலும், பிள்ளைகளில் பெரும்பாலோ ருக்கு இலவசச் சம்பளமும், இருக்கவும் உண்ணவும் வசதிகளும், அளித்துவருவதினால், பல ஏழை எளிய பிள்ளைகளும், இந்நிலையங்க ளால் முன்னுக்கு வருவதற்கு முடிந்திருக்கிறது. இதுவரை ஆயிரக் கணக்கான பிள்ளைகள் அறிவு விளக்கமும், பிழைக்கும் நல்வழியும், பெறுவதற்குத் துணையாக இருந்த இக்குடும்பத்தினையும், அதன் ஒளிவிளக்காக விளங்கி இருந்த உயர்திரு. அரங்கசாமி நாயுடு அவர் களையும் எவ்வளவு புகழ்ந்தாலும் புகழலாம். தொழில் துறைகளில் மற்றவர்களுக்கு வழிகாட்டிகளாக இருந்ததுபோலவே அறத்துறை யிலும் உலகத்திற்கே என்றென்றும் வழிகாட்டிகளாக விளங்கும் சிறப்பு, அக்குடும்பத்தினருக்கும், எனது அன்பு மிக்க நண்பர் திரு. நாயுடு அவர்களுக்கும், உரியதாகும்.

அவர்கள் அமைத்த அறநிலையங்கள் கம்ம இனத்துக்குமட்டும் என்ற குறுகிய இனப்பற்றோடு அமைக்கப்பெற்றனவல்ல. உயர்

நிலைப்பள்ளிக்கூடத்தின் பெயரைப் பாருங்கள்! சர்வஜன உயர் நிலைப்பள்ளி, கம்மகுல உயர்நிலைப்பள்ளி அல்ல. எல்லா இனத்துப் பிள்ளைகளும், சிறிதும் வேறுபாடு இல்லாமல் சேர்ந்து பயிலலாம். அப்படியே அவர்கள் ஆலைத்தொழிலில் வழிகாட்டியதும், எல்லா இனத்தவருக்குமேயாகும். எந்த இனத்தவராயினும், ஆலை அமைக்க முற்பட்டால், அவருக்குப் பங்கு திரட்டிக்கொடுப்பதிலும், அமைக்கும் இரகசியங்களை அறிவிப்பதிலும், சிறிதும் வேறுபாட்டு மனம் கொள்ளாமல், ஒத்த உள்ளத்தவராய், உண்மையான உதவி புரிவது, அக்குடும்பத்தினருக்கும், திரு. நாயுடு அவர்களுக்கும், வாய்த்திருந்த சிறந்த குணமாகும். எத்தனையோ குடும்பங்கள் இக் குடும்பத்தினால் மேன்மையுற்றுவிட்டன.

பொதுவாக எல்லா இனத்தவரும் மேம்பாடு அடையவேண்டும் என்ற உயர்ந்த எண்ணம் உயர் திரு. நாயுடு அவர்களுக்கு இருந்து வந்தாலும், கம்ம இனத்தவரது மேன்மைக்கு அவர்களே பெரும் காரணஸ்தராயிருந்தார்கள். ஊக்கமும் உழைப்பும் உடைய எங்கள் கம்ம குலத்தினர், பி. எஸ். ஜி. குடும்பத்தை வழிகாட்டியாக வைத்துக்கொண்டதனால், விரைவாகப் பலவகைகளிலும் முன்னேற முடிந்தது. கோவையிலுள்ள பல பஞ்சாலை, நூல் ஆலை, துணி ஆலை, எண்ணெய் ஆலைகளில் பெரும்பாலானவற்றைக் கம்ம குடும்பத்தினர் நடத்துகின்றனர் என்று அறியும்போது, அறிஞர் அரங்கசாமி நாயுடு அவர்களின் அரிய பணியைப்பற்றிக் கம்ம குலத்தார் தனிப் பெருமையோடு பேசாமல் இருப்பதற்கு இல்லை.

கோவையின் தொழில் சிறப்புக்குக் காரணமாகவும் கம்ம குலத்தின் நந்தா விளக்காகவும், விளங்கிய திருமிகு. நாயுடு அவர்கள் இன்னும் சில ஆண்டுகளாவது, இருந்திருந்தால், அம்ம! எவ்வளவு பெருமையும், பேறுமாக இருந்திருக்கும்! நாம் கொடுத்துவைக்கவில்லை! நம் நாடும் கொடுத்துவைக்கவில்லை!

வாழ்க அவர்கள் புகழ்! வளர்க அவர்கள் அறம்!
உயர்க அவர்கள் குடும்பம்! உறுக நாடு நலம் பல!



# வரையாது வழங்கும் வள்ளல்

வா. தி. மாசிலாமணி முதலியார்
(இந்துமத பாடசாலை, வாலாஜாபாத்.)

---

திவான்பகதூர் பி. எஸ். ஜீ. அரங்கசாமி நாயுடு அவர்களோடு இருபது ஆண்டுகள் பழகி உள்ளேன். கோவைக்குச் சென்ற போதெல்லாம் அவரைக் காண்பேன். அவரோடு இரண்டொரு நாட்கள் தங்குவேன். அவருடன் கலந்துப் பேசி மகிழ்வேன். மாலை வேளைகளில் உலாவச் செல்லுகையில் அவருடைய கருத் தமைந்த உயர்ந்த சொற்களைப் பல முறைகளும் கேட்டுப் பயன் அடைந்தவர்களில் யானும் ஒருவன்.

திவான்பகதூர் நாயுடு அவர்களுக்கும் வாலாஜாபாத் இந்துமத பாடசாலைக்கும் நெருங்கிய தொடர்புகள் பல உண்டு. பாடசாலை யின் ஆண்டு விழா ஒன்று உயர்திரு. வி. இராமகிருஷ்ண ஐ. சி. எஸ். அவர்கள் தலைமையில் நடந்தது. திவான்பகதூர் வி. பாஷியம் ஐயங்கார் அவர்களும் அவ்விழாவிற்கு வருகை புரிந்தார்கள். அவ் விழாவில் மாணவர்களுக்கு மகிழ்ச்சியுடன் பரிசளித்தவர் நமது உயர்திரு. திவான்பகதூர் நாயுடு அவர்கள்.

வாலாஜாபாத் இந்துமத பாடசாலையின் மாணவர்கள் 1943-ல் சுற்றுப் பயணம் செய்தனர். அவர்கள் கோவைக்கும் சென் றனர். அப்பொழுது பூளைமேட்டில் பி. எஸ். ஜீ. தொழிற்சாலையில் வரவேற்று உபசரித்தவர் திவான்பகதூர் நாயுடு அவர்களாவர். பி. எஸ். ஜீ. மண்டபத்தில் திவான்பகதூர் அவர்கள் தலைமையில் மாணவர்கள் உடற்பயிற்சிகள், சொல்லாட்டம், சொற்போர் சொற் பொழிவு, சிறுநடிப்பு முதலியவை நடத்தினர். அவற்றை எல்லாம் கண்டு அவர்களை எல்லாம் வாழ்த்தி அறுசுவை உண்டியோடு உடை யும் இலவசமாக வழங்கியவள்ளல் திரு. நாயுடு அவர்கள்.

இந்துமத பாடசாலையில் எட்டாவது வகுப்பு படித்து வெற்றி யோடு வெளிவரும் மாணவர்களில் ஆண்டு தோரும் ஒருவரை தமது உயர்நிலைப்பள்ளியிலும், மாணவரில்லத்திலும் இலவசமாகச் சேர்த்து ஆதரிப்பது உயர்திரு. பி. எஸ். ஜீ. அவர்கள் குடும்பமாகும்.

திவான்பகதூர் நாயுடு அவர்கள் ஆட்சித் திறமைமிக்கவர். பி. எஸ். ஜி. அறநிலையமே அதற்குப் போதிய சான்ருகும். அவரது உயர்ந்த எண்ணங்களும், இனியத் தோற்றமும் பயன்மிக்க சொற் களும் எப்பொழுதும் மறக்க முடியாதவை. இந்துமத பாடசாலை யின் ஆட்சிக் கழகத்தில் அவரையும் ஒருவராக எழுதி இருக்கிரேம். அந்தப் பேறு பெருமற் போனேம். அவரது ஆன்மா அமைவுற ஆண்டவனை வேண்டுகிரேம்.



# நானறிந்த நாயுடு

(எஸ். காசிவிஸ்வநாதன் செட்டியார், பி. ஏ.)

---

நான் சிறுவனாக இருக்கும்பொழுது எங்கள் வீட்டார் ஸ்ரீமான் பி. எஸ். ஜி. ஆர் அவர்களைக் குறிக்கும் பொழுது, "கம்பெனி சின்னண்ணன்" என்று தான் சொல்லுவது வழக்கம். பொதுவாகப் பூளைமேட்டில் அப் பெயர் சொன்னால்தான் நாயுடு அவர்களை எளிதில் தெரியும். கம்பெனி என்றால் அக்காலத்தில் பஞ்சாலை (ஜின்னிங் பேக்டரி) யைக் குறித்தது. ஊருக்குச் சிறப்பாக ஒரே பேக்டரி இருந்தபடியால் கம்பெனியென்பது சின்னண்ணனுக்கே சிறந்த அடைமொழியாக வழக்கத்தில் வந்தது. அதிலும் அவர் அக்கம்பெனிக்கு மேனேஜராக இருந்து வந்ததால் மேனேஜர் சின்னண்ணன் என்றும் சொல்லுவதுண்டு.

1924-ல் சர்வஜன உயர்தரப்பள்ளி ஆரம்பிக்கப்பட்டது. அப்பொழுது அதற்கு ஒரு மாணவர் விடுதியும் இணைக்கப்பட்டது. ஆரம்பத்தில் அவ்விடுதிக்குக் காலஞ்சென்ற எங்கள் சிறிய தகப்பனார் ஆர். எம். பழனியப்ப செட்டியார் அவர்கள் காப்பாளராக இருந்து வந்தார்.

காப்பாளருக்கும் மேனேஜருக்குமிடையே அடிக்கடி நான் தூது சொல்லுவதுண்டு. அப்பொழுதிருந்தே நான் சின்னண்ணன் அவர்களிடம் நெருங்கிப் பழக வேண்டியவனாயிற்று. எந்த முறையில்? தந்தை தனயன் என்ற முறையில்.

அக்காலத்தில் விடுதியின் மாணவர்களும் காப்பாளரும் மேனேஜரும் பழகி வந்த தன்மையை நினைக்கும் போது உள்ளம் கிளர்ந்தெழுகின்றது. விடுதியின் மாணவர்களைத் தமது குழந்தைகளாகப் போற்றி வளர்த்தனர். எல்லாம் ஒரு குடும்பம் போன்றிருந்தது. விடுதி மாணவர்க்குற்ற துன்பங்களை தம் குடும்பக் கவலையாகக் கருதி வந்தனர். காப்பாளரும் மேனேஜரும் அண்ணன் தம்பிகளாகப் பழகி வந்தனர். பள்ளியையும் விடுதியையும் தமக்குள் பங்கு போட்டுக்கொண்டு நிர்வாகம் நடத்தி வந்தார்கள். பிறகு எதிர்பாராத வண்ணம் எங்கள் சிறிய தகப்பனார் இறக்கவே நாயுடு அவர்கள் தனக்கு ஒரு கை ஒடிந்து போய் விட்டதாகவே நினைத்து வந்தார். என்னிடம் அதிகப் பற்றுதல் காட்டி வந்தார். எனது கல்வியைப் பற்றியும், பிற்கால வாழ்க்கையைப் பற்றியும் அடிக்கடி வினவி வந்தார்.



விடுதிப் பிள்ளைகளை நன்கு கவனித்துக்கொள்ள திரு. பழனியப்ப செட்டியார் அவர்களை நியமித்தபோதிலும், தாமும் சேர்ந்து கவனித்துக்கொண்டாலன்றி, மனவமைதி கொள்ளமாட்டார்.



பி. எஸ். ஜி. கைத்தொழிற்பள்ளி விடுதிக்கு திரு. வி. ராமகிருஷ்ண ஐ. சி. எஸ்., அவர்களால்
அஸ்திவாரக்கல் நாட்டப்பட்டபோது எடுத்த படம். 24—3—'44.

முகமலர்ச்சி என்பது அவருக்கு ஓர் அணிகலமாக விளங்கியது. தனது இனிய சுறுக்கமான பேச்சுக்களால் யாவரையும் வசீகரிக்கக்கூடிய சக்தி அவரிடம் பெரிதும் காணக்கிடந்தது. சில சமயங்களில் 'கோடிட்ட விடங்களில் பூர்த்தி செய்க' என்ற மாதிரி வார்த்தைகளை முடிக்காமலேயே கேட்பவர்களே சந்தர்ப்பத்திற் கேற்றவாறு வார்த்தைகளைப் போட்டு வாக்கியத்தை முடித்து அர்த்தம் செய்து கொள்ளட்டுமென்று பேசுவார். தான் சொல்ல வேண்டிய கடுமையான சொற்களைச் சொல்லாமலேயே பிறர் தெரிந்து கொள்ளட்டுமென்று விட்டு விடுவார். இம்மாதிரி பேசுவது கற்றறிந்த புலவருக்கும் எளிதில் அமையாது.

பூளைமேட்டின் தற்கால வாழ்க்கைக்கும் பிற்கால முன்னேற்றத்திற்கும் அஸ்திவாரமாக நின்றது - நிற்பது - இனி மேலும் நிற்கப்போவது சர்வஜன உயர்தரப் பள்ளியே யாகும். இதனை யாரம்பித்து ஊராரின் ஒத்துழைப்புடன் கட்டிடத்தை நிறுவி தனது வாழ்நாள் முழுதும் அதற்கு மேனேஜராக இருந்து அதைச் சிறப்புடன் நிர்வகித்து வந்த ஒரு காரியமே நாம் அவருக்கு ஞாபகார்த்த மண்டபம் ஏற்படுத்துவதற்குப் போதுமானதாகும்.

உயர்தரப்பள்ளி மட்டும் ஏற்படுத்தி விட்டு விட்டால் பத்தாவது படித்துவரும் மாணவர்களுக்கு பிற்கால வாழ்க்கையில் என்ன பலன் அளிக்கும்? அதனால் தொழிற் கல்வியும் அவசியமென்பதை யுணர்ந்து பி. எஸ். ஜி. தர்மஸ்தாபன கைத்தொழிற்சாலையில் பலவித தொழிற் கல்வியையும் ஆரம்பித்து வைத்தார். வெறும் கோட்பாடுகளை மட்டும் எடுத்துச் சொல்லாமல், நடைமுறையில் எப்படிச் செய்வதென்றும் ஒவ்வொன்றையும் விளக்கமாக எடுத்துக்காட்டி வந்தார். நடைமுறையில் செய்யத்தகாதனவற்றைப் பற்றிப் பேசவும் இசைய மாட்டார்.

அன்றியும் அவர் கடைசி காலத்தில் செய்ய வேண்டுமென நினைத்திருந்தது ஒரு நூல் நிலையம் ஏற்படுத்தி அதன் மூலம் மக்களை அறிஞர்களாக்க வேண்டுமென்பது அவருடைய நுண்ணிய ஆராய்ச்சிக்கும், எதிர்காலத் திட்டம் வகுக்கும திறமைக்கும் இது ஒன்றே ஒப்பற்ற சான்றாகும்.

பழைய மாணவர் சங்கம் ஏற்படுத்த வேண்டுமெனப் பன்முறையும் என்னிடம் கூறியுள்ளார். பள்ளியை நல்ல முறையில் நடத்த பழைய மாணவர்கள் ஊக்கமுடன் முன்வர வேண்டுமென்றும், நாளடைவில் பள்ளியின் நிர்வாகத்தையே மேற்கூறிய சங்கத்திற்கு ஒப்புவிக்கத்தான் திடசித்தம் கொண்டுள்ளதாகவும் அதற்காக எத்தகைய உதவி வேண்டுமானாலும் அவர் செய்து கொடுப்பதாகவும் என்னிடம் இறுதிக் காலத்தில் கூறியுள்ளார்.

இப்பேர்க் கொற்ற நம் அருமைத் தந்தையாருக்கு - பூளைமேட்டை பூளைமா நகராக்கி வைத்த புண்ணியருக்கு - அந்நகர வாசிகளும் மற்றும் அவருடன் பழகிய நண்பரும் சேர்ந்து தகுந்த முறையில் ஞாபகார்த்த மண்டபம் அமைப்போமாக!

# ஓ தருமனே!

(வித்துவான் வே. சீனிவாசலு சர்வஜன உயர்பள்ளி.)

---

அந்தோ! தருமனே! அறநெறி அறிந்திலே;
முந்தா அறத்தினை முழுதுற வளர்க்கும்
எந்தையின் ஆருயிர் இரங்காக் கவர்ந்தனை;
தருமத் தாபனத் தந்தையின் ஆருயிர்
உருவறக் கவர்ந்தோய்! உன்னையும் தருமனென்று
உலகம் சொல்லல் ஒக்குமோ! ஒக்குமோ!!
தருமா சனத்தில் அமர்ந்து தரணியில்
வருமா சனத்தின் மாத்துய ரறிந்து
ஒருமா சின்றிக் காப்பையென் றுரைப்பர்;
அந்தோ! தருமனே! அங்ஙனம் காத்தையோ?
ஆயிரம் ஆயிரம் மக்கள் அவனியில்
மேயிரும் அகக்கண் பெற்று விளங்க
பாயிரும் பள்ளி பலப்பல நிறுவிய
மாயிரும் பெரியோன் மன்னுயிர் கவர்ந்தனை;
உண்டியும் உறையுளும் உவப்புடன் பெற்று
கொண்ட பேரின்பில் குலவத் தொழில்பல
கண்டு அவற் கருளிய காருண்ய மூர்த்தியின்
மண்டிசைப் புறவுடல் மண்ணில் சிதைத்தனை;
அந்தோ! தருமனே! இனியென் செய்குவாய்?
நந்தா விளக்காம் நாயுடு புகழுடல்
சிந்தையில் என்றும் திகழ்வது காண்பாய்;
வந்தநன் மொழிகளில் வளர்வது காண்பாய்;
சந்ததம் தக்கோர் செவிகளில் காண்பாய்;
அண்ணலன் இன்னுயிர் அவனியில் எங்கும்
எண்ணரும் ஆற்றலில், அறிவினில், எழிலினில்,
திண்மையில், ஆண்மையில், செம்மையில், பொறுமையில்,
உண்மையில் கலந்தே உவந்து நிற்குவதை
கண்மையில் காண்குவை காண்குவை தருமனே.



# CONTENTS

# திரு. பி. எஸ். ஜி. அரங்கசாமி நாயுடு





மேனேஜிங் டிரஸ்டி, பி. எஸ். ஜி. அறநிலையம்,
மேனேஜிங் ஏஜண்டு :—
ஸ்ரீ ரங்க விலாஸ் மில்ஸ், கோயமுத்தூர் பயனீர் மில்ஸ், குமரன் மில்ஸ்.
புரோப்ரைட்டர், கண்டமநாயக்கனூர் ஜமீந்தாரி, மதுரை.

# FOREWORD

It was without the slightest anxiety that we undertook to edit the Memorial Volume on the late Dewanbahadur P. S. G. Rangaswamy Naidu. The reason is obvious. What difficulty or doubt can there be in getting articles, elegies and other contributions on such an extra-ordinary man as the Dewanbahadur Naidu? If extra-ordinary he was, was it chiefly due to the amount of wealth that he amassed during his life-time?

No, not at all. There is many a rich man, who lives an obscure life and dies a still-more obscure death. But the life and death of the Dewanbahadur are both marked and known — the reason being the objectives he had in mind, the attitudes he developed, the principles he followed, the deliberations he undertook, the difficulties he underwent, the efforts he made and above all the will-power with which he was naturally gifted.

That he lived a life of renown is testified by the achievements he had made during his life-time. That he died not an obscure death is well illustrated by the charitable disposition of his sons Messrs. G. R. Damodaran and brothers who not only follow the footsteps of their illustrious father, but also are endeavouring to fulfil his unfulfilled desires and aims on the path of charity.

No less credit can be given to his brothers Messrs. P.S.G. Venkataswamy Naidu and P. S. G. Ganga Naidu in this line, though of course this is not the suitable place for it. Both the sons and brothers whom the Dewanbahadur has left behind, would certainly strive to step into his shoes.

So, it is but fitting that the Old boys' Association decided to publish a Souvenir Volume on the late Dewanbahadur. On behalf of the association we wish to express our heartfelt thanks to all those who have sent in their contributions to make this volume the success that it is.

But we have one more task to do — that of dedicating this volume. To whom are we to dedicate this volume?

We dedicate this volume to the sons M/s. G. R. Damodaran and brothers and to the loving brothers Messrs. P.S.G. Venkataswamy Naidu and P.S.G. Ganga Naidu of the late Dewanbahadur.

In so dedicating, we are sure that the persons to whom this is dedicated, will feel proud of the departed soul. We share their feeling of pride, as we have been sharing their grief.

We are thankful to the P. S. G. R. Memorial Committee for not only having entrusted us with the publication of this volume, but also encouraging us in all possible ways.

Our thanks are also due to M/s. P. S. G. Press who are responsible for the get-up and neat execution of this volume.

EDITORS.



# A Born Organiser

(Dr. C. R. Reddy)

Mr. P. S. G. Rangaswamy Naidu, and the entire community of which he was an honoured and distinguished member, might rightly be regarded as the makers of modern Coimbatore, both materially and morally. He was a pioneer, like some of his friends and relatives, in the field of industrial enterprise.

These enterprises cover a wide field. The mills, factories, engineering shops and schools he started, all bear impress of a born organiser and a practical man of affairs. He never lost himself in the clouds. He was an idealist, but an idealist that knew how to take realities into account and so fashioned his institutions as to make them workable and efficient. He looked towards the sky but walked warily and firmly on the earth.

In India, idealism, more often than not, stands for objectives out of tune with historical developments and conditions of actual life. Mr. Rangaswamy Naidu, while an idealist in the sense that he tried to achieve big things for the industrial and intellectual progress of the country, knew how to harmonise them with the needs and requirements of the times and organise so that there should be no failure in actual functioning and fearful miscarriages.

The Coimbatore Kammas are an asset to the country. If they know how to make money, they also know how to spend it without wasting i. e., to re-invest for furthering the development of educational, industrial and commercial organisations.

I fold my hands in reverence to Mr. Rangaswamy Naidu, a true benefactor of our country, a man unostentatious in his life and ways, and yet a most impressive character, of tireless will and vast organising capacity.

# A GREAT ENTREPRENEUR

Dr. B. V. NARAYANASWAMI NAIDU,
M. A., Ph. D., B. Com., BAR-AT-LAW,
MEMBER, INDIAN TARIFF BOARD.)

---

The name of Sri. P. S. G. RANGASWAMY NAIDU is a celebrated one in the Indian Industrial World. A great entrepreneur with a tremendous drive and piercing imagination, he carved out a permanent niche in the history of industrialisation in South India. The vastness of his industrial ventures is only matched by his munificent gifts and charities.

I have very great pleasure in acceding to the request of the P. S. G. Rangaswamy Naidu Memorial Committee in paying my mead of tribute to this great industrialist and philanthropist of Southern India.



